அநாதிநம.

—o—

# தேம்பாவணி

## இரண்டாங் காண்டம்.

—⁂—

வீரமாமுனிவர்

அருளிச்செய்த

# இக்காப்பியம்

அவரது கையெழுத்துப் பிரதிக்கொப்ப

மூன்றாவது பதிப்பிக்கப்பட்டது.




புதுவை,

மாதாக் கோவில் அச்சுக்கூடம்.

Mission Press, Pondicherry.

—o—

1927.

மின்றி அவர்களைத் திருநெல்வேலி நகரத்திற்குக் கொணர்ந்து சிறையில் இடுவித்தார். அச்சிறைக்கூடம் இருந்த தெரு இப்போதும் காவற்புரைத்தெரு என்னும் பெயரால் வழங்கி வருகிற தென்று சொல்லுகிறார்கள்.

சிறைப்பட்ட தீக்ஷிதரும் பிறரும் தம்முடைய வினையை நினைந்து நொந்து வருந்தினர். அவர்கள் சிறைப்பட்டதனால் தமக்கு இழிவு உண்டாயிற்றென்று வருந்தவில்லை; குழைக்காதரைப் பிரியும் காலம் நேர்ந்ததே என்பதை நினைந்தே மிகவும் இரங்கி நைந்தனர்.

ஒவ்வொரு நாளும் நாராயண தீக்ஷிதர் குழைக்காதரையும், நம்மாழ்வாரையும் சேவிக்கும் இயல்பினர். ஊணும் உறக்கமும் ஒழிந்தாலும் இந்தச் சேவையைத் தவறாமற் புரிந்து வந்தார். அத்தகையவருக்குச் சிறைவாசம் பெருந்துன்பத்தை அளித்தது. 'நாம் செய்த பழவினைப்பயனே இங்ஙனம் வந்து சேர்ந்தது. குழைக்காதர் நமக்கு விதித்த தண்டனை இது போலும். மனிதர்களுடைய மனத்தைக் குழைக்கும் வகை நாம் அறியோம். அதை அப்பெருமான் அறிவார். அதனால் அவரை நோக்கிக் கதறி முறையிடுதலே தகுதியான செயல். எங்கும் செவியுடைய அவர் நம் முறையீட்டைக் கேட்பார். சூரியன் வானத்திலிருந்தாலும் பூமியிலுள்ள தாமரையை மலர்த்துகின்றான். வானிலுள்ள சந்திரன் பூவுலகிலுள்ள குமுதமலரை மலர்த்துகின்றான். அவ்வாறே நாம் எங்கே இருந்தாலும் மகரநெடுங்குழைக்காதர் நம்மை இரட்சிப்பார். *இனிப் பாமாலை சூட்டி அவரை நோக்கி உருகி வழிபடுதல் தான் வழி' என்று துணிந்தார்.

இங்ஙனம் துணிந்து குழைக்காதர் விஷயமாக ஒரு நூல் செய்யத் தொடங்கினார். ஒவ்வொரு நாளும் சில செய்யுட்களைப் பாடித் திருப்பித் திருப்பி அவற்றைச் சொல்லி உருகிப் பிரார்த்திக்க ஆரம்பித்தார். அந்த நூலே இப்பாமாலை ஆகும். அவருடன் இருந்தவர்களும் சில செய்யுட்களை இயற்றத் தொடங்கினார்கள்.

தீக்ஷிதர், நூலைத்தொடங்கும்போது வழக்கம்போல நம்மாழ்வாருக்குக் காப்புக் கூறினார். அக்காப்பிலேயே, "அடியேங்க டுன்ப மகல்வதற்கா வந்த் நான்மறையின், முடியே பரவுங் குழைக்காதர் மீதுமுத்தமிழாற், படியேழு மோங்கியே பாமாலை யீரைம்பது" என்று சங்கற்பம் செய்துகொண்டார். அடுத்தபடி கருடனைத்

* செய்யுள், 34.

# இப்புத்தகத்திலடங்கியவை.

பக்கம்.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 18 | லாயிற்று, | லாயிற்று. |
| 7 | 7 | தொழுது, | தொழுது |
| 25 | 6 | நாற்றமும் வண்மை | நாற்றமுமொண்மை. |
| 28 | 34 | ௩) | ௩.) |
| 29 | 4 | ரல்ல | ரல்லா |
| ,, | 27 | மரை | மறை |
| 37 | 4 | மரனும் | மானும் |
| 49 | 34 | ப்திற் | பதிற் |
| 56 | 19 | 6. மத | மத |
| 58 | 14 | தகாஅத்த காஅ | தகாஅக் தகாஅ |
| 60 | 22 | சூள்,' | சூள்' |
| 70 | 6 | லடுபோ | லடும்போ |
| 80 | 4 | 2 | * 2 |
| 94 | 32 | ௪௩. | ௩௪. |
| 122 | 27 | யாகலின் ? | யாகலின், |
| 134 | 27 | செறி | செறி |
| 189 | 11 | ஓன்றல | ஓன்றல, |
| 201 | 30 | தமிழ்து | தமிழது |
| 203 | 40 | 112. | 112,133. |
| ,, | 41 | 2.[133. | 2. |
| ,, | 45 | சுனை, 95. | சுனை, 56; |
| 212 | 35 | பாணடில் | பாண்டில் |
| 213 | 45 | பின்பினை, | பின்பின், |

கணபதி துணை

# முகவுரை.

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே."

(திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.)

"ஆவியந் தேன்றல் வேற்பி னகத்தியன் விரும்புந் தேன்பா
ஞவலந் தீவம் போற்றி நாவலந் தீவந் தன்னுண்
மூவர்கட் கரியா னிற்ப முத்தமிழ்ச் சங்கத் தேய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநன் ஞடு போற்றி."

பரிபாடலென்பது, கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப் புலவர்கள் அருளிச்செய்த *எட்டுத்தொகையுள் ஐந்தாவது; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்து பொருள்களின் இயற்கையழகுகளை நன்குதெரிவிப்பது; மதுரை, வையையாறு, திருமருதந்துறை, திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலைமலையென்பவற்றின் பண்டைக்காலநிலைமைகளையும் அக்கால நாகரிகமுறையையும் வைதிக ஒழுக்கங்களையும் தெய்வவழிபாட்டுமுறையையும் பிறவழக்கங்களையும் தமிழ்நாட்டின் வரலாறுகள் சிலவற்றையும் செவ்வனே தெரிந்துகொள்ளுதற்குக் கருவியாகவுள்ளது; பதினோராம் பாடலின் முதலிற் கூறப் பெற்றுள்ள கோள்களினிலைமை கடைச்சங்கத்தார் காலத்தை ஒருவகையாகப் புலப்படுத்தும். "நற்றிணை நல்ல" என்னும் வெண்பாவில், 'ஓங்கு பரிபாடல்' எனப் பாராட்டப் பெற்றிருத்தலால் இந்நூலின் உயர்வு நன்கு விளங்கும்.

இந்நூல், பரிபாடலென்னும் பாவால் தொகுக்கப் பெற்றமையின் இப்பெயர்பெற்றது; பரிபாட்டெனவும் வழங்கும்; இஃது,

* எட்டுத்தொகை இன்னவையென்பதை, "நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல், கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென் றித்திறத்த வெட்டுத் தொகை" என்னும் வெண்பாவாலுணர்க; இவை எண்பெருந்தொகையெனவும், எண்கோவையெனவும் வழங்கும்.

எண்வகை வனப்பினுள் இழைபென்பர் பேராசிரியர் (தொல். செய். சூ. 242.) பரிபாடலாவது * இசைப்பாவென்றும் † பரிந்து வருவதென்றும் கூறப்படும்; பரிந்து வருவது - ஏற்றுவருவது.

அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள் நான்கனுள் இன்பத்தையே பொருளாகக்கொண்டு கடவுள்வாழ்த்து, மலைவிளையாட்டு, புனல்விளையாட்டு முதலியவற்றில் இப்பாடல் வருமென்பர் பேராசிரியர் (தொல். செய். சூ. ௧௨௧); தெய்வ வாழ்த்து உட்படக் காமப்பொருள்குறித்து உலகியலேபற்றிவருமென்பர் நச்சினார்க்கினியர் (தொல். அகத். சூ. ௫௩); தெய்வமும் காமமும் பொருளாக வருமென்பர் யாப்பருங்கலவிருத்தி யுடையார் முதலியோர்.

தொல்காப்பியச்செய்யுளியலிலுள்ள "நெடுவெண்பாட்டேகுறு", "பரிபா டல்லே", "கொச்சக மராகம்", "சொற்சீ ரடியும்", "கட்டுரைவகையான்", "உருட்டுவண்ணம்" என்னும் சூத்திரங்கள் முதலியவற்றாலும் அவற்றின் உரைகளாலும் பரிபாடலின் இலக்கணம் நன்கு விளங்கும்; "பரிபாட்டெல்லை" என்னும் சூத்திரம் இப்பாடல்களின் சிற்றெல்லை ௨௫ அடியென்றும் பேரெல்லை ௪00 அடியென்றும் தெரிவிக்கின்றது.

"அன்பினைந்திணை" (இறை. சூ. ௧) என்பதனுரையிலும், "தரவின்றாகி" (தொல். செய். சூ. ௧௪௧) என்பதனுரையிலும் ௧௫0 - கலியும் ௭0 - பரிபாடலும் என வரையறைசெய்திருத்தலால் இந்நூல் எழுபதுபாடலையுடையதென்றும்,

"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் ‡காடுகாட் கொன்று - மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்"

---

* இப்புத்தகம் ௫ - ஆம் பக்கத்துள்ள 'பரிபாட்டாவது இசைப்பாவாதலால்' என்பது முதலியவற்றையும், 'கலியும் பரிபாடலும்போலும் இசைப்பாட்டாகிய செந்துறைமார்க்கத்தன' (தொல். செய். [illegible]. 242 - பேர்) என்பதையும் நோக்குக.

† "பரிந்தபாட்டு பரிபாட்டெனவரும்; அஃதாவது ஒருவெண்பாவாகி வருதலின்றிப் பலஉறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப்பெறுவது" (தொல். செய். சூ. 112 - இளம்); "பரிபாடலென்பது பரிந்து வருவது; அஃதாவது கலியுறுப்புப் போலாது பலவடியும் ஏற்றுவருவது" (தொல். செய். சூ. 118 - பேர்); "பரிபாடலென்பது பரிந்துவருவது; அது கலியுறுப்புப்போலாது நான்கு பாவானும் வந்து பலவடியும் வருமாற்றானிற்குமென்றுணர்க" (தொல். செய். சூ. 118 - ந.)

‡ 'கார்கோளுக்கு' என்றும் பிரதிபேதமுண்டு; கார்கோள்-கடல்.

என்னும் வெண்பாவால் அப்பாடல்களுள், அ, திருமாலுக்கும், ௩௧, முருகக்கடவுளுக்கும் க, காடுகிழாளுக்கும் உ௯, வையை யாற்றிற்கும் ச, மதுரைக்கும் உரியனவென்றும் தெரிகின்றன.

இப்பாடல்களுள், முதலிலிருந்து தொடர்ச்சியாகவுள்ள இருபத்திரண்டு பாடல்களும், பழைய உரைகளிற் காட்டப்பட்ட மேற்கோள்களிலிருந்து கிடைத்த இரண்டு முழுப்பாடல்களும், சில உறுப்புக்களும், புறத்திரட்டு முதலியவற்றிலிருந்துகிடைத்த சில உறுப்புக்களுமே இப்புத்தகத்திலுள்ளன.

இவ்விருபத்திரண்டனுள், திருமாலுக்குரியவை ஆறு (க, உ, ௩, ச, க௩, கரு); முருகக்கடவுளுக்குரியவை எட்டு (ரு, அ, ௯, கச, கஎ, கஅ, க௯, உக); இப்பதின்மூன்றும் கடவுள் வாழ்த்து; வையைக்குரியவை எட்டு (௬, எ, க0, கக, கஉ, க௬, உ0, உஉ); கடவுள் வாழ்த்துள் திருப்பரங்குன்றமும் திருமாலிருஞ்சோலைமலையும் கூறப்பெற்ற பாடல்களில் மலைவிளையாட்டும், வையைக்குரியபாடல்களிற் புனல்விளையாட்டும் வந்துள்ளன.

இவற்றின்பின்னே பதிப்பிக்கப்பெற்ற பகுதிகளுள், திருமாலுக்குரிய முழுப்பாடல் ஒன்று; வையைக்குரிய முழுப்பாடல் ஒன்று; உறுப்பு ஒன்று; மதுரைக்குரிய உறுப்புக்கள் ஏழு; சில உறுப்புக்கள் இன்ன வகையைச் சார்ந்தனவென்று விளங்கவில்லை.

"இருமை வகை தெரிந்து" (குறள், பரி.) என்பதன் விசேடவுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற "தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன், பரிமா நிரையிற் பரந்தன்று வையை" என்பது பரிபாடற்பகுதியென்று நுண்பொருண்மாலையால் பின்பு தெரியவந்தது.

முற்றுமுள்ள கையெழுத்துப் பிரதிகளில் ஒவ்வொரு தொகை நூலின் இறுதியிலும் தொகுத்தோர்பெயரும் தொகுப்பித்தோர் பெயரும் அடிகளின் சிற்றெல்லை பேரெல்லைகளும் பெரும்பாலும் வரையப்பெற்றிருக்கும்; இந்நூல் முற்றுமுள்ள பிரதி அகப்படாமையால் அவற்றுள் ஒன்றும் புலப்படவில்லை.

கிடைத்த பிரதிகளில் இரண்டாவது முதலிய உ0 - பாடல்களுக்கு மட்டுமே ஒவ்வொரு பாடலின் பின்னும் துறையும், இயற்றிய ஆசிரியரது பெயரும், அதற்கு இசைவகுத்தோர் பெயரும், அதற்குரிய பண்ணின் பெயரும் எழுதப்பெற்றிருந்தன; ஆனாலும் க௩ - ஆம் பாடலுக்கு இசைவகுத்தோர்பெயர் காணப்படவில்லை.

இரண்டாவது முதலிய பதினொன்றின்பண் பாலையாழென்றும், கஉ - ஆவது முதலிய ஐந்தின்பண் நோதிறமென்றும், கஎ - ஆவது முதலிய நான்கன் பண் காந்தாரமென்றுமிருத்தலை உற்று நோக்கும்பொழுது இந்நூற்பாடல்கள் தேவாரங்கள் போலவே பண்டைக்காலத்தில் பண்முறையால் தொகுக்கப்பெற்று உரிய பண்களுடன் பாடப்பெற்று வந்தனவென்று தெரிகின்றது; "எழுத்துரு வொக்கும், பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்" (பக்கம், உகஉ) என்னும் உரைச்சிறப்புப்பாயிரப்பகுதியும் இக்கருத்தை வலியுறுத்தும்; பிற்காலத்திற்பண்ணோடுபாடும் வழக்கம் இல்லாமற் போனமையின் அம்முறையை இப்போது சிறிதும் தெரிந்துகொள்ள இயலவில்லை.

திருவாவடுதுறையாதீனத்துப்பிரதியொன்றும் ஆழ்வார் திருநகரி ஸ்ரீ. தே. லக்ஷ்மணகவிராயரவர்கள் வீட்டுப்பிரதிகள் இரண்டும், தருமபுரவாதீனத்திலிருந்து கிடைத்த "பாயிரும் பனிக்கடல்" என்னும் ரு-ஆம் பாடல் மட்டுமெழுதிய இரண்டு ஒற்றை ஏடுகளுமே இந்நூற் பரிசோதனைக்குக் கருவியாக இருந்தன.

இவற்றுள், முதற்பிரதி முதலும் இறுதியுமின்றி மிகச் சிதைந்துபோயிருந்தமையால் பார்த்தவுடன் இன்னநூலென்று புலப்படவில்லை; பிரித்துப் பார்த்தபோது, "வண்ணவண் டின்குரல் பண்ணைபோன் றனவே" என்ற பகுதியைக்கண்டு, இலக்கணக் கொத்தில் மேற்கோளாக வந்திருத்தலை யறிந்து, இது பழைய நூலாக இருக்கவேண்டுமென்றுமட்டும் எண்ணினேன்; பிறகு திருமுருகாற்றுப்படையை நச்சினார்க்கினியருரையுடன் ஆராய்ச்சி செய்து வருகையில், "அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி" (அடி, ருஅ) என்பதன்விசேடவுரையில், முருகக்கடவுளின் திருவவதார வரலாற்றைக் கூறி, "இதனைப் பாயிரும் பனிக்கடலென்னும் பரிபாடற் பாட்டானுணர்க" என்றிருந்ததையும், இப்புத்தகத்தில் அம்முதற்குறிப்புள்ளபாடல் அவ்வரலாற்றுடன் ஐந்தாவதாக இருந்ததையுமறிந்து இந்நூல் பரிபாடலென்றும், "நற்றிணை நல்ல குறுந்தொகை" என்னும் வெண்பாவால் இஃது எட்டுத்தொகையுள் ஐந்தாவதென்றும் தெளிந்து கொண்டேன்.

இந்தப்பிரதியில் முதற்பாட்டிறுதியின் உரை தொடங்கி கக-ஆம் பாடலின் ருஅ - ஆம் அடியின் ".. ரைவரையிலுள்ள பகுதிகள் மட்டுமே இருந்தன; நெடுநாள்வரையில் முதலிலிருந்த

உரைக்குரியபாடல்கிடைக்கவில்லை; பின்பு, ''கட்டுரைவகையின்'' (தோல். செய். சூ. கசஎ) என்பதனுரையில் இளம்பூரணவடிகள் மேற்கோளாகக்காட்டிய ''ஆயிரம் விரித்த'' என்னும் பாடலின் இறுதிக்கு இவ்வுரைப்பகுதி பொருளாயிருத்தலைக்கொண்டு அதுவே இந்நூலின் முதற்பாடலென்று நிச்சயிக்கப்பெற்றது.

ஆழ்வார் திருநகரிப் பிரதிகளிரண்டிலும் உ-ஆவது முதல் உஉ-ஆவது இறுதியாகவுள்ள பாடல்கள் உரையுடன் இருந்தன; ஒன்று மற்றொன்றைப்பார்த்து எழுதப்பெற்றதாதலின் அவ்விரண்டற்கும் வேறுபாடு சிறிதும் காணப்படவில்லை; ஆனாலும் ஏட்டின் தேய்வு, ஒடிவு, இராமபாணத்துளை முதலியவற்றால் ஒரு பிரதியிற் சிதைந்துபோன எழுத்துக்களுட் சில சில மற்றொருபிரதியிற் காணப்பட்டன; உஉ - ஆம் பாடலின் பிற்பகுதியும் அதற்குரிய உரையின் முற்பகுதியும் உள்ள ஓரேடு இரண்டு பிரதிகளிலும் இல்லை; இக்குறையைத் தீர்த்துக் கொள்ளுதற்கு எவ்வளவோ இடங்களுக்குச்சென்று பலவருடங்களாகத்தேடியும் பிரதிகள் கிடைக்கவில்லை.

இந்நூல் உரைப்பிரதிகளில் பாடல்களுக்குத் தரவுமுதலிய உறுப்புக்கள் வரையப்படவில்லை; தொல்காப்பியவுரையில் மேற்கோள்களாக வந்தபாடல்களுள் ''ஆயிரம் விரித்த'', ''வானெறிழிவி'' என்பவற்றிற்கு மட்டும் இளம்பூரணவடிகள் முதலியோரால் உரிய இடங்களில் உறுப்புக்கள் வரையப்பெறறிருந்தமையின் அவ்விரண்டு பாடல்கள் மட்டும் அங்ஙனமே பதிக்கப்பெற்றன.

உரைக்குரிய மூலத்தின் இடங்களை வருத்தமின்றி அறிந்து கொள்ளுதற்காகவே மூலங்களுக்கு அடியெண்கள் ஒருவாறு வரையறை செய்து அமைக்கப்பெற்றன.

ஒப்புமைப்பகுதிகளும், பிறவுரையாசிரியர்கள் மேற்கோள்களாக எடுத்தாண்டிருக்கும் இந்நூற்பகுதிகளும், இவ்வுரையில் விளங்கிய மேற்கோள்களுள்ள இடங்களும், இன்றியமையாக் குறிப்புக்களும் ஆங்காங்குப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன; உக - ஆம் பாடலின் ൩ - ஆம் அடியிலுள்ள, 'தைப்பமை சருமத்து' என்பது சான்றோர் செய்யுட்கண் வடசொற்சிதைந்து இயைந்ததற்கு உதாரணமாகக் காட்டப்பெற்றிருத்தல் (தோல். எச். சூ. ரு - ந; இ - வி. சூ. களரு) பின்பு தெரியவந்தது.

பின்னுள்ள இரண்டு மேற்கோள்களுக்குமட்டும் இடம் விளங்கவில்லை:

(i) ''நெட்டிலை வஞ்சிக்கோ'' (பக் - ௯௯)

(ii) ''அரக்கிறலி......ஐந்து'' (பக் - ௧௩௫.)

இப்புத்தகத்திலுள்ள அகராதியில் இந்நூல் மூலம் உரை இவற்றிலுள்ள சொற்களும் வாக்கியங்களும் விஷயங்களும், உவமைகளும் அடங்கியுள்ளன; விளங்குதற் பொருட்டு அவற்றுட் சிற்சில வெவ்வேறு விதமாகவும் இதில் அமைக்கப் பெற்றுள்ளன.

தலைச்சங்கத்தில் எத்துணையோ பரிபாடல்கள் இருந்தனவென்று இறையனாரகப்பொருளுரை முதலியவற்றால் தெரிந்தாலும் அவற்றுள் ஒன்றேனும் இப்போது கிடைக்கவில்லை; ஆயினும், பிற்காலத்தில் திருக்குருகைச் சடகோபாழ்வார் சந்நிதிக்கவிராயர் பரம்பரையிலிருந்த சிறந்தகவிஞரொருவரால் இயற்றப்பெற்றதாகத் தெரிகின்ற பாப்பாவினம் என்னும் நூலில் அவரியற்றிய நான்கு பரிபாடல்கள் காணப்படுகின்றன; அவற்றின்பின் தனித்தனியே எழுதப்பெற்றிருந்த அடியிலுள்ள குறிப்புக்கள் இந்நூலாராய்ச்சிக்குமிக உபயோகமாக இருந்தன:

''கருங்கடலுடுத்த'' என்னும் பாடலின் குறிப்பு.

''தொல்காப்பியனார், 'செப்பிய நான்குந் தனக்குறுப் பாக' என்று கூறவும் இப்பரிபாடலகத்து எருத்தென்பதோருறுப்பினையுங் கூட்டி ஐந்தாகக் கூறியதென்னையெனின், அஃதே! நன்று சொன்னாய்; 'தரவே யெருத்தே யராகங் கொச்சக, மடக்கியல் வாரமொ டைந்துறுப் புடைத்தே' என்பது அகத்தியமாதலின், எருத்தமென்பதனைத் தரவென்றொருசாராசிரியர் கூறவும் அகத்தியமுணர்ந்த ஒருசாராசிரியர் பாட்டிற்கு முகம் தரவாதலானும் எருத்தமென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராதலானும் அவ்வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடக்கவேண்டுமென்பதனானும் எல்லா நூலிற்கும் அகத்தியம் முந்துநூலாகலானும் அகத்தியனார் நோக்கத்தொடும் ஐந்துறுப்பாக்கினாரெனவுணர்க; அஃதாக; இதனுள், எண் விராயதென்னையெனின், ''கொச்சக வகையி னெண்ணொடுவிராஅ,யடக்கியலின்றி யடக்கவும் பெறுமே' என்பதனால் விராயதறிக; 'காமங் கண்ணிய நிலைமைத் தாகும்' எனவே அறத்தினும் பொருளினும் வாராதெனக்கூறிய பரிபாடலை இச்செய்யுளுடையார் வாழ்த்தியலாகக்கூறியதென்னையோவெனின், 'வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே' எனச் சிறப்புவிதி ஓதினமையான் நான்கு பாவினுள்ளும் பரிபாடல் வெண்பாயாப்பிற்றுதலாற் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறுமென்னுமுதனூலாசிரியர் நோக்கம்பற்றிச் சங்கத்தார் பரிபாடல் கூறியவகையாற் கூறினாரெனவுணர்க; 'ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை' என்னும் பரிபாடற் றரவின்பின் 'மாநிமலர் சினைஇய கண்ணை......நாவ லந்தண ரருமறைப் பொருளே' என்பது எருத்தம்; இதனை ஒருசாராசிரியர் ஆசிரியமென்றுங் கூறுவர்;''

''யாஅர்வாழ்வார் யாஅர் வாழ்வார்'' என்னும் பாடலின் குறிப்பு.

''இது, சங்கப்பாடலாகிய பரிபாடலுள், கடுவனிளவெயினனார் பாட்டாய மூன்றாவதாய்ப் பெட்டனாகனாரிசை பண்ணுப்பாலையாழாய 'மாஅயோ

யே மாஅயோயே' என்னும் பரிபாடல் போல எருத்தமும் கொச்சகமுமின் றி வந்த யரிபாடல்;''

"வேல்விழி யிணையென'' என்னும் பாடலின் குறிப்பு.

"இது சங்கப் பரிபாடலுள், 'கார்மலி கதழ்பெயல்...பூமலர்ந் தனவே' என்னும் பதினூலாம் பாட்டின் நடையதாய் அமைந்தது ;''

"விழுமியதிறத்துறை'' என்னும் பாடலின் குறிப்பு.

"இது, பரிபாடலுள், 'தொன்முறையியற்கையின்' என்னும் இரண்டாம் பாட்டினுறுப்புடை நடைத்தாயவந்தது.''

ஏட்டுப்பிரதிகள் தேடுகையிற்கிடைத்த சில குறிப்புக்களாலும், "கண்ணுதற் கடவுள்" (பக். உ௩உ) என்னும் உரைச்சிறப்புப்பாயிரத்தாலும், செந்தமிழ், ௬, எ, ௯, ௧௦-ஆம் தொகுதிகளிற் பதிப்பிக்கப்பெற்றுள்ள திருக்குறட்பரிமேலழகருரை நுண்பொருண்மாலையாலும் இந்த உரை பரிமேலழகரியற்றியதென்று தெரியவந்தது.

இந்தவுரை, பலவிடத்துப் பொழிப்புரையாயும் சிலவிடத்துப் பதவுரையாயும் சிலவிடத்துக் கருத்துரையாயும், சிறிதும் புலப்படாத சொற்களின் பழைய வடிவங்களைப் புலப்படுத்தியும், உரிய இடங்களில் இலக்கணக் குறிப்புக்களைப் பெற்றும், சிலவிடத்து மிக அழகான பதசாரத்துடன்கூடியும், விளங்காத சிலவற்றைத் தக்க தமிழ்நூல் மேற்கோள்களாலும் வேதம் உபநிடத முதலியவற்றின் கருத்துக்களாலும் விளக்கியும் மிக விரிவாக அமைந்துள்ளது; நுணுகி ஆராயின், திருக்குறளுரையிலும் இவ்வுரையிலும் ஒத்த கருத்துக்களும் ஆசிரியர் பரிமேலழகருடையகொள்கைகளும் பல காணலாகும்.

சீவகசிந்தாமணி முதலியவற்றைப் பதிப்பித்த காலங்களில் அவ்வப்பொழுது உபகரித்து எனக்கு ஊக்கமளித்துவந்தவர்களும் கொழும்பு நகரத்துப் பிரபுசிகாமணியுமாகிய கௌரவம்பொருந்திய ஸ்ரீமான், பொ. குமாரசாமி முதலியாரவர்கள், இந்நூலைப் பதிப்பித்து வெளிப்படுத்தும்படி முன்னம் எழுதி வற்புறுத்தியதுண்டு; அவர்கள் இப்பொழுது இல்லையேயென்ற வருத்தம் எனக்கு மிகுதியாக இருப்பினும் தமிழ்ப்பாஷாபிமானத்திற் சிறந்தவரும் அவர்களுடைய செல்வக்குமாரருமாகிய ஸ்ரீமான், டாக்டர். கு. ஸ்ரீகாந்த முதலியாரவர்களிடம் இப்புத்தகத்தைச் சேர்ப்பிக்கும்படி நேர்ந்ததில் அஃது ஒருவாறு மாறிற்று.

இந்நூல் ஏட்டுப்பிரதிகளைப் பார்த்துக் கடிதத்தில் முதலில் எழுதியவர், பல வருடங்களுக்கு முன் என்னிடம் படித்து

வந்த திருப்பெருந்துறை, அ. பொன்னுசாமிபிள்ளையென்பவர்; இது போன்ற பல உதவிகளை அன்புடன் பலவருடங்கள் செய்துவந்த அவர் இப்பொழுது இல்லாமை மிக்க வருத்தத்தைத் தருகின்றது.

இதனை ஆராய்ச்சி செய்யுங் காலத்தும் பதிப்பிக்கும் காலத்தும் மயிலாப்பூர் P. S. ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் பிரஹ்மஸ்ரீ, இ. வை. அநந்தராமையரவர்கள், சென்னை, இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைத் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி, ம, வே. துரைசாமி ஐயர் முதலியோர் வழக்கம் போலவே உடனிருந்து அன்புடன் செய்த ஒப்புநோக்குதல் முதலிய பேருதவிகள் தமிழகத்தால் மிகப்பாராட்டற்குரியன.

ஒரு பழைய நூலைப் பதிப்பித்தலைக்காட்டிலும் அதனை ஆராய்ச்சி செய்தல் காலப்போக்கையும் பொருட்செலவையும் மிக உண்டாக்குமென்பதை அறிந்து, நூற்பரிசோதனை செய்வதற்கு உடனிருந்து உதவி செய்பவர்கள் விஷயத்தில் எனக்குச் சிறிதும் கவலைஉண்டாகாதபடி ஸ்ரீ ஸேதுஸம்ஸ்தானாதிபதிகளும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தலைவர்களும் சென்னைச் சட்டநிரூபணசபை அங்கத்தினர்களுமான கௌரவம்பொருந்திய மஹாராஜராஜஸ்ரீ பா. இராஜராஜேசுவர ஸேதுபதிமஹாராஜா அவர்கள் பேரன்புடன் பொருளுதவி செய்து ஆதரிக்கின்றார்கள்; "தேவேந்த்ர தாருவொத் தாய் ரகு நாத சயதுங்கனே" என்று பாராட்டப்பெற்ற முன்னோர்களுடைய புகழைத் தங்கள் புகழாக ஆக்கிக்கொண்ட இவர்களைப் பாதுகாத்தருளும் வண்ணம் தமிழ்த்தெய்வத்தைப் பிரார்த்தித்தலன்றி என்னாற்செய்தற்குரியது வேறுயாதுளது?

இப்பதிப்பிற் காணப்படும் பிழைகள் என்னுடைய மறதி, அயர்ச்சி முதலியவற்றால் நேர்ந்தனவென்றெண்ணிப் பொறுத்துக் கொள்ளும்படி அன்பர்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

ஒன்றுக்கும் பற்றாத என்னை இம்முயற்சியிற் புகுத்தி இந்த அளவிலாவது இந்நூல் வெளிவரும்படி செய்தருளிய திருவாலவாய்ப் பெருமான் பெருங்கருணையைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

"தியாகராஜ விலாஸம்"
திருவேட்டீசுவரம் பேட்டை,
சென்னை, 1-6-18.

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.

# பாடினோர் வரலாறு.

க. ஆசிரியனல்லந்துவனார்:—இவர் செய்தனவாக இப்பகுதியில் நான்கு பாடல்கள் (௬, அ, கக, உ0) உள்ளன. அவற்றுள் எட்டாவது முருகக்கடவுளுக்கும் ௬, கக, உ0 வையைக்கும் உரியன.

எட்டாம் பாடலில் திரிமூர்த்திகளும் ஏனைத்தேவர்களும் முருகக்கடவுளைத் தரிசித்தற்பொருட்டு வந்திருத்தலால் திருப்பரங்குன்றம் இமயமலையையும் அதிலுள்ள சுனை இமயமலையிலுள்ள சரவணப்பொய்கையையும் ஒக்குமென்றும் ஆடவரும் மகளிரும் மகப்பேறு முதலிய பயன்களைக் கருதிப் பலவகைக் காணிக்கைகளுடன் அக்குன்றத்தைச் சார்ந்து அவரை வணங்கிப் பலவகை வழிபாடுகளைச் செய்து வேண்டிய வரங்களைப் பெற்றுய்கின்றன ரென்றுங் கூறுதன்முகமாக அக்குன்றத்தின் பெருமையையும் அதிற்கடம்படியிற் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுளின் திருவருட் சிறப்பையும் பாராட்டியிருக்கும் பகுதியும், அக்குன்றின் வாழ்வையே தம்முடைய வாழ்வாகக் கருதி உள்ளமுருகி இவர் அதனை வாழ்த்தியிருக்கும் பகுதியும், பிறவும் அறிந்து மிக இன்புறற் பாலன. இவற்றை உட்கொண்டே, "சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேற், சீர்மிகு முருகன் றண்பரங் குன்றத், தந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை, யின்றீம் பைஞ்சுனை" (அகநா. ருசு) என மதுரை மருதனிளநாகனார்கூறினர்போலும்.

மற்றைப் பாடல்களில் மழைவளமும் வையைப் பெருக்கும் புதுநீர் விழவின்பொருட்டுப் பலர் தத்தமக்கேற்ற ஊர்திகளிலேறிக் கொண்டுவையைக்குக் கையுறைப் பொருள்களாக ஏந்திச்செல்லும் பொன்மீன் முதலியனவும் நீர் விளையாட்டிற்குக் கொண்டுசெல்லும் கருவிகளும் தெப்ப வகைகளும் சன நெருக்கமும் நீர் விளையாட்டும் பிறவும் கூறப்பெற்றுள்ளன. பரிபாடலைப்பெற்ற பெருமை வாய்ந்ததென கக-ஆம் பாடலில் இவர் வையையாற்றைச் சிறப்பித்திருத்தலும் அது * கடலொடு கலத்தலை உ0-ஆம் பாடலில் உவமை முகத்தால் தெரிவித்திருத்தலும் அறிதற்பாலன.

---

* ஸ்ரீ ஸேதுஸம்ஸ்தானத்திற் கீழ்கடலோரத்தில் ஆற்றங்கரையென்னு மூரிலுள்ள சத்திரம் வையைநதி கடலொடு கலக்குந் துறையில் ஸ்நானஞ் செய்ய வருவோர்க்குப் பண்டைக்காலத்தில் அமைக்கப்பெற்றதென்று கேள்வியுண்டு; மதுரைஜில்லா சரித்திரத்தாலும் இது தெரிகின்றது. திருவாதவூரர் புராணமுடையாரும் பரஞ்சோதிமுனிவரும் வையை கடலொடு கலவாமைக்குக் காரணங் கற்பித்தது, கால வடைவில் பாய்ச்சல் மிகுதியால், அது கடலொடு கலத்தல் தவிர்ந்ததை நோக்கிப்போலும்.

இவர் கலித்தொகையில் நெய்தற்கலியை இயற்றியவர்; அந்நூலில் ஐந்திணைக்குமுரிய கலிப்பாக்களைக் கோத்தவர்; இவை,

"பெருங்கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்
மருதனிள நாகன் மருத - மருஞ்சோழ
னல்லுருத் திரன்முல்லை நல்லந் துவனெய்தல்
கல்விவலார் கண்ட கலி"

என்னும் வெண்பாவாலும், "புரிவுண்ட" (கலி. கசஉ) என்பதனுரையிலும், "உரிப்பொருளல்லன" (தொல். அகத். சூ. கஈ) என்பதனுரையிலும் நச்சினார்க்கினியரெழுதியுள்ள வாக்கியங்களாலும் விளங்குகின்றன.

திருவள்ளுவமாலையிலுள்ள "சாற்றிய பல்கலையும்" என்னும் வெண்பாவை இயற்றியவரும் இவரே. மதுரை, திருப்பரங்குன்றம், இவற்றின் இடைவழி, வையையாறு, திருமருதந்துறையென்பவற்றின் இயற்கைகளையும் ஆங்காங்கு நிகழ்ந்த பலவகைச் செய்திகளையும் விளங்கக்கூறி யிருத்தலால் இவருடைய ஊர்மதுரையென்றும் "கடன் முகந்துகொண்ட" (அகநா. சஈ) என்பதை இயற்றியவரான மதுரையாசிரியனல்லந்துவனாரென்பவர் இவரேயென்றும் தோற்றுகின்றன.

உ. இளம்பெருவழுதியார்:—திருமாலுக்குரிய கரு-ஆம் பாடலை இயற்றியவர் இவர். இப்பாட்டில் எல்லா மலைகளுள்ளும் இருங்குன்றம் (திருமாலிருஞ்சோலை மலை) சிறந்ததென்று எடுத்துக் காட்டியிருக்கும் அழகும், சிலம்பாற்றால் அழகு பெற்றுள்ள அக்குன்றத்தின் வளமும் விரும்பி * அதிலெழுந்தருளியிருக்கும் கண்ணபிரானும் பலதேவரும் உருவத்தால் இருவராயினும் தொழிலால் ஒரு

* கண்ணபிரானையும் பலதேவனையும் இங்ஙனஞ் சேர்த்து ஒருங்கு பாராட்டியிருத்தல் இந்நூலிலுள்ள வேறு பாடல்களாலும் அறியலாகும்; "வாலுளை யுளைந்த வயக்கொளிர் பனைக்கொடிப் பாலனிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும், பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித், திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியும்", "வெள்ளுருக் கொழியாமல் வாய்வைத்த வளைபோலத், தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும், பொருவழு யவன்மார்பின் வெண்டாரோ லொளிமிக, பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்" (கலி. கoச, கoரு). "கடல்வளர் புரிவளை புரையு மேனி, யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும், மண்ணுறு திருமணி புரையு மேனி, விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்...செம்மையாற் றீயே வாலி யோனை, புகழ்மேம்பட்டு நீயே யிகழுந ரடுநனை" (புறநா. ருசு), "மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங், கானலுஞ்சேர் வெண்மணலுங் காணுயோ" (திணைமா. ருஅ) என்பவற்றாலும் இதனையுணர்க. "புகர் வெள்ளை நாகர்தங் கோட்டம்" (சிலப். கூ: கo) என்பதனால் பலதேவர்க்குத் திருக்கோயிலிருந்தமை தெரிகின்றது. சோலைமலையிற் பலதேவர் திருவுருவம் இக்காலத்திற் காணப்படவில்லை.

வரே யென்பதற்குக் கூறியுள்ள உவமைநயமும், அக்குன்றம் திருமால் போல்வது, தன்னைக் கண்டோருடைய மயக்கத்தை யறுப்பது, ஆதலால், சென்றேனும் கண்டேனும் திசைநோக்கியேனும் குடும்பத்துடன் வழிபடுமினென்று உலகத்தவரை நோக்கிக் கூறியிருக்கும் இவரது அன்புடைமையும், அக்குன்றத்தின் அடியுறை தலே தமக்கு வேண்டுமென்று இவர் முடித்திருத்தலும் அறிந்து இன்புறுதற் குரியன. வழுதியாரென்ற பெயர் இவர் பாண்டியர் குடியிற் பிறந்தவரென்பதைப் புலப்படுத்துகின்றது. இளம்பிராயத்திலேயே பேரறிவினராக இருந்ததுபற்றி இவர் இப்பெயர் பெற்றனரென்று தோற்றுகின்றது; இப்பாடலே இவரது பேரறிவிற்குப் போதிய சான்றாகும். புறநானூற்றைப்பாடிய புலவர்களுள் கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி யென்று ஒருவருளர்; அவர் பாடிய ''உண்டாலம்ம'' என்னும் செய்யுளும் இப்பாட்டும் பரோபகாரச் செய்தி முதலிய கருத்துக்களில் ஒத்திருத்தலானும் பெயரொற்றுமையானும் அவரும் இவரும் ஒருவரென்றே கொள்ளுதல் முறையாகும். 'கடலுண்மாய்ந்த' என்னுமடைமொழி, துஞ்சிய பின்பு இவருக்கு அமைக்கப்பட்டதென்பது சொல்லாமலே விளங்கும். நற்றிணைப்புலவர் வரிசையிலும் பழைய இலக்கணவுரைகளின் உதாரணங்களுள்ளும் பெருவழுதி யென்னும் பெயர் காணப்படுகின்றது; ஆயினும், இளமையென்னுமடைமொழி யின்மையால், அப்பெயரையுடையார்வேறு இவர் வேறென்று கொள்ளவேண்டும்.

௩. கடுவனிளவெயினனார்:—இவர் செய்த பாடல்கள் ௩, ௪, ௫; திருமாலையும் முருகக்கடவுளையும் வாழ்த்தியிருத்தலால் இவர் அவ்விருவரிடத்தும் அன்புடையவரென்று தெரிகிறது. மூன்றாவது நான்காவது பாடல்களில் திருமாலைத் துதித்திருக்கும் பகுதிகளும் அவருடைய நால்வகைவியூகம், வராக நரசிங்க வாமனாவதாரச் செயல்கள், அவர் அன்னமாகத் தோன்றிச்செய்த அரிய செயல், வேதத்தால் அவர் பாராட்டப்படும் வகை, யோகிகளாலே தியானிக்கப்படும்முறை, கருடனும் பனை நாஞ்சில் யானை ஆகிய இவைகளும் அவருக்குக் கொடிகளாகவுள்ளன வென்பது, ஆல் கடம்பு ஆற்றிடைக்குறை குன்றம் இவற்றில் அவர் வேறுவேறு பெயரோடு எழுந்தருளி யிருத்தல், கருடனது பெருமை, அவனுக்குண்டாகிய செருக்கை அவர் அடக்கினமை, தத்துவத்தின் தோற்ற வொடுக்கங்கள் முதலியவற்றை விதந்து கூறியிருக்கும் பகுதி

களும் மிக்க இனிமை பயப்பன. முருகக்கடவுளுடைய திருவவதார வரலாறு, அவதரித்தஅன்றே இந்திரன்முதலிய தேவர்களைவென்று அவர்களளித்த மயில் கோழி முதலியவற்றை அவர் பெற்றமை, வேற்படையாற் கிரௌஞ்சத்தையுடைத்து வழியுண்டாக்கினமை, பிணிமுகமென்னும் யானையை ஊர்ந்துசென்று கடலிற் சூர்மாவைத் தடிந்தமை ஆகிய இவைகளும், வெறியாட்டுச் செயல், சிவபிரான் திரிபுர தகனஞ்செய்த சரிதம் ஆகிய இவைகளும் ஐந்தாம்பாட்டில் மிகஅழகாக் கூறப் பெற்றுள்ளன. "எமக்கு வேண்டுவன நுகர் பொருளும் போகமுமல்ல; அருளும் அன்பும் அறனுமே" என்று வேண்டிக் கொண்டிருத்தல் இவருடைய பேரன்பைத் தெரிவிக்கின்றது. இவர்பெயர் ஒரு பிரதியிற் கடுவனிளவெயினரென்றுங் காணப்படுகிறது.

௪. **கரும்பிள்ளைப் பூதனார்:**—இவர் வையைக்குரிய ௰-ஆம் பாடலை இயற்றியவர்; இப்பாடலிலுள்ள புதுநீர் விழாச்சிறப்பு மிக்க இன்பமளிப்பது. நீர் விளையாட்டின் முறை இதனால் நன்கு அறியலாகும். இதில் வந்துள்ள உவமைகள்யாவும் மிகச்சிறந்தவை. நெருக்கத்தால் மெல்லச்செல்லுமாந்தர் நடைக்கு வாச்சியத்தின் விளம்பித நடையை உவமை கூறியிருத்தலின் இவரது இசைப் பயிற்சியும் வையையின் பேருதவிக்குப் பாண்டியன் கொடையை உவமை கூறியிருத்தலின் அவனிடம் இவருக்கிருந்த அன்பும் வெளியாகின்றன.

௫. **கீரந்தையார்.**— ௨-ஆம் பாடலாகிய திருமால்வாழ்த்து இவரால் இயற்றப்பெற்றது; இதில் ஐம்பூத வூழிகள், நெய்தல் முதலிய பேரெண்கள், திருமாலின் வியாபகம், அவர் பல தேவராகவும் கண்ணபிரானாகவும் பூவராக மூர்த்தியாகவும் ஆனமை, தேவர்களுக்கு அவர் அமுதளித்தது, வேள்வியில் அவருக்குள்ள சம்பந்தம் ஆகிய இவைகளும் பிறவும் கூறப்பெற்றுள்ளன. அவருடைய திருமேனி முதலியவற்றிற்கு இவ்வாசிரியர் கூறியவுவமைகள், அவரது திருமார்பைப் பாராட்டியிருத்தல் முதலியவைகள் வியக்கற்பாலன. திருவள்ளுவமாலையிலுள்ள, "தப்பா முதற்பாவால்" என்னுஞ் செய்யுளை இயற்றியவரும் இவரே. சிலப்பதிகாரம் ௨௩-ஆம் காதை, ௪௨-ஆம் அடியில் கீரந்தையென்ற பெயரொன்று வந்துள்ளது. அப்பெயரையுடையாரும் இவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

௬. **குன்றம்பூதனார்:**—இவர் முருகக்கடவுள்பால் அன்புடை

யவர்; அவருக்குரிய கூ, கஅ-ஆம் பாடல்களை இயற்றியவர். கூ-ஆவதில், "நான்மறை விரித்து" என்பது முதலியவற்றாற் பாராட்டியிருக்குந் தமிழ்வழக்கு, தமிழ்மொழியின் கண் இவருக்குள்ள பேரன்பைப் புலப்படுத்தும். கஅ-ஆவது செய்யுளால் சூரனுடைய மாமரச் செய்தியும் திருப்பரங்குன்றத்துள்ள கோயிலின் பக்கத்தே சித்திரவம்பல முண்டென்பதும் தெரியவருகின்றன. குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரியென்ற முப்பொருள்களையும் செவ்வனேயமைத்து நயமுறக் கூறியிருத்தலை உற்று நோக்கும்பொழுது, இவர் அத்திணையைப் பாடுதலில் வல்லவரென்று தெரிகின்றது. * திருப்பரங் குன்றத்துள்ள சோலை சுனை அருவி காந்தள் திணை மயில் முதலியவற்றை வருணித்து, அக்குன்றம் இமயத்தையும் முருகக்கடவுளின் ஊர்தியாகிய யானையையுமொக்குமென்று இவர் கூறியிருப்பது பாராட்டற் பாலது. குன்றத்தை இங்ஙனம் அழகுறப்பாடி யிருத்தலால், இவர் இப்பெயர்பெற்றனர் போலும்.

எ. **கேசவனார்:—** இவர் முருகக்கடவுளுக்குரிய கச - ஆம் பாடலை இயற்றியவர்; இப்பாடலில் திருப்பரங் குன்றத்துள்ள சுனை முதலியவற்றையும் கார்காலத்தையும் வருணித்திருத்தலும் அங்கங்கே கூறிய உவமைகளும் முருகக்கடவுளை முன்னிலையாக்கித் துதித்திருக்கும் அருமையும் மிக்க இன்பம்பயக்கும். அவரை அடுத்தடுத்து வழிபடுவதன் பயன் மேன்மேலும் அவரைவழிபடுவதாகவே ஆகல் வேண்டுமென்று இதனிறுதியில் வேண்டுதல், அவர்பால் இவருக்குள்ள ஒப்புயர்வற்ற அன்பைப் புலப்படுத்துகின்றது. இவ்வச்செய்திகளை இவர் பலபடப்பாராட்டியிருக்கிறார்; இப்பாடலுக்கு இசை வகுத்தவரும் இவரே.

அ. **நப்பண்ணனார்:—**முருகக்கடவுளுக்குரிய கக-ஆம் பாடல் இவரால் இயற்றப்பெற்றது. திருப்பரங் குன்றத்தில் நிகழும் வள்ளியம்மையின் திருமணவிழாச் செய்தியும் முருகக்கடவுளைத் தரிசிக்கவிரும்பி மதுரையிலுள்ளார் தத்தமக்குரிய ஊர்திகளில் ஏறியும் நடந்தும் செல்லுதலும்; அவர்களுடைய நெருக்கத்தால் தோன்றும் வழியின் காட்சியும், பாண்டியன் உரிமை மகளிரோடும் மந்திரிமார் முதலியவர்களோடும்வந்து அம்மலையின் மீதேறித் திருக்கோயிலை வலம்வருதலும், தரிசிக்கவந்தவர்கள் அம்மலையில் நிகழ்த்தும்

* இது குன்றமெனவும், குன்றெனவும் இந்நூலிலும் பிற நூல்களிலும் வழங்குகிறது.

கக. நல்லேழுனியார்.—இவராற் பாடப்பெற்றது திருமாலுக்குரியதாகிய கங- ஆம் பாடல். இதில் திருமாலின் திருவுருவம் முதலியவற்றைப் பலபடப்பாராட்டி யிருக்கும் பகுதிகளும் அவரைத் துதித்திருக்கும் பாகங்களும் அன்பர்களுடைய மனத்தை ஆநந்த வெள்ளத்திலழுத்தும். அதிகமா னெடுமானஞ்சியின் பரம்பரையோர் பெயர்களில் 'எழுனி' என்பது விரவிவருதலால், இவர் அவன் பரம்பரையினரோவென்று நினைத்தற்கிடமுண்டு. இவர் பெயர் நல்லெழினியென்றும் வழங்கும்.

கஉ. நல்வழுதியார்:—இவராற் பாடப்பெற்றது வையைக்குரிய கஉ-ஆம் பாடல். சையமலையிலிருந்து மரங்கள் பலவற்றை வையை அடித்துக்கொண்டு வருதல், அது மதுரையின் மதிலைப் பொருதல், அதிற் புதுநீர் பெருகி வருதலைக்கேட்ட மகளிர் தலைவர்களுடன் ஊர்திகளில் ஏறிச்செல்லல், அதுகண்ட பிறமகளிர் தம்முட்கூறுங் கூற்றுக்கள், சனங்களின் முழக்கமிகுதி, பலவகை வாச்சிய வொலிகள், சென்றோர் தம்மவர்க்கு அங்கங்கே நிகழ்பவற்றை உவந்து காட்டிக்கூறல், நீர் விளையாட்டின் வகை முதலியன இதில் மிக நன்றாகக் கூறப்பெற்றுள்ளன. வழுதியாரென்பது இவர் பாண்டியர் குடியிற் பிறந்தவரென்பதைக் காட்டுகின்றது.

கங. மையோடக் கோவனார்:—இவர் வையைக்குரிய எ-ஆம் பாடலையியற்றியவர். வையை பல பொருள்களோடு பெருகி வருதற்குப் பாண்டியர்சேனை பகைமேற் செல்லுதலையும் அப்பெருக்கால் வேறுபட்ட இடங்களுக்கு அச்சேனையால் வேறுபட்ட பகைப் புலங்களையு முவமைகூறி யிருத்தலை நோக்கும் பொழுது இவர் இராசபத்தியுடையவ ரென்பது புலனாகின்றது; இவர் கூறிய வையைப் பெருக்கின் செயல்களும், புனல்விளையாட்டு வகையும் திருமருத முன்றுறைச் சிறப்பும் பிறவும் மிகவியக்கற்பாலன. இவர் புனல்விளையாட்டிற்குக் கருவியாகிய ஓடத்தை எந்த வகையாகவோ புனைந்து கூறியதுபற்றி இப்பெயர் பெற்றிருக்கலாமென்று நினைத்தற் கிடமுண்டு.

# இசைவகுத்தோர் வரலாறு.

க. **கண்ணகனார்:**—இவர் உக - ஆம் பாடலுக்கு இசை வகுத்தவர்; புறநானூற்றிலுள்ள உஉஅ- ஆம் செய்யுளியற் றிய நற்றிணையில் எகூ-ஆம் செய்யுளியற்றியவரும் இவரே; இதனால், இவர் இயற்றமிழிலும் வல்லுநரென்று தெரிகின்றது.

உ. **கண்ணனாகனார்:**—இவர் ரு - ஆம் பாடலுக்கு இசைவகுத் தவர்.

ந. **கேசவனார்:**—கச-ஆம் பாடலுக்கு இசைவகுத்தவர்; பிற வரலாற்றைப் பாடினோர் பெயரிற் காண்க.

ச. **நந்நாகனார்:**—இவர் கஉ - ஆம் பாடலுக்கு இசை வகுத்த வர். நப்பண்ணனாரென்பதிற்போல 'ந' என்பது சிறப்புப் பொருளை யுணர்த்தும்.

ரு. **நல்லச்சுதனார்:**—இவர் கசு, கஎ, கஅ, உ0-ஆம் பாடல் களுக்கு இசை வகுத்தவர்; பிற வரலாற்றைப் பாடினோர் பெயரிற் காண்க.

சு. **நன்னாகனார்:**—இவர் உ - ஆம் பாட்டிற்கு இசைவகுத்தவர். புறநானூற்று ஆசிரியர்களுள் புறத்திணை நன்னாகனாரென ஒருவர் உளர்; அவரும் இவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

எ. **நாகனார்:**—இவர் கக-ஆம் பாடலுக்கு இசை வகுத்தவர்.

அ. **பித்தாமத்தர்:**—இவர் எ - ஆம் பாடலுக்கு இசை வகுத் தவர்; இப்பெயர் பித்தாமத்தரென்றும் காணப்படுகின்றது.

கூ. **பெட்டனாகனார்:**—[illegible], [illegible]-ஆம் பாடல்களுக்கு இசை வகுத் தவர் இவர்.

க0. **மருத்துவனல்லச்சுதனார்:**— இவர் [illegible], [illegible], [illegible], க0, கக, க[illegible]- ஆம் பாடல்களுக்கு இசை வகுத்தவர். 'மருத்துவன்' என்ற சிறப் புப் பெயர் இவர் மருத்துவ நூலிலும் வல்லவரென்பதைக் காட்டு கின்றது.



## இந்நூலிலுள்ள சிறந்த பாகங்கள்.

திருமால்:—(முதற்பாட்டு:) அடிகள்: கூ-கங, உசு-சுரு; (உ:) உO-எசு; (ங:) க-கக, உகூ-ஙO, சுங-கூச; (ச:) க-கூ, உரு-ஙரு, சகூ-எங; (கங:) சசு-அ, சுக-ச; (கரு:) கக-ச, உஎ-ஙச, சசு-அ, ருக-ங; (வாணுரெழிலி:) எ-சகூ, சுச-எஅ;

முருகக்கடவுள்:—(ரு:) க-உக, ருO-அக; (அ:) க-ஙரு, கூசு-ககக, கஉரு-ஙO; (கூ:) அக-ரு; (கச:) முற்றும்; (கஎ:) எ-உக; (கஅ:) கரு-உக, சரு-ருO; (ககூ) க-உகூ; ஙஅ-ருஎ; (உக:) க-கஎ, உஉ-ஙஅ, சுஅ-எO;

வையை:—(சு:) க-கO, கOசு; (எ:) க-ஙO; (கO:) க-அ, ககூ-ஙக, ருஉ-சுஅ, எச-அ, அரு-அ, கOங-கக; (கக:) ஙக-அ, சக-ச, ருO-சுO, எஅ-அஎ, கூO-கூஉ; ககரு-உக, கங அ-சO; (கஉ:) சரு-சு; (கசு:) க-கரு, ஙங-அ, சச-எ, ருச-ரு; (உO:) கச-உஉ, ஙஉ-சரு, சகூ-கூங, கூஅ-கOO; (உஉ:) க-அ, ஙக-ச; (மாநிலந்தோன்றுமை:) ஙச-சO, ருரு-கூங;

மதுரை:—கஎச-கஎரு-ஆம் பக்கத்துள்ளவை முற்றும்.

---

### இந்நூலை எடுத்தாண்ட உரையாசிரியர் முதலியோர் பெயர்கள்:—

இலக்கணக்கொத்துரையாசிரியர்
இலக்கண விளக்க உரையாசிரியர்
இளம்பூரணர்
சங்கரநமச்சிவாயர்
சேனாவரையர்
தக்கயாகப்பரணி உரையாசிரியர்
திருக்குறட் பரிமேலழகருரை நுண்பொருண்மாலையுடையார்
நச்சினார்க்கினியர்
நாற்கவிராய நம்பியகப் பொருளுரையாசிரியர்
பரிமேலழகர்
பிரயோக விவேக உரையாசிரியர்
புறத்திரட்டுத் தொகுத்தோர்
பேராசிரியர்
மயிலேறும்பெருமாள்பிள்ளை
மயிலைநாதர்
மாறனலங்கார வுரையாசிரியர்.



# பரிமேலழகர் வரலாறு.

இந்நூலுரையாசிரியராகிய பரிமேலழகர் ஸ்ரீ காஞ்சி நகரத்திலுள்ள ஸ்ரீ உலகளந்தபெருமாள்கோயில் அருச்சகபரம்பரையிற் பிறந்தவர்; வைணவ சமயத்தினர். இவர் * திருக்குறளுக்குச் சிறந்த உரையியற்றியிருப்பது யாவரும் அறிந்ததே. இவருடைய ஊர் முதலியன கர்ணபரம்பரைச் செய்தியாலும், "திருக்காஞ்சி வாழ்பரி மேலழகன் வள்ளுவர் நூற்கு வழிகாட்டி னன்றொண்டை மண்டலமே", "நீணில மளந்தோன் றடிதொழு மரபிற் பரிமே லழகன்" (232-ஆம் பக்கம்) என்பவற்றாலும் தெரிகின்றன.

இவர், திருமாலிடத்தும் திருமாலின் அடியார்களிடத்தும் மெய்யன்பு பூண்டொழுகியவர்; திருக்குறள் ௩௯-ஆம் அதிகாரத்தின் அவதாரிகையில், திருமாலை இறையென்றதும், †"திருவுடை மன்னரைக் காணிற்றிருமாலைக் கண்டேனே யென்னுமென்றுபெரியாரும் பணித்தார்" என்றதும், மற்றும் அந்நூலுரையிலும் இந்நூலுரையிலும் எழுதியுள்ள பல குறிப்புக்களும் இதனைப் புலப்படுத்தும்; வடமொழியிலும் தென்மொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவர்; "வடநூற்றுறையுந் தென்றிசைத்தமிழும், விதிமுறை பயின்ற நெறியறி புலவன்" என்பதனாலும் இவருடைய உரை நடையாலும் இது விளங்கும்.

அருச்சகரிற் பலர் பண்டைக்காலத்தில் வடமொழி தென்மொழிகளில் மிக்க பயிற்சியுள்ளவர்களாக இருந்ததற்கு ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியர் முதலியோர்களே உதாரணமாவார்.

திருக்குறளுக்கும் இந்நூலுக்கும் இவர் உரை செய்தவரென்பதை இரண்டு உரைகளிலுமுள்ள ஒற்றுமைப் பகுதிகள் பலவற்றாலும் அறியலாகும்.

பண்டைக்காலத்தில் அரசர்களுடைய கிளர்ச்சியால் இந்நூல் படித்துப் பாராட்டுவோரறவுங் குறைந்தமையும் அக்காலத்தில், பழைய நூல்களினிடையே தம் சொல்லை மடுத்து வேறு படுத்துப்

* "தருமர்", "தாமத்தர்", "தெய்வப்புலமை", "பாலமைநார்", "வள்ளுவர் சீர்" என்னும் வெண்பாக்களும், "திருக்குறள் [illegible]" [illegible] [illegible], "வள்ளல் சடகோபருமான்" [illegible] [illegible] [illegible] பிறவும் இதனைப் புலப்படுத்தும்.

† திருவாய்மொழி ௪-௪-ஆம் திருப்பதிகம், ௮.

இயல்புள்ள கந்தியா ரென்பவராலும் பொருள் தெரியாமல் எழுதி யவர்களாலும் பாடகர்களாலும் இந்நூலில் நேர்ந்த பலவகைப் பட்ட பிழைகள் அறிஞர்களுடைய செவிகளை வெதும்பச் செய் தலைத்தெரிந்து அப்பிழைகளை நீக்கி ஆராய்ந்து உண்மையான பாடத்தையறிந்து சிற்றறிவினர்க்கும் தெற்றெனப் புலப்படும்படி இவர் இவ்வுரையை இயற்றின ரென்றும் இந்நூலுரைச்சிறப்புப் பாயிரத்தால் தெரியவருகின்றன.

"விரும்பியருள்" (பக்கம், 232) என்னும் வெண்பா, இந் நூலுக்கு "ரைசெய்யத்தொடங்குமுன் இவர்கூறிய கடவுள் வணக் கமாக இருக்கலாமென்று தோற்றுகின்றது.

மிக அரியனவாகிய வடநூல்களின் கருத்துக்களை எளியன வாகத் தமிழ் நாட்டார் அறிந்துகொள்ளும்படி செய்த மகோபகாரி களில் இவர் ஒருவர். சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முத லிய அழகுகளையமைத்து உரையெழுதுதல் இவருக்கு இயல்பு. பழைய செய்யுட்களையே உரைநடையாக உபயோகித்த உரையா சிரியர்களில் இவர் முதன்மையானவர்.

இவர் திருமாலடியவராக இருந்தும் பரிபாடலிற் சிவபெரு மான் முருகக்கடவுள் முதலியோர்களைக் குறிப்பிடுமிடங்களில் அவ ரவர்களுடைய பெருமைகளை நன்கு விளக்கிச் செல்லுதலால் இவருடைய நடுவுநிலைமை புலனாகின்றது.

இவர்பெயர் பரிமேலழகரையனெனவும் பரிமேலழகியா ரென வும் வழங்கும்.

"வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்" (முருகு. க0ரு) என்புழி, 'வசிந்து' என்பதற்குப் பகைவர்மார்பைப் பிளந் தென்று பொருள்கூறி, படைக்கலங்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவனுதலிற் பொருந்தாதென்று விசேட வுரையுமெழுதிய ஆசிரியர் நச்சினார்க்கினியர் மறுப்பு, "வாண் மிகுவய மொய்ம்பின்" (பரி கூ: ருள) என்பதற்கு வாட்டழும்பு நெருங்கிய வெற்றிமொய்ம்பென்று இவர் பொருளெழுதியதைச் சுட்டியதாயின், இவர் இந்நூலுக்கு உரையியற்றியகாலம், அவர் பத் துப்பாட்டிற்கு உரையியற்றிய காலத்திற்கு முற்பட்டதென்று கொள்ளலாம்.

பாடினோர்களுடைய ஆழ்ந்த கருத்துக்களை விளக்கி இந்நூலுள் அங்கங்கே இவர் எழுதிய உரைநயங்களுட் பின்னோர்ச் சுட்டியவை அறிந்து இன்புறற்பாலன:—

(மூன்றாம் பாட்டு:) அடிகள்: கo - கக, [illegible] - சங, [illegible] - [illegible], (ச) கo; (ரு) கo, ஙஎ, எச - அக; (எ) [illegible] - [illegible]; (அ) எ[illegible] - ங, எஎ; (கூ) ங[illegible]; (கo) சக - ருரு, [illegible]; (கக) க - க[illegible]; (கஉ) [illegible] - [illegible]; (கங) ருரு; (கரு) [illegible] - ங ங; (கஎ) ங உ; (கஅ) [illegible], ங0 - ஙஎ, [illegible], [illegible]; (உo) ரு, ருச; (உக) உஉ - அ.

உரைகளில் இவர் எடுத்துக்காட்டிய மேற்கோள்களமைந்த நூல்களில் இதுகாறும் தெரிந்தவை வருமாறு:—

- அகநானூறு
- இறையனாரகப் பொருள்
- ஒரு நூலின் உரை மேற்கோள்
- கலித்தொகை
- குறுந்தொகை
- சிலப்பதிகாரம்
- சிறுபாணாற்றுப்படை
- சீவகசிந்தாமணி
- திரிகடுகம்
- திருக்குறள்
- திருச்சிற்றம்பலக் கோவையார்
- திருவாய்மொழி
- தொல்காப்பியம்
- நற்றிணை
- நாலடியார்
- நான்மணிக்கடிகை
- நெடுநல்வாடை
- பட்டினப்பாலை
- பரிபாடல்
- புறநானூறு
- புறப்பொருள் வெண்பாமாலை
- பெருங்குறிஞ்சி (குறிஞ்சிப் பாட்டு)
- பொருநராற்றுப்படை
- மணிமேகலை
- மதுரைக் காஞ்சி
- முத்தொள்ளாயிரம்
- வளையாபதி.

“அன்பருளொழுக்கம் பொறை புலனடக்கம், நன்றறி வாய்மை நற்றவ முடையோன், இத்தனையன்றி ஈரமு மருளும், உயிர்த்துணை வுடையவோ ருண்மையாளன்” என ஆன்றோர் புகழும் இவருடைய பலவகையான விசேடங்கள் விரிவஞ்சி இம்மட்டில் நிறுத்தப்பெற்றன.

உ

கணபதிதுணை.

# பரிபாடல்.

## பரிமேலழகருரை.

---

### முதற் பாடல்.

---

#### திருமால்.

*ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
தீயுமிழ் [1]திறனொடு முடிமிசை யணவர†
[2]மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
சேயுயர் [3]பணைமிசை யெழில்வேழ மேந்திய
வாய்வாங்கும் வளைநாஞ்சி லொருகுழை யொருவனை.

(இது தரவு.)

---

* இந்நூற் பரிசோதனைக்குக் கிடைத்தவை, முதலிலும் இறுதியிலும் இருக்கவேண்டிய ஏடுகளில்லாமலும் இடையிலுள்ளவை தேய்ந்தும் ஒடிந்தும் இராமபாணவாய்ப்பட்டும் பழுதுற்றிருந்த பழம்பிரதிகளாதலின், அவற்றிற் காணப்படாமல், "கட்டுரை வகையின்" என்னும் **தொல்காப்பியச்** செய்யுளியற் சூத்திரவுரையில் **இளம்பூரணவடிகள்** காட்டிய மேற்கோள்களிற் காணப்பெற்ற இப்பாடல் மிகச் சிதைந்திருந்த உரைப்பகுதியால் இந்நூலின் முதற்செய்யுளென்று அறியப்பெற்றுத் தமிழ்த்தெய்வத்தின் திருவருட்செயலை நினைந்து இன்புற்று இங்கே பதிப்பிக்கலாயிற்று.

† வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராய்த் துள்ளலோசைபடவும் கூறப்படுதலின், பரிபாடல், இதுபாவென்னும் இயனெறியின்றிப் பொதுவாய் நிற்றற்கும் உரியதென்பதற்கு 'ஆயிரம் விரித்த.....அணவர' என்னும் பகுதி மேற்கோள்; (தொல். செய். சூ. கக௯ - பேர். ந.)

(பிரதி பேதம்):— 1 திறலொடு. 2 வாயுடை. 3 பணைமிசையெழின்மேழி.

விருவர் தாதை யிலங்குபூண் [1]மாஅ
றெருள நின்வர வறிதன்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே.

(இஃது ஆசிரியம்.)

அன்ன மரபி னனையோய் நின்னை
யின்னனென் றுரைத்த லெமக் [2]கெவ னெளிது.

(இது பேரெண்)

அருமைநற் கறியினு மார்வ நின்வயிற்
பெருமையின் வல்லா யாமிவண் மொழிபவை
மெல்லிய வெனாஅ வெறாஅ தல்லியந்
திருமறு மார்பநீ யருளல் வேண்டும்.

(இஃது ஆசிரியம்.)

விறன்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கு
மறனு மார்வலர்க் [3]களியு நீ
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் [4]சிறப்பின்
மறனு மாற்றலர்க் கணங்கு நீ
யங்கணேர் வானத் தணிநிலாத் திகழ்தருந்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ
[5]ஐந்தலை யுயரிய வணங்குடை யருந்திறன்
மைந்துடை யொருவனு மடங்கலு நீ

---

## பரிமேலழகருரை.

* ..................................................................................வாறு.

௪௪ - ௫. ஐந்து தலையைத் தோற்றுவித்த அணங்குடை அருந்திறலை யுடைய ... வீரம். மடங்கல் - அவனிறுகிய உலகுயிர்களினது ஒடுக்கம்.

---

* மிகச் சிதைந்த திருப்பிரதியும், "ஆயிரம் விரித்த" என்பதும் செய்யுளை இந்நூலின் முதற்செய்யுளென்று நன்கு அறிந்து கொள்ளும்படி பேருதவியைச் செய்த இந்த உரைப்பிரதி திருவாவடுதுறையாதீனத்திலிருந்து கிடைத்தது.

(பி-ம்.):— [1]மாஅய். [2]எவனெளிது. [3]அருளுநீ. [4]கொள்கை. [5]ஐந்தலை.

நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
[1]புலமும் பூவனு நாற்றமு நீ
வலனுய ரெழிலியு மாக விசும்பு
நிலனு நீடிய விமயமு நீ

(இவை ஆறும் பேரெண்.)

அதனால், (இது தனிச்சொல்.)

இன்னோ ரனையை யினையை யாலென
வன்னோர் யாமிவட் காணா மையிற்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னுயிர் முதல்வனை யாதலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே.

(இது சுரிதகம்.)

* நின்னொக்கும் புகழ்நிழலவை
பொன்னொக்கு முடையவை
புள்ளின் கொடியவை புரிவளை யினவை
எள்ளுநர்க் கடந்தட்ட விகனேமி யவை
மண்ணுறு மணிபா யுருவினவை

---

௨௫ - ம். அறமுழுதி [illegible] முக [illegible]
குயிர்களின் தோற்றமும் நீ.

[illegible]
அப்பொருள்பற்றி அதற்குப் பு [illegible]
நான்மறைகட்கும் பெயராயிற்று.

[illegible]

[illegible] மாகமாகிய [illegible]

மாகமாவது [illegible]

௩0 [illegible] இவை [illegible]

௩௨ [illegible] காணா [illegible]

௩௩ [illegible]

௩௪ . மணிபாக்கா [illegible]

* இவ்வடி [illegible] ; (தொல். [illegible]
[illegible])

(பி-ம்.):— [1]புலனும் பூவினு நாற்றமும்.

யெண்ணிறந்த புகழவை யெழின்மார்பினவை
(இவை சிற்றெண்ணும் பேரெண்ணும் இடை யெண்ணும்.)
ஆங்கு, (இது தனிச்சொல்.)
*காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழிப் [1]புலவநின் றாணிழ றொழுதே.
(இது சுரிதகம்)

இது கடவுள் வாழ்த்து.

---

## இரண்டாம் பாடல்.

---

### திருமால்.

தொன்முறை யியற்கையின் மதியொ......
............................ [2]மரபிற் றாகப்
பசும்பொ னுலகமு மண்ணும் பாழ்பட
விசும்பி லூழி யூழூழ் [3]செல்லக்

---

௬௨.....ரென்புழி உகரம் பகுதிப்பொருள் விகுதி,
௬௨-௫. யாம் ஏமுற்ற நெஞ்சத்தேமாய் இம்மைக்கட் காமருசுற்றமோடொருங்கு...தலைப்பெருந்தியும் பொலிகவெனவே நின் தாணிழல்தொழுது வைகலும் பரவுதும், வாய்மொழிப்...
பரிபாட்டென்பது இசைப்பாவாதலான், இஃது இசைப்பகுப்புப் படைத்த புலவரும் பண்ணுமிட்டெ...

---

(இரண்டாம் பாடலுரை.)

௧-௪. மண்ணுலகமும் பசும்பொனுலகமும் பாழ்பட ஒன்றற்கொன்று மாறிவருதலாகிய பழைய இயல்பினையுடைய மதியமும் ஞாயிறுங்கெடுதலால் அழகிழந்த இயல்பிற்றாக விசும்புகெட்ட ஊழிகள் முறைமுறையாகக் கழிந்தனவாக.
'பாழ்பட' எனவும், 'மரபிற்றாக' எனவுமுள்ள எச்சங்கள் 'விசும்பி லூழி' என்புழி, இன்மையாகிய குறிப்புவினை கொண்டன.

---

* பரிபாடல் காமங்கண்ணியதாமென்பதற்கு 'காமரு...தொழுதே' என்னும் பகுதி மேற்கோள்; (தொல். செய். சூ. ௧௨௧ - பேர். ௩.)

(பி-ம்.) — [1]முதல்வ, [2]மரபிற்றாகிப். [3]செய்யக்.

நின்னிலைத் தோன்றுநின் றொன்னிலைச் சிறப்பே
யோங்குயர் வானின் வாங்குவிற் புரையும்
பூணணி கவைஇய வாரணி நித்தில
நித்தில மதாணி யத்தகு மதிமறுச்
செய்யோள் சேர்ந்தநின் மாசி லகலம்
வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்
[1]வைவான் மருப்பிற் களிறு மணனயர்பு
புள்ளி நிலனும் [2]புரைபட லரிதென
வுள்ளுந ருரைப்போ ருரையொடு சிறந்தன்
றொடியா வுள்ளமொ டுருத்தொருங் குடன்னியைந்
திடியெதிர் கழறுங் காலுறழ் பெழுந்தவர்
கொடியறு பிறுபு செவிசெவிடு [3]படுபு
முடிக ளதிரப் படிநிலை தளர
நனிமுரல்வளை முடியழிபிழிபு

௨௭. 'நின்னிலைத்தோன்றும்' என்புழி 'நிலை' என்பது இடப்பொருட்டாய் நின்றது.

௨௮-௩௫. மிகவுயர்ந்தவானின்கண் வளைந்தவில்லையொக்கும் ஒளியைப் பூணணிகளால் அகத்திடப்பட்ட அரிய அழகிய நித்திலத்தாற் செய்த நித்திலமதாணியாகிய அழகிய மதிக்கு மறுவொச் செய்யோள் அடைந்த நின் மார்பு உரையொடுபொருந்திற்றன்று;

வளர்திரைப்புனல் மூழ்கியெடுத்தலின் அதனால் மண்ணப்பட்ட இளர் புகரிடையதாகிய மருப்பிற்கொண்டு ஆதிவராகமாய் மணவயர்தலாற் புள்ளியுளவாகிய நிலனும் வெள்ளத்தால் வருந்திற்றில்லையென்று வேதப்பொருளை உட்கொண்டுரைப்போர் உரையொடொக்கக்கூட்டுக.

ஒருத்தியொடு மணம்புரிவழிப் பிறளொருத்தியை அகலத்துச்சேர்தல் கூடாமையிற் சிறந்ததன்றென்றார்; செய்யுள் விகாரத்தால் 'சிறந்தன்று' என நின்றது.

௩௬-௪௦. கெடாதமனவெழுச்சியோடு பொருந்தின நெஞ்சுடைமையைத் து காரினை யொத்து எதிர்ந்த அவுணர் கொடிகள் அற்றுவீழச் செவிகள் செவிடு பட்டு முடிகள் அதிரப் படிகள்நிலைதளர நின்னுடைய முழங்குகின்ற சங்கு இடியை யொக்கும்.

௩௭. 'எதிர்கழறும்' என்பது உவமப்பொருட்டு.

௪௦. 'முரறல்' உயிருள்வழி அடையாய்வந்தது.

(பி-ம்.):— 1வைவாண். 2புகர்படல. 3பட.

தலையிறுபு தாரொடு புரள
நிலைதொலைபு வேர்தூர்மடல்
குருகு பறியா நீளிரும் பனைமிசைப்
பலபதி னாயிரங் [1]குலைதரை யுதிர்வபோ
லில்லா தொருமுறை கொய்பு கூடி
யொருங்குருண்டுபிளந்து நெரிந்துருள்புசிதறு
பளறுசொரிபு நிலஞ்சேரச்
சேரா ரின்னுயிர் செகுக்கும்
போரடு குருசினீ யேந்திய படையே
ஒன்னா ருடங்குண்ணுங் கூற்ற முடலே
பொன்னேர் பவிரழ [2]னுடக்கத னிறனே
நின்னது திகழொளி சிறப் [3]பிரு டிருமணி
கண்ணே, புகழ்சா றாமரை யலரிணைப் பிணையல்
வாய்மை வயங்கிய வைகல் சிறந்த
நோன்மை நாடி னிருநிலம் யாவர்க்குந்

௨௦ - ௨௯. நின்றநிலையில் தொலைந்து வேரும் தூரும் மடலும் குருத்தும் பறியாத நீண்ட கரிய * பனைமிசைப் பல பதினாயிரங்குலைகள் அதன் றலையினீங்கித் தரைக்கண் உதிர்வனபோலத் தலைகள் வலியழிந்து சாய்ந்து ஒன்றும் உடன்மிசை நில்லாமற் [4]கொத்தாக இற்றுத் தரித்த தாரொடு புரளும்படி ஒருகாலத்திலே கொய்தல்பெற்று உடனே உருண்டு பிளந்து நெரிந்து பின் வேறுவேறாய் உருண்டு சிதறி அளறுசொரிந்து நிலத்தின்கட் சோர அவுணருயிரைச் செகுக்கும், நீ ஏந்திய ஆழிப்படை.

௨௯. பறியாப்பனை எனச் சினைவினை முதன்மேனின்றது.

௩௦. ஒன்னாரை உடங்குண்ணும் அப்படையினுடல் கூற்றத்தையொக்கும்.

௩௧. அதனிறம், சுடுகின்ற பொன்னோடு எழுந்து விளங்குகின்ற அழல் நுடக்கத்தையொக்கும்.

௩௨. நின் ஒளி, சிறப்பினையுடைய இருண்ட நீலமணியை ஒக்கும்.

௩௩. நின் கண், தாமரையலரிரண்டைப் பிணைத்ததனை ஒக்கும்.

௩௪. நின் வாய்மை, தப்பாது வருகின்ற நாளை ஒக்கும்.

௩௫. நின் பொறை நிலத்தையொக்கும்.

* "இலங்கையர் கோனைப், பாழும்பேர் சரத்தாற் பனங்கனி போலப் பருமுடி யுதிர வில் வளைத்தோன்" (திவ். பெரிய. ௮: ௧. ௭.)

(பி-ம்.)— [1]தலைத்தரை. [2](௧) நுடக்கதிறனே. (௨) நுடகனிறனே. [3]இருட்டிரு. [4]கொத்தாகவிதறித்தரித்த.

சாய னினது வானிறை யென்னு
நாவ லந்தண ரருமறைப் பொருளே
யவ்வும் பிறவு மொத்தனை யுவ்வு
மெவ்வயி னோயு நீயே
செவ்வா யுவணத் துயர்கொடி யோயே
கேள்வியுட் கிளந்த வாசா னுரையும்
படிநிலை வேள்வியுட் பற்றியாடு [1]கொளலும்
புகழியைந் திசைமறை யுறுகனன் முறை [2]மூட்டித்
திகழொளி யொண்சுடர் வளப்பாடு [3]கொளலும்
நின்னுரு புடனுண்டி

௫௫ - எ. யாவர்க்குமொத்தநின்னருள் நீரால் நிறைந்த மேகத்தை ஒக்குமென்று உணர்த்தும், அருமறைப்பொருள்,

௫௦-௫௫. 'ஒக்கும்' என்னும் உவமச்சொல் வருவித்துரைக்கப்பட்டது.

௫அ - ௬. யாம்சொல்லிய அப்பொருள்களையும் சொல்லாத பிறவற்றையும் பண்புகளானும் தொழில்களானும் ஒத்தனை; ஒத்தும் ஒப்பின்றி எப்பொருளின் அகத்தாயும் நீ.

௫அ, உகரச்சுட்டுச் சொல்லுளடங்காது குறிப்புளடங்கிய.......... ஆயிடை யிரண்டினும் அடங்காதவற்றின்மேற்று.

௬௧-அ. வேதத்துட்சொல்லப்பட்ட வேள்விமுதல்வன்சொல்லும், படிகால்முறையான் ஒன்றற்கொன்று உயர்ந்த விகிருதிவேள்வியுள் யூபமாய்ப் பசுவைப் பற்றிக்கோடலும்,செய்தாரின்மையின் உலகச்சொலன்றென...... தீதியிசைக்கின்ற மந்திரங்களான் உயர்ந்தஎரியை முறையாற் கடைந்து அத்திகழொளியையுடைய ஒண்சுடரினது பெருக்கத்தையுண்டாக்கிக் கோடலுமாகிய இவை, முறையே நின்னுருபும், நின்உண்டியும், கடவுள் இல்லையென்பார் உடம்படுதலுண்டாகவும் நின்பெருமைக்குத் தகவும் அந்தணர்காண்கின்ற நின்வெளிப்பாடுமாம்.

௬௧. 'கேள்வியுட்கிளந்த' என்பது 'ஆடுகொளல்', 'வளப்பாடு கொளல்' என்பனவற்றொடுமியையும்; அவையும் அதனுட் சொல்லப்பட்டமையின்.

௬௫. ஒடுவின்பொருட்டாகலின், ஈண்டு எண்ணின்கண்வந்த உடனென்பது ஏனையிரண்டிடத்தும் கூட்டி யுரைக்கப்பட்டது.

வேள்விக்கிறைவனை 'ஆசான்' என்றார்; தலைமைபற்றி. அவனுரையாவது வேதத்துள் நான்காம்வேற்றுமையை ஈறாகவுடைய தெய்வப்பெயர்ச்சொல். அதனை வைதிகர் உத்தேசத்தியாகமென்ப. [4]அச்சொல்லே கடவுட்கு உருவென்பது* [5]சயிமினியாற் செய்யப்பட்ட வைதிகநூற்றுணிபாகலின்

* சயிமினியாற் செய்யப்பட்ட வைதிகநூல் - பூருவமீமாஞ்சை.

(பி-ம்.)— [1]கோடலும். [2]மூட்டத். [3]கோடலும். [4]அச்சொல்லோடே. [5]சயமுனியாற்.

பிற [1]ருடம் படுவாரா
நின்னொடு புரைய
வந்தணர் [2]காணும் வரவு
வாயடை யமிர்தநின் மனத்தகத் [3]தடைத்தர
மூவா [4]மரபு மோவா நோன்மையுஞ்
சாவா மரபி னமரர்க்காச் சென்றநின்
.................மரபினோய் நின்னடி
தலையுற வணங்கினேம் [5]பன்மாண் யாமுங்
கலியி னெஞ்சினே மேத்தினேம் வாழ்த்தினேங்
கடும்பொடுங் கடும்பொடும் பரவுதுங்
*கொடும்பா டறியற்க வெம்மறி வெனவே.

**கடவுள் வாழ்த்து.** **[7]நன்னாகனாரிசை.**
**[6]கீரந்தையார் பாட்டு.** **[8]பண்ணுப் பாலையாழ்.**

---

அதனை 'உருபு' என்றும், யூபமாவது மாயோனைகச் சொல்லப்படுதலால் பசுக்களைப் பிணித்துக்கொள்கின்ற அதனை 'உண்டி' என்றும், ஊனர்களுக்குப் படிமையினும் அந்தணர்க்கு வேள்வித்தீயினும் யோகிகட்கு உள்ளத்தினும் ஞானிகட்கு எவ்விடத்தும் வெளிப்படுதலாற் சுடர்வளப்பாடுகோடலை 'அந்தணர்காணும்வரவு' என்றும் கூறினார்.

சுசு-எரு. அமரர்க்குணவாகிய அமிர்தத்தைக் கடைந்துகொடுப்பதாக நின்மனத்தின்கண் நினைந்த அளவிலே அவர்க்கு அதன்பயனாகிய மூவாமரபும் ஒழியாவலியும் தம் சாவாமரபுபோல உரியவாயின; ஆகவே நின்பல்புகழ் பரந்தன; அதனால் அத்தன்மைத்தாகிய அரிய மரபினோய், நின் அடியை யாமும் துளக்கமில் நெஞ்சினேமாய் வணங்கிப் பலகாலும் ஏத்திவாழ்த்தி வேண்டிக்கோடும்.

சுகூ. வாயின்கண் அடுக்கப்படுதலின், உணவிற்கு 'வாயடை' என்று பெயராயிற்று.

எரு. 'கடும்பொடும் கடும்பொடும்' என்பதும்† அடுக்குப் பன்மைக்கண் வந்தது.

எசு. எம்மறிவு கொடும்பாடறியற்கவென மெய்யுணர்வினையேவேண்டினார், ‡ வீடு அதனானல்லது எய்தப்படாமையின். (உ)

---

* "கொடும்பாடன்" (தே. நாகை. சுந்தர.)

† திருக்குறள், ௩சக, சஉ௩ - பரி.

‡ "ஞானத்தால் வீடாக நாட்டு" (சிறுபஞ்ச. ௩கூ.)

(பி-ம்.)— [1]உடம்பாடுவாா. [2]காணின்வரவு. [3]அடைதர. [4]ரபிமனோவாநோன்மைச். [5]பலமாபனமாயாணடுங். 6...னார்பாட்டு. [7]மருத்துவனல்லச்சுவனாரிசை. [8]பண்ணுக்குறிஞ்சியாழ் பண்ணுப்பாலையாழ்.

## மூன்றாம் பாடல்.

### திருமால்.

*மாஅ யோயே மாஅ யோயே
மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
மணிநிக [1]ழுருபின் மாஅ யோயே
தீவளி விசும்பு [2]நிலனீ ரைந்து
ஞாயிறுந் திங்களு மறனு மைவருந்

(மூன்றாம் பாடலுரை).

க. மாயோனென்பது, கரியோனென்றும் பொருள்தருவதாகிய பெயர் மாத்திரையாய் நின்றது; அது விளியேற்று 'மாயோய்' என்றாயிற்று.

உ. அடிகளைப் பணியவே பணிந்தாரது மறுபிறப்பறுதலின், † 'மறு பிறப்பறுக்கு மாசில் சேவடி' என்றார்.

ங. மணிநிகழுருபு - [3]நீலமணி போல விளங்காநின்ற நிறம்.

அச்சேவடி பெறுதற்கு முகம்புகுகின்றாராதலிற் பலகாலும் எதிர்முக மாக்கினார்; ஆக்கி வாழ்த்துகின்றவர் அவன்கட்டோன்றிய பொருள்கள் கூறுவான் றொடங்கி முதற்கண் ‡ ஈசற்கு வடிவாகிய அட்டமூர்த்தங்கள் கூறுகின்றார் :

ச-ரு. அவை : தீ, வளி, விசும்பு, நிலம், நீர் [illegible] பூதங்களைந்தும் ஞாயிறும் திங்களும் வேள்விமுதல்வனுமென இவை.

ரு. வேட்கின்ற வடிவு தருமமாதலின் அஃது அறமெனப் [illegible].

உலக நடைக்கு ஏதுவாகிய கோட்கள் எழுவருள் ஞாயிறும் திங்க ளும் மேற்சொல்லிய அட்டமூர்த்தங்களுள் அடங்கி [illegible], [illegible] ரைப் பெயர்கூறாது 'ஐவரும்' என்றார்; [illegible] களை [illegible] யிற்கூறாராயினார்.

* "ஏனைப்புள்ளி" (தொல். [illegible]) [illegible], 'மாயோய்' என்பது மேற்கோளாகக் காட்ட[illegible].

† "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவ னடிசேரா தார்" என்பது (திருக்குறள், க0.) ஈண்டு அறிதற்பாலது.

‡ ஈசற்கு அட்டமூர்த்தங்கள் உளவென்பதை, "அட்டமூர்த்தி [illegible] வெண்காடமே [illegible]", "அட்டமூர்த்தி [illegible]. [illegible] போம்வினை கேடில்லைகாண்மினோ" என்பவம் தேவாரங்களாலும் அறியலாகும்.

(பி-ம்.)— [1]உருவின். [2]நிலனீர். [3]நீல நிறம் போல.

திதியின் சிறாரும் விதியின் மக்களு
மாசி லெண்மரும் பதினொரு கபிலருந்
தாமா விருவருந் தருமனு மடங்கலு
மூவே ழுலகமு முலகினுண் மன்பது
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தே
மாயா வாய்மொழி யுரைதர வலந்து

௬. திதியின் சிறார் - அசுரர். விதியின் மக்கள் - *ஆதிப்பிரமற்கு நினைவாற்றோன்றிய †பிரமர் பதின்மருட் காசிபன்மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும்.

எ. எண்மர் - வசுக்கள்.

உருத்திரரைக் கபிலரென்றார்; அவர் செய்யராதலின்.

அ. தேவர்மருத்துவரைத் தாவும் மாவின்கட்டோன்றிய இருவரென்றார்; உருப்பசி குதிரைப்பெட்டையாகியாளைக்கண்டு நயந்து தானும் குதிரைவடிவினனாய் அவள்பாற் செல்கின்ற ஆதித்தனுடைய நாசிகைத்துளைகளால் இரண்டு வீரியவிந்துக்கள் வீழ, அவர் அங்கே இரட்டைகளாய்த் தோன்றினாராதலின்.

'விதியின் மக்கள்' என்பதுமுதல் இத்துணையும் முப்பத்து மூவரைக் கூறினார்.

தருமன்—யமன், மடங்கல் - அவனேவல்செய்யும் ‡கூற்றம்.

௯. மூவேழுலகம் - ஒரோவொன்று எழுவகைப்பட்ட மூன்றுலகம். மன்பது - ஒழிந்த உயிர்ப்பன்மை.

௧௦ - ௧௧. மாயோய், இவையெல்லாம் நின்கட்டோன்றிப் பரந்தவையாகத் [1]தொடுத்துக் கூறினேம், வேதம் சொல்லுதலான்.

நித்தமாகியவேதம், தேவரும் மூவேழுலகுகளும் உயிர்ப்பன்மையும் நின்கட்டோன்றியவாறு அறிந்து கூறும்; சிற்றறிவினேமாகிய யாம் அவற்றுட்சிலவற்றை முறைபிறழக் கூறுவதல்லது அவ்வாறு எல்லாம் கூறுதற்கு உரியமல்லமென்பார் வலந்துரைத்தேமென்றார்.

* "ஆதிப்பிரமன்-பிரமதேவர்; "ஆதிப் பிரமனு நீ"! (கம்ப. கவந்த. ௪௫.)

† "புயல்வண்ணனன் பொற்பதுமப் போதிற் புவனச், செயல வண்ணங் காட்டிய சேயோ - னுயிரனைத்துங், காட்டும் பதின்மரினுங் காசிப னேழ் புரவி, பூட்டுந் தனியாழிப் பொற்றேரோன்." என்னும் இராசராசசோழனுலாவால் ஆதிப்பிரமனிடத்துத் தோன்றிய பிரமர் பதின்மரென்பதும் அவருட் காசிபர் ஒருவரென்பதும் பிறவும் அறிந்து கொள்க.

‡ கூற்றம் யமனுடைய ஏவலாளனென்பது, " தருமராசற்காய் வந்த, கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீரட்டனாரே" என்னும் தேவாரத்தாலும் அறியலாகும்.

(பி-ம்.)—1 தொகுத்து.

வாய்மொழி யோடை மலர்ந்த
தாமரைப் பூவினுட் பிறந்தோனுந் தாதையு
நீயென மொழியுமா லந்தண ரருமறை
ஏஎர், வயங்குபூ ணமரரை வௌவிய வமிழ்திற்
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளினை
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளி

* திணைவிராய் எண்ணப்பட்டபெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மை யும் அஃறிணைச் சொற்கொண்டு முடிதலின், 'பரந்தவை' (௧0) என்றார்.

௧௨. தாமரைப்பூப் படைப்பிற்கு முதலாகவந்து மலருமென்பதற்கு, வேதம் ஞாபகவேதுவாதலின், அதற்கு அதனை ஓடையாக உபசரித்துக் கூறினர்.

உபநிடதத்தின்பொருள் பொருந்துங் கூற்றாற் கூறுகின்றாராகலின், 'வாய்மொழியோடை' என்றார்.

ஒரோவழி அவ்வருமறைதானும் 1அவனை அவ்வாறு கூறுமாதலின், அதன் கூற்றெனவுமமையும்.

௧௫. காவலாய்நின்ற அமரரையோட்டி எடுத்துக்கொண்டு போந்த அமிர்தினல்.

அழகுவிளங்காநின்ற பூணினையுடைய அமரரென்க.

௧௬. பயந்தோள் - தன்னைப்பெற்ற விநதை.

அவளது இடுக்கணாவது: இந்திரன் குதிரைவால் வெள்ளையாயிருப்ப தென்றும் அன்றாயின் நினக்கு அடிமையாவலென்றாம் கத்துருவினோடு ஒட்டமொட்ட அவள் அதனை வஞ்சனையாற்கரிதாக்க அஃதறியாது அவட்கு அடிமையாய்வருந்துதல்; அதனைக்களைதலாவது: இந்திரன் அமராபதிக்கட் கொண்டுபோய்வைத்த அமிர்தந்தரின் அவள் அடிமை நீங்குமென்று கத்துருச் சொல்ல அவட்கு அதுகொடுத்து அவ்வடிமை நீக்கல்.

புள்ளினை - புள்ளை ஊர்தியாக வுடையை.

௧௭ - அ. மிக ஓங்கியகொடிக்கண் எழுதிய பயந்தோளிடுக்கண் களைந்த அப்புள்ளாகிய சேவலையுடையோய்.

என்றாராயினும் பயந்தோளிடுக்கண் களைந்த அப்புள்ளாகிய சேவலை எழுதிய மிகவோங்கிய கொடியோயென்பது கருத்தாகக் கொள்க; †"கோழி வரிக், கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடரொடு, கேழ்கிளர்க் கொன்றையொடு பொறித்த, குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே"

* "பலவயி னானு மெண்ணுத் திணை விரவுப்பெயர், அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே" (தொல். கிளவி. ௫௧) என்பதும், ௬௨0-ஆம் திருக்குறளும் அதன் உரையும் ஈண்டு அறியற்பாலன. † புறநானூறு, ௰௨.

(பி-ம்,)— 1நின்னை.

*நிவந்தோங் குயர்கொடிச் சேவ லோய்நின்
சேவடி தொழாரு முளரோ வவற்றுட்
கீழே ழுலகமு முற்ற வடியினை
தீசெங் கனலியுங் [1]கூற்றமு ஞமனு
மாசிலா யிரங்கதிர் ஞாயிறுந் தொகூஉ
† ஊழி யாழிக்க ணிருநில முருகெழு
கேழலாய் மருப்பி னுழுதோ யெனவு
மாவிசும் பொழுகுபுனல் வறள வன்னச்

---

என்பதனுள், 'குன்றுகெழுநாடு' என்றாராயினும் 'நாடுகெழுகுன்று' என்பது கருத்தாயினாற்போல.

இதனால், அவ்வூர்திப்புள்ளினையே கொடியாகவுமுடையையென்பது கூறப்பட்டதாம்.

கஅ. 'நிவந்தோங்குயர்' என்பன ஒருபொருட்பன்மொழி.

க௯ - உ௦. அளக்கின்றகாலைத்து மேற்சொல்லிய (௯) மூவேழுலகினுட் கீழவாகிய ஏழுலகத்தையும் எஞ்சாமலுற்ற அடியினையுடையை.

இதனானே, மூவேழுலகாவன: மேலேழும் கீழேழும் நடுவு சம்புத்தீவு முதலிய தீவேழுமென்பது பெற்றாம். தொல்காப்பியனாரும், ‡"மாயோன் மேய காடுறை யுலகமுஞ், சேயோன்மேய மைவரை யுலகமும்" என இவ்வுலகினுட்பாகுபாடுகளையும் உலகென்றார்.

உக. தீ செங்கனலி-எல்லாம் தீகின்ற செந்நெருப்பு; எல்லாம் தீதற்குக் காரணமாகிய செந்நெருப்பென்றவாறு.

கூற்றம் - மேற்சொல்லிய மடங்கல்.

உஉ. ஞாயிறும் - ஞாயிறு பன்னிரண்டும்.

உ௩ - ௪. இவைகூடும் ஊழிமுடிவின்கண் ஏழும் ஒன்றாகிய ஆழிக்கண் அழுந்துகின்ற நிலமகளை அழகிய வராகமாகி மருப்பாற் பெயர்த்தெடுத்தோ யெனவும்.

உ௫. புட்கலமுதலிய மேகங்கள் பொழிய விசும்பினின்றும் வீழ்கின்ற நீரை.

---

* "கழிபெருங்காரிகை யென்புழி ஒரு பொருட்பன்மொழிபற்றி இவ்வுயிரழகது சிறப்பு உணர நின்றதென்றார்;...........பரிபாட்டினுள், நிவந்தோங்குயர்கொடிக்கும் இவ்வாறுரைத்தார்" என்பது, திருக்குறள் நுண்பொருண்மாலை, ௫௭௧. (செந்தமிழ், தொகுதி ௭, பக்கம் ௫௨௯ - பார்க்க.)

† 'ஊழியாழிக்கண்...உழுதோய்' என்னும் பகுதி, தக்கயாகப்பரணி, ௩௨௯-ஆம் தாழிசையுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

‡ அகத்திணையியல், சூ. ௫.

(பி-ம்.)— [1]கூற்று.

சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோ யெனவு
ஞாலத் துறையுட் டேவரும் வானத்து
*நாலெண் டேவரும் நயந்துநிற் பாடுவோர்
பாடும் வகையேயெம் [1]பாடருமப்
பாடுவார் பாடும் வகை
கூந்த லென்னும் பெயரொடு கூந்த
லெரிசினங் கொன்றோய் நின் [2]புகழுரு வினைகை
நகை †யச் சாக நல்லமிர்து கலந்த
நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை

௨௬. சிறகரால்.

௨௭. ஞாலத்தை உறையுளாகவுடைய தேவர் - முனிவர்.

௨௮. நால்வகைப்பட்ட எண்ணினையுடைய தேவரொடு, மேற் சொல்லிய முப்பத்து மூவரையும்.

௨௮ - ௩௰. நின்னை நயந்து பாடுவோராகிய இவர்கள் பாடுவது தமக்கு முன்னோராகிய பாடுவார்பாடும்வகையே; எம்பாடரும் எமக்கு முன்னோ ராகிய அப்பாடுவார் பாடும்வகையே; அதனால், நின்தொன்மையும் பெருமை யும் அறியாமைக்கண் எம்மோடு அவரிடை வேற்றுமையின்று.

௨௯. உம்மை, செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

௩௧ - ௨. ‡ கூந்தன்மா என்று கண்டார் சொல்லும் வடிவொடுவந்த கேசியது கனல்கின்ற சினத்தை அழித்தோய்;

கூந்தலையுடையமாவை 'கூந்தல்' என்னும் பெயரினையுடைய வடிவை 'பெயர்' என்றுங் கூறினார், ஆகுபெயரான்.

கேசி - குதிரையாய் வந்து பொருதானோரசுரன்; இப்பெயர் கேசமென் னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன் பொருண்மைபற்றும், 'கூந்தல்' என்றார்.

௩௨. எண்ணிறந்தமையான் நின் கைகளின் புகழும் பொருந்தா.

கடந்தன, கழிந்தன என்பனபோல உருவின என்பது ஒன்று உடன் சொல்லாய் நின்றது.

௩௩ - ௪. மோகினியாகிய நின் வடிவினைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியை அவுணர்க்கு அச்சமாய் முடிய அமரர்க்கு நல்லமிர்து பகுத்து பகுத்தலால் நடுவுநிலைமையிற்றப்பிய நலமில்லாத ஒரு கையினையுடைய.

* நாலெண்டேவரை, "நால்வே றியற்கைப் பதினொருமூவர்" என்பர்; (முருகு. ௧௬௭.)

† அச்சு-அச்சம்; கடைக்குறை; (பதிற். ௯௦.). கலி (75-20)

‡ "மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை, வாய்பகுத் திட்டு" (கலித் தொகை, ௧௦௩); "கூந்தல்வாய்கீண்டான்" (இயற்பா, ௨-ஆம் திரு. ...)

(பி-ம்.)— [1]பாடருமுமப. [2]புகழொருவினை,

இருகை மாஅல்
முக்கை முனிவ நாற்கை யண்ண
லைங்கைம் மைந்த வறுகை நெடுவே
ளெழுகை யாள வெண்கை யேந்த
*லொன்பதிற்றுத் தடக்கை மன்பே ராள
பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை யாற்ற
லாயிரம் விரித்தகைம் மாய மள்ள
பதினா யிரங்கை முதுமொழி முதல்வ
நூறா யிரங்கை யாறறி கடவு
ளனைத்து மல்லபல [1]வடுக்க லாம்ப
லினைத்தென வெண்வரம் பறியா யாக்கையை
நின்னைப் புரைநினைப்பி னீயல துணர்தியோ
முன்னை மரபின் முதுமொழி முதல்வ
நினக்குவிரிந் தகன்ற கேள்வி யனைத்தினும்
வலியினு மனத்தினு முணர்வினு மெல்லாம்

---

௩௩. அமிர்துண்டலை மறப்பித்த காமமகிழ்ச்சி பின் இறத்தற்குக் காரணமாயினமையின், 'நகையச்சாக' என்றார்.

௩௪. இருதிறத்தாரும் கடைய ஒரு திறத்தார்க்கே இட்டகை 'நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை' எனப்பட்டது; அவுணர்க்கெனவும் அமரர்க்கெனவும் வருவித்துரைத்ததூஉம் இது நோக்கி.

௩௫. இருகைமாலே!

௩௬ - ௪௩. †தனக்கோர் வடிவும் பெயரும் இன்றி அன்பாயினோர் கருதிய வடிவே வடிவாகவும் அவர் இட்ட பெயரே பெயராகவுமுடையனாதலின், 'முக்கை முனிவ' என்பது முதலாக 'நூறாயிரங்கையாறறிகடவுள்' என்பது ஈறாக வடிவுவேற்றுமையும் பெயர் வேற்றுமையும் சொல்லப்பட்டன.

௪௪ - ௬. அவ்வளவுமல்ல பலவாக அடுக்குதலையுடைய ஆம்பலென்னும் எண்தாம் இனைத்தென்னும் எண்ணிற்கு எல்லையறியப்படாத வடிவினையுடையை; நின்னை உயர்வுகூறக்கருதின் அது நீயே உணரினல்லது பிறரால் உணரப்படுதியோ?

௪௭. அநாதியாய் வருகின்ற மரபினையுடைய வேதத்திற்கு முதல்வ!

௪௮ - ௫௦. விரிந்து அகன்ற ஆகமங்களனைத்தானும் அகங்காரத்தா

---

* "ஒன்பானிறு தியுருபுநிலை" (தொல். குற். இள. ௩.) என்பதனுரையில், 'ஒன்பதிற்றுத் தடக்கை' மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளது.

† "மனக்கோ ணினக்கென வடிவுவே றிலையே" (பரி. ௪ - வரி ௫௬.)

(பி-ம்.)— 1 அடுக்காம்பல்.

[1]வனப்புவரம் பறியா மரபி னோயே
யணிநிழல் வயங்கொளி யீரெண் டீங்கதிர்ப்
பிறைவளர் நிறைமதி யுண்டி
யணிமணிப் பைம்பூ ணமரர்க்கு முதல்வனீ
திணிநிலங் [2]கடந்தக்காற் றிரிந்தயர்ந் தகன்றோடி
நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணிநெகிழ் பவிழ்தண்டா
ரன்னவர் படவல்லா வவுணர்க்கு முதல்வனீ
அதனால், பகைவ ரிவரிவர் நட்டோ ரென்னும்
வகையு முண்டோநின் மரபறி வோர்க்கே
யாயிர வணர்தலை யரவுவாய்க் கொண்ட
சேவ லூர்தியுஞ் செங்கண் மாஅ
[3]லோவெனக் கிளக்குங் கால முதல்வனே

னும் மனத்தானும் உணர்வினானும் மற்றும் எல்லாவற்றானும் நினக்கு வனப்பும் எல்லையும் அறியப்படாத மரபினோய்,

௪௯. வலியுடையதனை வலியென்றார்.

௫௧ - ௩. மதியென்பதனை அழகிய குளிர்ச்சிமிகுமதி, ஒளிமதி, பிறையாய் வளர்மதி, நிறைமதியென வினைத்தொகையடுக்கொடு கூட்டியும் இனிய கலைகள் பதினாறினையுமுடையமதியென வேற்றுமைத்தொகையாகக்கூட்டியுமுரைக்க.

௫௨ - ௩. * அம்மதியை உணவாகவுடைய அமரர்க்கு முதல்வன் நீ;

௫௪ - ௬. மயங்கி நினக்குப் பிழைசெய்து, நீ அணுத்திணிந்த நிலவுலகத்தை அளக்க அப்பெருமையைக்கண்டு நின்னை அஞ்சி அகன்றுபோய்க் கடற்கட்பாய்ந்த அத்தன்மையையுடைய அவுணர்க்கும்அகப்பட அவ்வாறு பிழைசெய்யாது நின்ற அவுணர்க்கும் முதல்வன் நீ;

௫௫ - ௬. கட்டவிழ்ந்து மலர்ந்த தண்டாரையுடைய அன்னவரென்க.

திரிந்து அயர்ந்து அஞ்சி அகன்று ஓடி என்னும் செய்தெனெச்சங்கள் பாய்ந்த என்னும் வினைமுதல்வினைகொண்டன.

௫௭. அதனால் - அத்தன்மையையுடைய இருதிறத்தார்க்கும் நீ ஒத்திருத்தலால்,

௫௭ - ௮. நின் இயல்பினை அறிவார்க்கும் இவர் பகைவர் இவர் நட்டோரென்னும் கூறுபாடுண்டோ?

௫௯ - ௬௧. ஆயிரமாகிய கிளர்ந்த தலையையுடைய அரவை வாய்க்கட்கொண்ட நின் ஊர்தியாகிய சேவலும் நொந்து, செங்கண்மாலே! ஓ! என அலறும் காலமுதல்வன் நீ;

* " அருந்தவானவர்க் காரமு தன்புட னளிப்போன் " (வில்லி-பாரதம், குருகுல. ௨௭)

(பி-ம்.)— [1]வனப்பறியா. [2]கடந்தகாற். [3]ஓலெவன.

1யேஎ இனகிளத்தலி னினைமைநற் கறிந்தனந்
தீயினுட் டெறனீ பூவினு ணாற்றநீ
*கல்லினுண் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ
யறத்தினு ளன்புநீ மறத்தினுண் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுட ரொளியுநீ திங்களு ளளியுநீ
யனைத்துநீ யனைத்தினுட் பொருளுநீ யாதலி
னுறைவு முறைவது மிலையே யுண்மையு
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை
முதன்முறை யிடைமுறை கடைமுறை தொழிலிற்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே —

என்றது, நீ இந்திரற்கு இளையோனாய் அசுரரை வெல்கின்ற காலத்து 'இவ்வெற்றியெல்லாம் இவனின் ஆயவல்ல; இவனைத் தாங்கிச் செல்கின்ற என்னின் ஆய' என்று கருடன் தன்னை வியந்திருப்ப, அக்கருத்தை ஒழித்தற்பொருட்டு 'நீ என் மெய்ம்முழுதும் தாங்கல் வேண்டா; ஒருகையிற் சிறுவிரற்றுணை தாங்கினையெனின் நீ கூறியவாறே யாகும்' என்று அத்துணை அவன்மேல்வைப்ப அவ்விரற்கு ஆற்றாது பாதலத்து வீழ்ந்து நெடுங்காலம் கிடந்து துதித்தான்; அத்தன்மைத்தாய வலி தாழக்கொண்ட மெய்களினு முடையையென்றவாறு.

௬௧. காலமுதல்வன் – காலத்திற்கு முதல்வன்

௬௨. நின்னைச் சாமவேதம் இத்தன்மையையெனச் சொல்லுதலின் இத்தன்மையை விளங்க அறிந்தனம்.

உபசாரவழக்கால் ஏஎ என்னுமிசையுடையதனை 'ஏஎ' என்றார்.

இனி அறிந்தவாறு :—

௬௩. தெறல் – வெம்மை. நாற்றம் - மணம்.

௬௪. மணி – மணியாந்தன்மை.

௬௫. அன்பு - மென்மை. மைந்து - வன்மை.

௬௬. மறை – உபநிடம். முதல் – ஆகாயம்.

௬௭. வெஞ்சுடர் - ஆதித்தன்.

௬௮ – ௭௰. இனிச் சொல்லாத எல்லாப் பொருளும் நீ; அவற்றின் உட்பொருளும் நீ; ஆதலால் நீ உறைதலுமில்லை; உறையுமிடமுமில்லை; மறவியுடையார் மறவியில் சிறப்புப்பெறுதல் காரணமாக அவை நினக்கு உளவாந்தன்மையும் பொய்; மேற்சொல்லிய தன்மையையாதலான்.

௭௰. ஆர் - அசை.

௭௧ – ௨. உலகில் முதலினும் இடையினும் இறுதியினும் படைப்பு

* நான்மணி. ௭ ; சீவக. ௬ பார்க்க.

(பி-ம்.)— 1ஏஎயெனக்.

பறவாப் பூவைப் பூவி னோயே
யருள்குடை யாக வறங்கோ லாக
விருநிழல் படாமை மூவே ழுலகமு
மொருநிழ லாக்கிய வேமத்தை மாதோ
பாழெனக் காலெனப் பாகென வொன்றென
விரண்டென மூன்றென நான்கென வைந்தென

---

அளிப்பு அழிப்பென்னுந் தொழில் வேற்றுமைபற்றிப் பிறவாப்பிறப்புடையையல்லை; அங்ஙனம் பிறந்துவைத்தும் பிறப்பித்தோரையுடையை யல்லை.

௭௩. காயாம் பூவின் நிறத்தினை யுடையோய்!

பறவாப்பூவை, வெளிப்படை. பூ - ஆகுபெயர்.

௭௪. கோல் - காம்பு.

௭௬. முழுநிழற்கண்ணவாகச் செய்த.

மாதோ, அசை.

௭௭. பாழ் - புருடன்.

சாங்கியர் பிறிதொன்று பிறத்தற்கிடனாகாதென்பவாகலான், அவர் மதம்பற்றிப்புருடனை 'பாழ்' என்றார், ஈண்டுத்* தத்துவங் கூறுகின்றமையின்.

கால் - ஆகாய முதற் பூதங்களைந்தும்;

தாம் பிறவற்றிற்றோன்றுதலானும் பிற தோன்றுதற்கு இடனாதலானும் அவ்வாறு கூறப்பட்டன.

பாகு - வாக்கும் காலும் கையும் [1]பாயுவும் உபத்தமும் ஆகிய கன்மேந்திரியங்களைந்தும்.

இவையும் பூதங்களாயடங்குமாயினும் சொல்லல், இயங்கல், கொடுத்தல், விடுத்தல், இன்புறுதலென்னும் தொழிலாற் பாகுபட்டமையிற்பாகென்றார்; கூறுபட்ட பொருள்களைக் கூறென்றாற்போல.

ஒன்று - ஆகாயத்தின்பண்பாகிய ஓசை.

எல்லாப்பண்பிற்கும் முற்றோன்றுதலான் ஒன்றெனப்பட்டது.

இங்ஙனம் பிறப்புமுறைபற்றி எண்ணாற் கூறப்படுதல் வருகின்றபண்புகட்குமொக்கும்.

௭௮. இரண்டு - காற்றின் சிறப்புப் பண்பாகிய ஊறு. மூன்று - தீயின் சிறப்புப்பண்பாகிய உருபு. நான்கு - நீரின்சிறப்புப்பண்பாகிய சுவை. ஐந்து - நிலத்தின் சிறப்புப்பண்பாகிய நாற்றம்.

இரண்டு முதலாகிய எண்கள் நான்கும் ஈண்டுப் புரணப் பொருளவாய் நின்றன.

---

* ௨௭ - ஆம் திருக்குறளின் விசேடவுரையில் இவ்வுரையாசிரியரெழுதியவாற்றாலும் இங்கேயுள்ள தத்துவமுறைகள் நன்கு உணரலாகும்.

(பி-ம்.)—1 பாயுரும்.

வாறெனை வேழெனை வெட்டெனைத் தொண்டெனை
நால்வகை 1யூழியெண் ணவிற்றுஞ் சிறப்பினை
*செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅ
லிடவல குடவல கோவல காவல

---

எகூ. ஆறு - செவி தோல் கண் நா மூக்கு என்னும் ஞானேந்திரியங்களைந்தும் மனமும்.

மனத்தொடுகூட இந்திரியங்கள் ஆறென்பாருமுளராதலின் ஒருங்கோதினார்.

ஏழு - அகங்காரம். எட்டு - மான். †தொண்டு - மூலப்பகுதி.

மனம் தொடங்கிச் சிறப்புமுறைபற்றி எண்ணுகின்றாராகலின், இவற்றை இவ்வெண்களாற் கூறினார். ஈண்டும் ஏழு முதலாய எண்கள் புரணப்பொருள.

அ0. நால்வகையுகங்களினும் இவ்வெண்களால் நவிலப்படுஞ் சிறப்பினையுடையை,

என்றது, பூதங்களைந்தும் கன்மேந்திரியங்களைந்தும் ஞானேந்திரியங்களைந்தும் புலன்களைந்தும் மனமுதலிய அந்தக்கரணங்கள் மூன்றும் மூலப்பகுதியும் புருடனுமெனப்பட்ட தத்துவம் இருபத்தைந்தனுளும் எக்காலத்தும் ஆராயப்படும் பெருமையையுடையையென்றவாறு.

அக. செங்கட்காரி-வாசுதேவனே! கருங்கண் வெள்ளை-சங்கருடணனே!

அஉ. பொன்கட்பச்சை - சிவந்த உடம்பினையுடைய காமனே!

பச்சையென்பது பிரத்தியும்நனென்னும் வடமொழித்திரிபு.

பைங்கண்மால்- பசிய உடம்பினையுடைய அநிருத்தனே!

நால்வகை வியூகமுங் கூறியவாறு.

அங. இடவல - ஆய்ச்சியரொடு குரவைகோத்தலால் அவர்க்கு இடமும்வலமும் ஆயினோய்! குட அல - ‡கூத்தாடுதற்கு எடுத்த குடத்தினையும் பகைவரைக்கொல்லுதற்கு எடுத்த அலப்படையினையுமுடையோய்.

'இடவலவ', 'குடவலவ' என்றபாலன செய்யுள் விகாரத்தாற் குறைந்து நின்றன.

---

* திருச்சந்த விருத்தம், சச பார்க்க. † தொண்டு—ஒன்பது.

‡ குடக்கூத்தென்பது திருமாலிற்குரிய கூத்துக்களுள் ஒன்று; அதற்குரிய உறுப்புக்கள் ஐந்து; "குடத்தாடல் குன்றெடுத்தோ னாடலதனுக், கடைக்குப வைந்துறுப் பாய்ந்து". "வாணன் பேரூர் மறுகிடை நடந்து நீணில மளந்தோ னாடிய குடமும்" (சிலப். 6 : 54 - 5.) அக்கூத்தாவது தலையிலே அடுக்குக்குடமிருக்க இரண்டு தோள்களிலும் குடமிருக்க

---

(பி-ம்.)— 1ஊழியுமெண.

காணா மரப நீயா நினைவ
மாயா [1]மன்ன வுலகாண் மன்னவ
தொல்லியற் புலவ நல்லியாழ்ப் பாண
மாலைச் செல்வ தோலாக் கோட்ட
பொலம்புரி யாடை வலம்புரி வண்ண
பருதி வலவ பொருதிறன் மல்ல
திருவின் கணவ பெருவிறன் மள்ள
மாநில மியலா முதன்முறை [2]யமையத்து
நாம வெள்ளத்து நடுவட் டோன்றிய
வாய்மொழி மகனொடு மலர்ந்த
தாமரைப் பொகுட்டுநின் னேமி நிழலே.

**கடவுள் வாழ்த்து.**
**கடுவனிளவெயினனார் பாட்டு.**
**பெட்டனாகனார் இசை.**
**பண்ணுப் பாலையாழ்.**

---

அச. காணாமரப - அறியப்படாத மரபினோய்! நீயா நினைவ - அன்பரது விடாத நினைவின்கண்ணோய்!

அரு. மாயா மன்ன - மாயாத மன்னும் நிலையையுடையவனே!

அஎ. மாலைச்செல்வ - வனமாலையையணிந்த செல்வனே!

அஅ. பொலம்புரியாடை - பொன்னிறத்தான்மிக்க ஆடையினையுடையாய்!

'பொலம்புரியாடை' என்னும் ஆகுபெயர் அண்மைவிளியேற்று நின்றது.

அகூ. பருதிவலவ - ஆழியை வலப்பக்கத்து உடையாய்!

கூO. மள்ள - வீர!

கூக - ச. நிறைந்த வெள்ளத்து நடுவு தோன்றிய மாநிலந்தோன்றாத முதற்காலத்துப் பிரமனைக் கொண்டு உந்திக்கண்மலர்ந்த பொகுட்டுத் தாமரையையுடையநின் நேமியே உலகிற்கு நிழலாவது. எ-று.

'தாமரைப்பொகுட்டு' என்பது, வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை. (௩)

---

இரண்டு கைகளிலும் குடங்களை ஏந்தி ஆகாயத்திலே எறிந்து ஆடுவதென்பர்; "குடங்க ளெடுத்தேற விட்டுக் கூத்தாடவல்லவெங் கோவே", "குடமாடீ", "குடமாடிய கூத்தனை", "குடமாடுதடமார்பர்" என்னும் பெரியார் திருவாக்குக்களும் ஈண்டு அறியற்பாலன; (திவ்)

(பி-ம்.)— [1]மன்னவ. [2]அமைந்த.

## நான்காம் பாடல்.

### திருமால்.

ஐந்திரு ளறநீக்கி நான்கினுட் டுடைத்துத்த
மொன்றாற்றுப் படுத்தநின் னார்வலர் தொழுதேத்தி
நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கா லவைநினக்
கிறும்பூ தன்மைநற் கறிந்தே மாயினு
நகுதலுந் தகுதியீங் கூங்குநிற் கிளப்பத்
திருமணி *திரைபா டவிந்த முந்நீர்
வரு †மழை யிருஞ்சூன் மூன்றும் புரையு மாமெய்

---

(நான்காம் பாடலுரை).

க - உ. செவிமுதலாய இந்திரியமைந்தையும் மயக்கமற நீக்கி, மைத்திரி, கருணை, முதிதை, இகழ்ச்சியென்னும் நான்கினாலும் சித்தத்தை மாசறுத்துத் தம்மைச்சமாதியாகிய ஒருநெறிக்கண்ணே படுத்திய நின் அன்பர்,

ஈண்டு ஐந்தென்றது ஐந்தன்காரியங்களை. ஐந்தையுமெனவும் நான்கினாலுமெனவும்வந்த முற்றும்மைகள் செய்யுள்விகாரத்தால் தொக்கன.

மைத்திரிமுதலிய நான்கும் சித்தத்தை அழகுசெய்தலின், அவற்றை வடநூலார் சித்தபரிகருமமென்ப.

ங - ரு. அப்புகழ்களெல்லாம் நினக்கு இயல்பாவதல்லது வியக்கப்படுவன அல்லாமையை அறிந்துவைத்தும் அத்தன்மையமல்லாத யாங்கள்அவற்றுட் சிலவற்றை ஈங்கும் ஊங்குமாகப் பிறழக் கூறுவதற்கு நீ நகுதலும் எமக்கு ஒரு தகுதியாம்; அதனால் யாம் கிளத்தலும் ஒழிதற்பாற்றன்று.

சு - எ. திருமணியும் முந்நீரும் காலத்தின்கண்வரும் சூன்மேகமுமாகிய இம்மூன்றையு மொக்கும், கரியமேனி.

அடுத்துவரலுவமை.

திரைகிளர்ந்தவழி வெண்மையுடைமையின் 'திரைபாடவிந்த' என்றார்.

'மழையிருஞ்சூல்' என்பதனை மேல் ‡ 'தாமரைப்பொகுட்டு' என்றது போலக்கொள்க.

---

* "திரைபாடவிந்த" என்பது, அவிதல் குறைதலென்பதற்கு மேற்கோள்; (சீவக. 289-ந.)

† "உள்ளூர்-ஊர்நடு ; முன்பின்னாகத்தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை;...இவ்வுரையாசிரியர், வடநூன்மரபும் வடநூலை மொழிபெயர்த்துச் செய்த வீரசோழியமுதலிய பின்னூலுங்கண்டு இவ்வாறுரைத்தார் போலுமென்க; பரிபாட்டினுள், 'மழையிருஞ்சூல்' என்பதனை முன்பின்னாகத்தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை யென்றார், இவ்வுரையாசிரியர்; ஆகையால் அவர்கருத்து எம்மனோர்க்கு அறிதலரிதென்க" திருக்குறள் நுண்பொருண்மாலை, உகக; (செந்தமிழ், எ-ஆம் தொகுதி அகூ-ஆம் பக்கம்.)

‡ பரிபாடல், ங - வரி கூச.

மாஅ மெய்யொடு முரணிய வுடுக்கையை
நோனா ருயிரொடு முரணிய நேமியை
செயிர்தீர் செங்கட் செல்வ [1]நிற் புகழப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற்
பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி, மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்
தலர்ந்த புகழோன் றாதை யாகலி
னிகழ்வோன், இகழா நெஞ்சின னாகநீ யிகழா
நன்றா [2]நட்டவவ னன்மார்பு முயங்கி
யொன்றா நட்டவ னுறுவரை மார்பிற்
படிமதஞ் சாம்ப வொதுங்கி
யின்ன லின்னரொ டிடிமுர சியம்ப
[3]வெடிபடா வொடிதூட் டடியொடு
தடிதடி பலபட [4]வகிர்வாய்த்த வுகிரினை
[5]புருவத்துக் கருவல் [6]கந்தத்தாற்
றாங்கியிவ் வுலகந் தந்தடிப் படுத்ததை நடுவ்
ணோங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்

அ. முரணுதல் - பொன்னிறத்ததாய் மாறுகோடல்.

க0. செயிர்தீர்செங்கண் - கோபத்தாலன்றி இயல்பாகவேசிவந்தகண்.

க0 - உக. பிருங்கலாதன் நின்னைப் புகழ்தலாலே இரணியன் சினத்தீ யாற் புகைந்த நெஞ்சொடும் புலர்ந்த சாந்தொடும் அவன் பலபல பிணி கள்படப் பிணித்தவழி அம்மிக்க நோயால் ஒடுங்குதற்குக் காரணமான நடுக்கத்தையுடைய அப்பிருங்கலாதன் தன் தாதையாகலின் அவ்விகழப்படு வோனை இகழாத நெஞ்சினனாக, நீ அவனை இகழ்ந்து தனக்கு நன்றாகநட்ட அப்பிருங்கலாதன் வருந்தாமல் அவன்நெஞ்சிற்பொருந்தி நின்னோடு ஒன்றாக வரங்கொண்ட இரணியனது உறுவரைபோலும் மார்பிற் பகைவலி கெடச் சென்று துன்பத்தைக்காட்டும் உற்பாதங்களோடு பொருந்தி அவன் இடி முரசுஒலிப்ப நீ புறப்படுதலால் வெடித்து ஒடிந்த தூணின் பிளப்போ டொத்த நின்னால் தடியப்பட்ட ஊன்தடி பலபடவகிர்தல்வாய்த்த உகிரினை. மார்பின் (கஎ) வகிர்த (உக) லென இயையும்.

* படி யென்பது பாகதச்சிதைவு. ஒருகாலத்தே இரண்டுதடியும்வீழ்ந் தனவென விரைவு கூறியவாறு.

உஉ - ச. முன் வெள்ளத்தழுந்தினகாலத்து வராகமாய்க் கருமையை

* "படிமதஞ்சாய்த்தோய்" என்பர் பின்னும்; அடி சஎ.

(பி-ம்.)— [1]சிற்புகழ்பு. [2]நட்டவன்வண்ணமார்பு. [3]வெடிபட. [4]வகிர்தல் வாய்த்த. [5]பூருவத்து. [6]கந்தரத்தாற்.

நின், *வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமும் வண்மையும் †பூவையுள
நின், தோற்றமு மகலமு நீரினுள
நின், உருவமு மொலியுமா காயத்துள
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள

யும் வன்மையையுமுடைய கழுத்தாற்றுங்கி இவ்வுலகத்தை அவ்வெள்ளத்தினின்றும் எடுத்துத் திருத்தியதொழில் மேருவின் தொழிலோடொக்கும்.

உரு. ஞாயிற்றுள - ஞாயிற்றின்கண்ணே காணப்படாநின்றன.

வருகின்றவற்றையும் இவ்வாறு உரைக்க.

உசு. சாயல் - மென்மை; திங்களின்கண்ணேயுள.

உரு - கூ. வெம்மை தண்மையென்றது பகைவர்மாட்டு வெகுளுதலையும் அன்பர்மாட்டு அருளுதலையும்.

உஎ. சுரத்தல் - கொடுக்கக் கொடுக்கப் பொருள்வளர்தல். வண்மை-கொடை.

உஅ. புரத்தல் - தாங்குதல். நோன்மை-பொறை.

உகூ. பூவை - பூவைப்பூ.

௩௰. தோற்றம் - வெளிப்படுதல். அகலம் - பெருமை.

நாராயணனென்னுந்திருநாமம் நீரின்கட் காணப்படுதலாகிய இக்காரணம்பற்றி வந்தது.

௩க. உருவம் - ஞானக்கண்ணாற் காணப்படும் உருவம். ஒலி - சொல்; ஆகாயத்துளவென்றார், அதன் பண்பாகலின்.

௩௨. வருதல் - அவதரித்தல். ஒடுக்கம் - மீண்டு சென்றடங்குதல். மருத்து - காற்று.

* "ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள்சீக்குஞ் சுடரேபோல், வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையு, நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக், காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையும்" (கலி. க௦௦); "ஞாயி றனையைநின் பகைவர்க்குத், திங்களனையை யெம்மனோர்க்கே" (புறநா. ருகூ.)

† பூவைநிலையென்னுந் துறை ஈண்டு அறியற்பாலது.

அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவு
மேம மார்ந்த [1]நிற் பிரிந்து
மேவல் சான்றன வெல்லாஞ்
சேவலோங் குயர்கொடி யோயே
சேவலோங் குயர்கொடி
நின்னொன் றுயர்கொடி பனை
நின்னொன் றுயர்கொடி நாஞ்சி
னின்னொன் *றுயர்கொடி யானை
நின், [2]ஒன்று வுயர்கொடி யொன்றின்று
விடமுடை யரவினுட [3]லுயிருருங் குவணம்
அவன், மடிமேல் வலந்தது பாம்பு

௩௩-௫. இவையும் உவையும் அவையும் பிறவுமாய் நின்கணின்று பிரிந்து நின்னால் ஏமமுற்றனவெல்லாம் பின்னும் நின்னொடு மேவலமைந்தன.

என்றது, உலகுயிர்களின் தோற்றமும் நிலைபேறும் ஒடுக்கமும் நின்கண்ணவென்றவாறும்.

† இவை யென்றது அணியவற்றை; உவை யென்றது அவற்றிற்சேய வற்றை; அவை யென்றது அவற்றினும் சேயவற்றை; பிறவென்றது காணப்படாதவற்றை.

௩௭-௪௨. சேவலோங்கு உயர்கொடியையுடைய நின்னுயர்கொடி ஒன்று பனை. இவ்வண்ணம் பலகொடியுளவேனும் நின் ‡ஒன்றாக உயர்ந்த கொடியை அக்கொடிகள் ஒன்றுதலின்று; தன்......ம் பாம்பின் விடத்தையும் உடலையும் உயிரையும் உண்ணும் உவணமாதலால்.

௪௧. ஒன்றுதல் - முதலாதல், ஒன்றுதல் - ஒத்தல்.

௪௩. இன்னும் அது கடவுட்கொடியென்பதுதோன்ற 'அவன்' என உயர்திணையாற் கூறினார்; செய்யுளாகலிற் §சுட்டுப்பெயர் முற்கூறப்பட்டது.

* "பணைமிசை யெழில்வேழ வேந்திய...ஒருவனை" (பரி. ௧.)

† "அஅவனும் இஇவனும் உஉவனுங் கூடியக்கால், எஎவனை வெல்லாரிகல்" (யா-வி. சூ. ௭. மேற்); "இங்கிவ ரிங்கிவ ரங்கவ ரங்கவ ருங்குவ ருங்குவரே", "இந்நிரை யிந்நிரை யந்நிரை யந்நிரை யுந்நிரை யுந்நிரையே" (திருவாலவாய். ௩௯ : ௨௫, ௨௬.)

‡ புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண். செய். ௩௪.

§ தொல். கிளவி. ௩௯ - ஆம் சூத்திரம் இதற்குவிதி.

(பி-ம்.)— [1]நிற்பிரிந்த. [2]ஒன்றுயர்கொடி. [3]உயிர்நுங்குவணம்.

பாம்புதொடி பாம்பு முடிமேலன
பாம்புபூண் பாம்பு தலைமேலது
பாம்புசிறை தலையன
பாம்பு, படிமதஞ் சாய்த்தோய் பசும்பூணவை
கொடிமே லிருந்தவன் றாக்கிரை யதுபாம்பு
கடுநவை யணங்குங் கடுப்பு நல்கலுங்
கொடுமையுஞ் செம்மையும் வெம்மையுந் தண்மையு
முள்வழி யுடையை யில்வழி யிலையே
போற்றா ருயிரினும் போற்றுந ருயிரினு
மாற்றே மாற்ற லிலையே நினக்கு
மாற்றா ருமிலர் கேளிரு மிலரெனும்

---

௪௩. வயிற்றின்மேல் உதரபந்தமாய் வலந்தது.

* "படியை மடியகத் திட்டான்" என்புழியும் வயிறு மடியெனப் பட்டது.

௪௪. முடிமேலன - கண்ணிகள்.

௪௫. பூண் - கழுத்திற்பூண்பது. தலைமேலது - சூட்டு.

௪௬. சிறகுகளின் தலையிடத்தன.

விகாரத்தால் ஒற்றுக் குறைந்தது.

௪௭. பகைவர் மதங்கெடுத்தோய்! பசும்பூணவை-பொன்னிறத்தவை.

௪௮. தாக்கிரை - எறிந்தெடுக்கும் இரை.

இதனாற் கருடனுக்கு அறனுடைமையும் மறனுடைமையும் கூறப்பட்டன.

௪௯ - ௫௪. †கடுநவையுண்டாக வருத்தும் வெகுளியும் அருளும் கோட்டமும் செப்பமுமாகிய இவை மறமும் அறமும் உடையாரிடத்து உடையையாய் இல்லாரிடத்து இல்லாயாயிருத்தலல்லது மாற்றாருயிரின்கண்ணும் கேளிருயிரின்கண்ணும் அதனை மாற்றுதற்றொழிலும் அதற்கு ஏமஞ்செய்தற்றொழிலுமுடையையல்லை; நினக்கு மாற்றாரும் கேளிரும் இலராதலான்.

என்றது, குற்றமாகிய மறமுடையாரிடத்து வெகுளியும் கோட்டமுமுடையையாய் அஃது இல்லாரிடத்து இல்லையாதலும், குணமாகிய அறமுடையாரிடத்து அருளும் செம்மையுமுடையையாய் அஃதில்லாரிடத்து இல்லையாதலுமல்லது நினக்குப் பகையாயினாருயிரின்கண் அதனை மாற்

---

* நான்மணிக்கடிகை, கடவுள்வாழ்த்து.

† கடுநவை - கடியகுற்றம்; (கலி. ௧௨.)

வேற்றுமை யின்றது [1]போற்றுநர்ப் பெறினே
மனக்கோ ளினக்கென வடிவுவே றிலையே
கோளிரு ளிருக்கை யாய்மணி மேனி
*நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை
பொன்னிற் றோன்றிய புனைமறு மார்ப
நின்னிற் றோன்றிய நிரையிதழ்த் தாமரை
யன்ன நாட்டத் தளப்பரியவை

றுதற்றொழிலும் நினக்குக் கேளிராயினருயிரின்கண் அதற்கு ஏமஞ்செய் தற்றொழிலும் உடையையல்லை; †அவ்விரு திறத்தாரும் நினக்கு இன்மை யானென்றவாறு.

௫௫. இவ்வாற்றான் இருதிறத்தாரும் நினக்கு இலரென்றாலும் முன் 'உள்வழி யுடையை', 'இல்வழியிலை' (௫௧) என்ற அதனொடு வேறுபாடின்று, அஃது உணர்வாரைப்பெறின்.

என்றது, உயிர்களது இயல்பால் நினக்குப் பகையும், நட்பும் உளபோலத் தோன்றுவதல்லது நின் இயல்பான் அவை உளவல்லவென்றவாறும்.

௫௬. ‡அன்பர் மனத்திற் கொண்டனவன்றி நினக்கென வேறு வடிவு உடையை யல்லை.

௫௭ - அ. கண்ணைக் கொள்ளுதலையுடைய இருட்கு இடமாய நீலமணி போலும் மேனிக்கட் பிணிவிட்டலர்ந்த துழாயது நாறிணராற்றொடுத்த கண்ணியையுடையை.

௫௯. நிறத்தாற் பொன்போலத் தோன்றிய புகழப்படும் மறுவை யுடைய மார்ப !

§ திருமகளாதலால், 'புனைமறு' என்றார்.

௬௰ - ௬௧. நின் உந்தியிற்றோன்றிய தாமரைபோலும் நாட்டத்தை யுடையையாய் அளத்தற்கரியை;

* "கமழ்குரற்றுழாஅ, யலங்கற்செல்வன்" (பதிற். ௩௧.)

† "வேண்டுதல் வேண்டாமை யிலான்" (திருக்குறள், ௪.)

‡ இந்நூல், ௩-ஆம் பாடலின் ௩௬ - ௪௩ ஆம் அடிகளின் உரையைப் பார்க்க. "பேசுவா ரெவ்வளவு பேசுவ ரவ்வளவே, வாசமலர்த்துழாய் மாலையான் - றேசுடைய, சக்கரத்தான் சங்கினான் சார்ங்கத்தான் பொங்கரவ, வக்கரனைக் கொன்றான் வடிவு" (திவ். மூன்றந்திருவந்தாதி, ௨௧.)

§ "திருமறுமார்பு" என்பதற்குத் திருவாகிய மறுவையணிந்த மார்பென்று இப்படியே பொருளெழுதினர் (பெரும்பாண். ௨௯-௩.)

(பி-ம்.)—1 போற்றினர்.

நின்னிற் சிறந்த நின்றா ளிணையவை
நின்னிற் சிறந்த நிறைகட வுளவை
யன்னோ ரல்ல வேறு முளவவை
நின்னோ ரன்னோ *ரந்தண ரருமறை
யழல்புரை குழைகொழு நிழறரும் பலசினை
யாலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவு
மவ்வவை மேய வேறுவேறு பெயரோ
யெவ்வயி னோயு நீயேநின் னார்வலர்
தொழுதகை யமைதியி னமர்ந்தோயு நீயே

---

௬௨. வீடளிக்குங்கால் நின்னினுஞ்சிறந்த நின் தாளிணையையுடையை ;

௬௩. நின்கட்சிறந்த நிறைந்த கடவுட்டன்மையையுடையை;

௬௧ - ௩. அகரங்கள் இசைநிறையும் இடைச்சொல்.

௬௪ - ௫. அத்தன்மையவல்லாத இயல்புகள் நினக்கு வேறுமுள ; அவை நின்னையொத்த தெய்வமுனிகளுணரும் உபநிடப்பொருள் ; யாம் உணர்வனவல்லவென்றவாறு.

௬௫. 'அன்ன' எனற்பாலது 'அன்' எனக்குறைந்து நின்றது. †'ஓர்' இரண்டும் அசைநிலை. அருமறை, ஆகுபெயர்.

௬௬ - ௭௦. அழல்புரை குழையையும் நிழலைத்தரும் சினையையுமுடைய ‡ ஆலும் கடம்பும் யாற்றிடைக்குறையும் குன்றும் பிறவுமாகிய அவ்விடங்களைப் பொருந்திய பலதெய்வங்களாக வகுத்துச்சொல்லப்படும் பெயரையுடையோய்!

௬௮. காற்றும் வழங்காத திணிந்த நிலைமையையுடைய குன்றமென்க.

௭௦ - ௭௧. நின் அன்பர் தொழுத கையினது தாழ்ச்சிக்கண் அகப்பட்டோயும் நீ.

---

* "அந்தணாருமுனர்" (பரி. ௧, ௨; இறை சூ. ௧.)

† "தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலும்" (ஆத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயிரம்) என்பதிலும் ஓர் அசைநிலையாய் அமைந்திருத்தல் காண்க.

‡ "துறையு மாலமுந் தொல்வலி மராஅமும், முறையுளி பராஅய்", "ஆலுங் கடம்பு மணிமார்" (கலி. ௧௦௧, ௧௦௯); "கடவுளாலத்து" (நற். ௩௪௩; புறநா. ௧௯௯); "புதுப்பூங்கடம்பும்" (முருகு. ௨௨௫) என்பவற்றாலும் ஆல் முதலியவற்றில் தெய்வமுறைதல் அறியப்படும்.

யவரவ் ரேவ லாளனு நீயே
யவரவர் செய்பொருட் *கரணமு நீயே.

கடவுள் வாழ்த்து.
கடுவனிளவெயினனார் பாட்டு.
பெட்டனாகனாரிசை.
பண்ணுப் பாலையாழ்.

---

எ௨. நினைத்தன முடித்தலான், அவரவர் ஏவல் செய்வானும் நீ.
எ௩. அவரவர் செய்த பொருள்கட்குக் காவலும் நீ.
செய்பொருளாவன: அறம், பொருள், இன்பம், வீடென்பன.
எ௦ - எ௩. ஏகாரம் நான்கும் ஈற்றசை. (சு.)

---

* திருச்சந்தவிருத்தம் ௬௬ ஆவதில் "வரந்தர மிடுக்கிலாததேவரை, யாணமென்றடைந்து வாழு மாதர்காள்" என்புழிக் காவலென்னும் பொருளில் ஆணமென்பது எதுகையில் வந்திருத்தலால், இங்கே 'ஆணமு நீயே' எனப்பாடங்கொள்ளுதலும் பொருந்தும்.

# ஐந்தாம் பாடல்.

## செவ்வேள்.

*பாயிரும் பனிக்கடல் †பார்துகள் படப்புக்குச்
‡சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்

---

(ஐந்தாம் பாட்டுரை.)

க. பரந்த கரிய குளிர்ச்சியையுடையகடலை இடையிற்பாறைகள் பிதிர்ந்து துகள்படப் புக்கு.

உ. சேயுயர் - மிக உயர்ந்த, §பிணிமுகம் - முருகற்குரித்தாகியயானை.

---

* "இறைவன் உமையை வதுவைசெய்துகொண்டநாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பாமுகிப் புணர்ச்சிதவிர்ந்து கருப்பத்தை இந்திரன்கையிற் கொடுப்ப அதனை இருடிகளுணர்ந்து அவன்பக்கனின்றும் வாங்கித் தமக்குத்தரித்தல் அரிதாகையினாலே இறைவன்கூறுகிய முத்தீக்கட்பெய்து அதனைத் தம் மனைவியர் கையிற் கொடுப்ப அருந்ததியொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறு கூறுகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறு வடிவுமொன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறுகிய வேறுபட்ட கூற்றாலே மண்டிச்சென்றதென்று புராணம் கூறிற்று. இதனை, 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பரிபாடற் பாட்டானுணர்க" என்பதும், "அங்ஙனம் அங்கியின்கணிட்டுச் சத்தி குறைந்த கருப்பத்தை முனிவரெழுவரும் வாங்கித் தம்மனைவியர்க்குக் கொடுப்ப அருந்ததியொழிந்தோர் விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப்பொய்கையிற் பதுமப்பாயலிலேபெற ஆறு வடிவாக வளர்ந்தமை கூறிற்று....... இது பரிபாடலிற் 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பாட்டானுணர்க" என்பதும் திருமுருகாற்றுப்படையில் ருஅ, உருரு - ஆம் அடிகளின் விசேடவுரை; ந.

† "பார் - வன்னிலம்; முருகாற்றுப்படையுள், 'பார்முதிர் பனிக்கடல்' என்பதுமது; பரிபாட்டுள், 'பார்துகள்பட' என்பதுமது; அதனை இக்காலத்தார் சில்லந்தட்டிற்றென்பர்" என்பது திருக்குறள்நுண்பொருண்மாலை, கoகூஅ; (செந்தமிழ், கூ - ஆம் தொகுதி, பக்கம்-ருசகூ.)

‡ இவ்வடி, "பொடித்தரும்பாத" என்னும் கல்லாடச் செய்யுளில், 'பிணிமுக மஞ்ஞை' என்பதற்கு மேற்கோள்; (மயிலேறும்.)

§ " பிணிமுக வூர்தி யொண்செய் யோனும் " (புறநா. ருகூ); " ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (புறநா. உசஎ.)

தீயழ லுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை [1]நுடங்குசூர் மாமுத றடிந்து
வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய
கொன்றுண லஞ்சாக் [2]கொடுவினைக் கொஃறகை
மாய [3]வவுணர் மருங்கறத் தபுத்தவே
*நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை [4]யுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை

௩ - ௪. தீயின்கொழுந்து ஒலிப்பத் திரித்துவிட்டெறியப்பட்டு அச்சத்தையுடையனாதலால் நடுங்குகின்ற சூர்மாவினது முதலையறுத்து.

திரித்தென்பது திரியவெனத் திரிந்துநின்றது. விட்டெறிந்தெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது.

மாவென்னும் பெயரொப்புமைபற்றி 'முதறடிந்து' என்றார்.

௫ - எ. வென்றியுடைமையாற் புண்ணியசனம் பாவசனமென்று இருகூறாயமக்களுட் புண்ணியசனமென ஒருகூற்றாற்பெயர்பெற்ற அவுணர்.

அஃது அவர்க்குப் பெயர்மாத்திரமேயென்றற்குக் கொன்றுணலான் வரும் பாவத்திற்கு அஞ்சாதவென்றார்.

தீவினையினையும் கொல்லப்படும் தகைமையினையுமுடைய மாயத்தை வல்ல அவுணரென்க.

அவரைக்கிளையறக்கொன்றவேலால்.

விட்டெறிந்து (௩) தடிந்து (௪) தபுத்தவேல் (எ) என்க.

அ - ௧0. நாவலந்தீவினுள் வடகூற்றிற் கிரௌஞ்சமென்னும் மால்வரையைத் துளைத்து அத்துளைவழிப்படுத்தின ஆறுமென்றலையினையுடையாய்;

ஈண்டுக் குருகென்றது அன்றிலை. அதற்கு வடமொழிப்பெயர் அது வாதலின், 'குருகொடு பெயர்பெற்ற மால்வரை' என்றார். வழிப்படுத்துதல் - வழிக்கண் நிகழும் இயக்கத்தை அதன்கண் நிகழ்வித்தல். குழவிப் பருவத்து இவ்வீரமெல்லாம் செய்தாயென்னுங் கருத்தால், 'கயந்தலை' என்றார்.

* "பொருப்புவளன்வேண்டி" என்னும் கல்லாடச்செய்யுளில், 'குருகு பெயர்க்குன்றத்துடல்பகவெறிந்த, நெடுவேற்கடவுட்கு' என்பதன் விசேடவுரையில், 'நாவலந்தண்...உடைத்து' என்னும்பகுதி மேற்கோள்; (மயிலேறும்.)

(பி - ம்.)— [1]நுணங்குசூர். [2]கொதிவினை. [3]வல்லவுணர். [4]உடைத்தம்மலை.

மூவிரு கயந்தலை மூன்னான்கு முழவுத்தோண்
ஞாயிற்றேர் [1]நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் *கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவவெனப் பேஎ விழவினுள்
வேல னேத்தும் வெறியு முளவே
யவை, வாயு மல்ல பொய்யு மல்ல
நீயே [2]வரம்பிற்றிவ் வுலக மாதலிற்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினு [3]ளுயர்பாகலும்
பிறப்பினு [4]ளிழிபாகலு
மேஞோர்நின் வலத்தினதே

---

ஊர்ந்து (உ) புக்கு (க) உழக்கி (உ) உடைத்து (கூ) ஆற்றுப்படுத்த வெனக் கூட்டுக.

கக. † கயந்தலையென்பது பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; அஃது ஈண்டு ஆகுபெயராய் அண்மைவிளி ஏற்றுநின்றது.

கக - உ. மூவிருகயந்தலையுடனும் மூன்னான்கு முழவுத்தோளுடனும் ஞாயிற்றின் எழுச்சிபோலும் நிறவழகுடனும் தாமரைப்பூவின்கட்பிறந்த பிறப்பையுடையை.

கங. உலகத்தை அழிக்கும் கடவுட்கு மகனே!

கச. சால்வ - சால்பினையுடையாய்!

கச - ரு. நீவெளிப்படுதலிற் கண்டார்க்கு அச்சஞ்செய்யும் வெறியாட்டு விழவினுள் வேலன்கண்டு இவ்வாறு சொல்லி ஏத்தும் வெறிப்பாட்டுமுள.

கரு. வெறி, ஈண்டு ஆகுபெயர்.

கசு - உக. இவ்வுலகிற்கெல்லாம் தலைவன் நீயேயாகலான் அவ்விடத்து அவன்கண்டு ஏத்துகின்ற அப்பாட்டுக்கள் மெய்யுமல்ல; ஆயினும் நீ வெளிப்படுதலான் அவை பொய்யுமல்ல; அவற்றுள் ஒன்றாயவழி அத்தலை

---

* "கடவுட் புதல்வ" எனக்கொண்டு அதற்கு இலக்கணமுமெழுதுவர்; (முருகு. உருசு - ந.)

† "பெருவலி - பெருவலியையுடையன; பண்புத்தொகைப்புறத்து வந்த ஆகுபெயரென்றது ஆகுபெயரென்றார்; 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பரிபாட்டினுள், கயந்தலைக்குப் பண்புத்தொகைப்புறத்து வந்த அன்மொழி; ஈண்டு ஆகுபெயரென்றார் இவ்வுரையாசிரியர்" என்பது, திருக்குறள்நுண்பொருண்மாலை, ஙஅ0; (செந்தமிழ், தொ. எ; பக். ஙஉச.)

(பி - ம்.)— [1]நிறத்தகை. [2]வரம்பிற்றுலகம். [3]உயர்வு. [4]இழிவு.

யாதி யந்தண னறிந்து [1]பரி கொளுவ
வேத மாபூண் வையத்தே ரூர்ந்து
நாக நாணா மலைவில் லாக
மூவகை, ஆரெயி லோரழ லம்பின் முளிய
மாதிர மழலவெய் தமரர் வேள்விப்
பாக முண்ட பைங்கட் பார்ப்பா
னுமையொடு புணர்ந்த காம வதுவையு
ளமையாப் புணர்ச்சி [2]யமைய நெற்றி
யிமையா நாட்டத் தொருவரங் கொண்டு
விலங்கென விண்ணோர் வேள்வி முதல்வன்
விரிகதிர் மணிப்பூ ணவற்குத்தா னீத்த
தரிதென [3]மாற்றான் வாய்மைய னாதலி
னெரிகனன் றானாக் குடாரி [4]கொண் டவனுருவு
திரித்திட் டோனிவ் வுலகேழு மருளக்
[5] கருப்பெற்றுக் கொண்டோர் கழிந்தசே யாக்கை
நொசிப்பி னேழுறு முனிவர் நனியுணர்ந்து

மைச் சிறப்பினையுடைய நீ அச்சிறப்பின்றி ஒழிகுவை ; நின்னையொழிந் தார் நல்வினையாற் சிறப்புடைய உயர்பிறப்பினராதலும் தீவினையால் இழி பிறப்பினராதலுமாகிய இது நின்னுணைக்கண்ணது ; ஆதலின், அச்சிறப்பு நினக்கு ஒருகாலும் ஒழியாது ; அதனால் அவற்றுள் ஒன்றாகாது.

உ௨ - ௫௪. நான்முகனாகிய பாகன் கொளுவுமாறறிந்து செலவினைக் கொளுவ வேதங்களாகிய குதிரை பூண்ட பூமியாகிய தேரையேறி வாசுகி நாணாக *இமயம் வில்லாக வெள்ளி பொன் இரும்பென்னும் மூவகை யையுமுடைய அரிய மதில்கள் ஒரு தீயாகிய அம்பாலே வேவ அவற்றைத் திசைகள் வெதும்ப எய்து அமரர்க்குச் செய்யும் வேள்விக்கண் அவிப் பாகத்தையுண்ட கோபத்தாற் பசிய கண்ணையுடைய ஈசன் உமையோடு புணர்ந்து காமத்தை நுகர்கின்ற வதுவைநாளிற்கண் அமையாத புணர்ச் சியை ஒருகாலத்து அமைந்தானாக ; நெற்றிக்கண் இமையாநாட்டத்தை யுடைய அவன்பக்கலிலே இந்திரன் ஒரு வரத்தைக்கொண்டு 'இந்தப் புணர்ச்சியாற்றோன்றிய கருவை அழிப்பாயாக' என, மழுப்படையைத் தரித் தவன் வாய்மையனாதலின், அவ்விந்திரனுக்குத் தான் கொடுத்தவரத்தைச் செய்தற்கு அரிதென மாற்றாதே இவ்வுலகேழும் தன் மெய்ம்மையை வியக்க

* "இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்" (கலி. ௩௮.)

(பி-ம்.)— [1]பரிக்கொளுவ. [2]அமைக்க. [3]மாற்றாதுவாய்மையனாதல். [4]கொண்டதன், கொண்டதைத். [5]கருவேற்று.

வசித்ததைக் கண்ட மாக மாதவர்
மனைவியர் நிறைவயின் வசிதடி சமைப்பிற்
சாலார் தானே [1]தரிக்கென வவரவி
யுடன்பெய் தோரே யழல்வேட் டவ்வவித்
[2] தடவு நிமிர் முத்தீப் பேணிய[3]மன் னெச்சில்
வடவயின் [4]விளங்கா லுறையெழு மகளிருட்
*கடவு ளொருமீன் சாலினி யொழிய
வறுவர் மற்றையோரு மந்நிலை யயின்றனர்
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே
நிவந்தோங் கிமயத்து †நீலப்பைஞ் சுனைப்
பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயற்

அதனுருவைப் பலகண்டமாகச் சேதித்தான்; அங்ஙனம் சேதித்தலாற் கழிந்த சேயாக்கையாதற்கு உரியகருவை 'இஃது, அமரர் சேனைக்குத் தலைவனும்' எனச்சமாதியானுணர்ந்து (?) இந்திரனுக்கிரதம் வாராமைகூறி அவன் பக்கலிலே [5]பெற்றுக்கொண்டுபோன தெய்வமுனிவர்களெழுவரும் இறைவன் கண்டமாக வசித்ததாகிய வசிதடியை நம்மனைவியர் தரித்துச் சமைவிப்பாராயின் நிறைவயிற்சாலார்; அதனால் அங்கியாகியதானே தரிக்கவென வெண்ணி, அம்மாதவர் அழலைவேட்டு அதன்கண் அவியுடனே பெய்தார்; பெய்ய, அவ்வவியோடு குண்டங்களில் நிமிர்ந்த முத்தீக்கொள்ளுதலால், புரோடாசமாகிய அதனை வானத்து வடவயினுறைகின்ற மகளிரெழுவருட் கடவுட்கற்பினையுடைய ஒரு மீனாகிய அருந்ததியொழிய விளங்குகின்றகார்த்திகையாகிய அறுவரும் அப்பொழுதே அயின்றார்; அயின்றும் தம் கணவர் வேண்ட அயின்ற புரோடாசமாதலால் மறுவற்ற கற்பினையுடைய அம்மாதவர்மனைவியர் நிறையுடைமையினீங்காதே நின்னைச் சூற்கொண்டார் கொண்டு பின் இமயத்துச் சரவணமென்னுஞ்சுனையில் தாமரைப்பூவாகிய பாயற்கண்ணே ஒருங்கு பெற்றாரென்று பௌராணிகர் சொல்லுவர்; முருகா!

* 'கடவுளொரு மீன்...அயின்றனர்' என்னும் பகுதி, (தொல். கிளவி. சூ. ௪௪ - ந.) மேற்கோள்; 'கடவுளொருமீன்...பதுமத்துப்பாயல்' என்னும் பகுதி. "பாய்திரை யுடுத்த" என்னும் கல்லாடச்செய்யுளில், 'இமயம்பூத்த சுனைமாண் டொட்டி, லறிவிற் றங்கி...வைத்தோய்' என்னும் பகுதிக்கு மேற்கோள்; (மயிலேறும்.)

† "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை" (முருகு. உ௫௩.)

(பி-ம்.)— [1]தரிக்கெனவவியுடன்பெய்தோர். [2]தடவுநிறை. [3]மனெச்சில், மாணெச்சில். [4]விளங்கிற்றூல். [5]ஏற்றுக்கொண்டு.

*பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே
யரிதமர் சிறப்பி னமரர் [1]செல்வ
னெரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென
வறுவேறு துணியு [2]மறுவ ராகி
யொருவனை வாழி யோங்குவிறற் சேஎ
யாரா வுடம்பினீ யமர்ந்துவிளை யாடிய
† [3]போரால் வறுங்கைக்குப் புரந்தர னுடைய
‡வல்லலி லனலன் றன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன் வானத்து
வளங்கெழு செல்வன்றன் மெய்யிற் [4]பிரித்துத்
திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன்
றிருந்துகோன் ஞமன்றன் மெய்யிற் பிரிவித்
திருங்கண் [5]வெள்யாட் டெழின்மறி கொடுத்தோ

அவ்வாறு நின்னைப்பெற்ற அன்றே இந்திரன் இகன்மிகுதியான் முனிவர்க்குத்தான் கொடுத்த [6]வாற்றைக்கடந்து வந்து வச்சிரத்தைக்கொண்டெறிந் தானாக, முன் அறுவேறாகிய துணியும் அறுவராய்ப் பின்னும் ஒருவனாயினை;

௩0. நாட்டத்தையுடையவனை ஆகுபெயரால் 'நாட்டம்' என்றார்.

௩௧. வேள்விகளைச்செய்த விண்ணோர்முதல்வனென்க.

௩௭. மனத்தினை ஒன்றாக்கி நுண்ணியதாகக்காண்டலாதலிற் சமாதி 'நொசிப்பு' எனப்பட்டது.

௪௩. § ஆரலென்னும் பெயர், ஆலெனக்குறைந்து நின்றது.

௪௮. நீலப்பூக்களையுடைய பசிய சுனை.

௫௫ - ௭0. குழவிப்பருவத்தையாகலான் வளரா உடம்பினையுடைய நீ மேவிவிளையாடிய போரின்கண் வறுங்கைக்கு இந்திரன் உடைதலால் இவ்வாற்றலுடையஇவனே இனி நம் சேனைக்குத் தலைவனெனக் கருதி அங்கி

* "பெரும் பெயர் முருக" (முருகு. ௨௬௯.)

† புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண். செய். ௨௧ - பார்க்க.

‡ "பாய்திரையுடுத்த" என்னும் கல்லாடச் செய்யுளில், 'ஒருமயிலாகி', 'வாரணக்கொடும்பகையாகி,' என்பவற்றின் விசேடவுரையில் 'அல்லலிலனலன்......மயில் கொடுத்தோன்' என்னும்பகுதி மேற்கோள்; (மயிலேறும்.)

§ "அகலிரு விசும்பி னூஅல் போல, வாலிதின் விரிந்த புன்மகாடிமுசுண்டை" (மலைபடு. ௧00 - ௧0௧) என்பதும், 'ஆரல் ஆலெனவிகாரம்' என்னும் அதன் உரையும் இங்கே அறியற்பாலன.

(பி-ம்.)—1 செல்வன்றன். 2அறுவராகிய. 3போரார்வறுங்கைக்கு. 4பிரிவித்து. 5வெளியாட்டு, வெள்ளாட்டு 6வரத்தை.

ஞஅங், கவரும் பிறரு மமர்ந்துபடை யளித்த
மறியு மஞ்ஞையும் வாரணச் சேவலும்
பொறிவரிச் சாபமு மரனும் வாளுஞ்
செறியிலை யீட்டியுங் குடாரியுங் கணிச்சியுந்
தெறுகதிர்க் கனலியு மாலையு மணியும்
வேறுவே [1]றுருவினிவ் வாறிரு கைக்கொண்டு
மறுவி [2]றுறக்கத் தமரர்செல் வன்றன்
பொறிவரிக் கொட்டையொடு புகழ்[3] வரம் பிகந்தோய்
நின்குண மெதிர்கொண்டோ [4]ரறங்கொண்டோ ரல்லதை
மன்குண முடையோர் மாதவர் வணங்கியோ ரல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சின [5]நீடி னோருஞ்
சேரா வறத்துச் சீரி லோரு
[6]மழிதவப் படிவத் தயரி யோரு

கோழியைத்தந்தான்; அவ்விந்திரன் மயிலைத்தந்தான்; யமன் வெள்ளாட்டு மறியைத்தந்தான்; அவ்வாற்றான், அவரும் பிறருமுவந்து தத்தம்மெய்யின் வாங்கிப் படையாகத்தந்த மறிமுதல் மணியீறாகச் சொல்லப்பட்ட வேறு வேறு உருவினவாகிய இவற்றை ஆறிருகையினுங்கொண்டு அத்தாமரைக் கொட்டையிற் பெயரமாட்டாத அப்பருவத்தே அமரர் சேனைக்குத் தலைவனாயினமையின் அவர்க்கரசனாகிய இந்திரனது புகழ்வரம்பைக்கடந்தோய்!

சுஉ. இருங்கண் - கரியகண்.

ருஅ, சுO, சுஉ. கொடைச்சொல் முன்னிலைக்கண் வழுவமைதியாய் வந்தது.

சுஎ. மாலை - பாசம்.

சுஅ. ஆறிருகையினுமென்னுமுற்றும்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது.

எக - அO. நினது குணத்தை ஏற்றுக்கொண்டோராகிய அறங்கொண்டோரல்லது வீடுபெறுங் குணமுடையோராகிய மாதவரால் வணங்கப்பட்டோரல்லது உயிர்களைச்செறுகின்ற தீயநெஞ்சத்துச் சினத்தையுடையோரும் அறத்தின்கட்சேராத புகழில்லோரும் கூடாவொழுக்கத்தால்அழிந்த தவவிரதத்தையுடையோரும் இப்பிறப்பினுகர்ச்சியேயுள்ளது மறுபிறப்பு

(பி-ம்.)— 1உருவினவ்வாறிரு, உருவினவாறிரு. 2துறக்கத்தவமரர். 3 வரம்பிறந்தோய். 4அறங்கேட்டோர். 5நீட்டினோருஞ். 6பழிதவப்.

மறுபிறப் பில்லெனு மடவோருஞ் சேரார்
நின்னிழ லன்னோ ரல்ல தின்னோர்
1 சேர்வா ராதலின் யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பா
லருளு மன்பு மறனு மூன்றும்
*உருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே

கடவுள் வாழ்த்து.

கடுவனிளவெயினனார் பாட்டு.

2கண்ணனாகனாரிசை.

பண்ணுப் பாலையாழ்†

---

இல்லையென்னும் மடவோருமாகிய இவர் நின்‡ தாள்நிழலை அடையார்; அத்தன்மையோரல்லது இத்தன்மையோர் நின் தாள்நிழலை அடைவர்; ஆதலான், நின்னை யாம் இரப்பவை நுகரப்படும் பொருள்களும் அவற்றை உளவாக்கும் பொன்னும் அவ்விரண்டானும் நுகருநுகர்ச்சியுமல்ல; எமக்கு வீடுபயக்கு நின்னருளும் அதனையுண்டாக்க நின்னிடத்து யாம் செய்யுமன்பும் அவ்விரண்டானும் வரும் அறனுமாகிய இம்மூன்றுமே.

௭௧. ஒலிதார் - தழைத்த தார். (௫)

---

* "உருளிணர்க் கடம்பி னொன்றுபடு கமழ்தார்" (பரி. ௨௧); "பராரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" (முருகு. ௧௦—௧௧.)

† 'இந்தப் பாட்டிற் கெல்லாம் பரிமேலழகரையனுரையாற் பொருளுணர்ந்து கொள்க' என்பது இச்செய்யுள் மட்டும் தனியே எழுதப் பெற்றிருந்த ஓரேட்டினிறுதியில் எழுதப்பட்டிருந்தது.

‡ "ஒருவனிரு தாணிழல்" (ஐங்குறு. கடவுள்.)

(பி-ம்.)— 1சேர்வர்நின்னிழலாதலின். 2கண்ணகனாகனார், கண்ணகனார், கண்ணகனார்.

## ஆறாம் பாடல்.

### வையை.

நிறைகடன் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்
பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வான
நிலமறை வதுபோன் [1]மலிர்புன றலைத்தலைஇ
மலைய வினங்கலங்க மலைய மயிலகவ
மலைமாசு கழியக் கதழு [2]மருவி யிழியு
[3]மலிநீ ரதர்பல கெழூவு [4]தாழ்வரை
மாசில் பனுவற் புலவர் புகழ்புல
நாவிற் புனைந்த நன்கவிதை மாறாமை
மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்

---

(ஆறாம் பாடலுரை.)

௧. உராய் - பரந்து.

௧ - ௨. நீர் நிறைதலால் துளும்பும் தம்பாரந்தீர்ந்து இளைப்பாற.

௩. *ஊழிக்கண் நிலமறையும் வெள்ளம் போலே வெள்ளம் மேலே பரக்க.

௪. இனம் - மானின முதலாயின.

௫ - ௬. விரையும் அருவியாய் வீழ்கின்ற மிக்கநீர் வரும்வழிகள் பல பொருந்தின சாரல்.

௭ - ௧௦. புகழப்படும் அறிவினையுடைய நாவாற் புலவர் பாடிய நன் செய்யுள் பொய்யாகாமல் நாட்ட விரைந்து எங்கும்பரந்து உழவு முதற் றொழில்கள் பெருக.

௮. கவிதை - கவியது தன்மை. அஃது ஈண்டுச் செய்யுண்மேனின்றது.

வானம் (௨) முகந்து உராய்த்தம் (௧) பொறைதவிர்ந்து இளைப்பாறவும் (௨) நிலத்தின்மேலே வெள்ளம் பரக்கவும் (௩) பொழிந்தது (௨); பொழிய மலைச்சாரலில் (௬) தண்ணம்புனல் (௧௦) மேவிப்பரந்துநந்தத் (௯) தாயிற்று (௧௦) எனக்கூட்டுக.

---

*பரிபாடல், ௨-ஆம்பாடலில் ௭-௧௨ ஆம் அடிகளின் விசேடவுரையைப்பார்க்க "வையகம் போர்த்த வயங்கொலி நீர்" (பு-வெ. கரந்தை. ௧௪.)

(பி-ம்.)— 1 மலிபுனறலைக்கலைய, 2அருவிபொழியும். 3மலிகதிர்பல, 4 தாலவரை.

[1]புகைபூ, அவியா ராதனை யழல்பல [2]வேந்தி
நகையமர் [3]காதலரை நாளணிக்கூட்டும்
வகைசாலும் வையை வரவு
தொடிதோள் [4]செறிப்பத் தோள்வளை யியங்கக்
[5]கொடிசே ராத்திருக் கோவை காழ்கொளத்
தொகுகதிர் முத்துத் [6]தொடைகவிழ்பு மழுக
வுகிருங் கொடிறு [7]முண்டசெம் பஞ்சியு
நகிலணி யளறு நனிவண்டன் மண்ட
விலையு [8]மயிரு மீர்ஞ்சாந்து நிழத்த
முலையு மார்பு முயங்கணி மயங்க

கக - ௩. புனலாடு மகளிர் தமக்கு ஈரம் புலரப் புகைக்கப்படும் அகின்மரமுதலாயினவும் அவை புகைத்தற்கு அழலும் சூடுதற்குப் பூவும் வையைக்கு ஆராதனைப் பொருளாகிய அவியும் * பொன்மீன் முதலிய பலவு மேந்தித் தம் மகிழ்ச்சி பொருந்திய காதலரை நாளணியொடு கூட்டப்பண்ணும் வகை மிக்கது; வையை வரவின்கண்.

கக. ஈண்டுப் புகையென்பதூஉம் ஆராதனையென்பதூஉம் ஆகுபெயர்.

கச - உச. கைகள்தாம் பூரித்தலால் தொடியை அழுந்தப் பண்ண, தோள்வளைபோந்து முன்கைக்கண் அலைய, எழுதின தொய்யிற்கொடிகள் ஒன்றோடொன்று கலந்து அழிய, மேகலைவடங்கள் அற்று உதிர்ந்து நூல் தோன்ற, ஆணிதிரண்ட முத்தினாகிய வடம் கலங்கிப் பூசியவற்றால் நிறம் மழுக, உகிரினும் கபோலத்தினும் எழுதிய செம்பஞ்சியும் அழிய, முலைக்கு அணிந்த குங்குமக்குழம்பு வண்டலிட, படலைமாலையும் குலைந்தமயிரும் பூசின சாந்தத்தைச் சுருக்க, முலையைப்பொருந்தியனவும் மார்பைப் பொருந்தியனவுமாகிய இருவரணிகளும் தம்முள் மயங்க, அன்பொத்த அவர் உள்ளம் நிறைவெள்ளத்தை உடைத்தாற்போல வையை வரையையொத்த அணைகளை யுடைத்தது; உடைப்ப, வையையின் திரையாகிய சிறகு கரையாகிய காவலையுடைத்தது; அஃதடைக்க ஆளேறுதற்குப் பறையறைக என்னும் கரைகாப்பாருரையாகிய காவலோடே அப்பறையொலியெழ அவற்றைக்கேட்டு ஊர் கிளர்ந்தது.

ககூ. இலை, ஆகுபெயர்.

அழியவென்னும் வினைச்சொல் வருவிக்கப்பட்டது.

* புண்ணிய நதியில் நீராடுவோர் பொன் முதலியவற்றாற் செய்வித்த மீன்முதலியவற்றை அதிற் செல்லவிடுதல் மரபு; (காசிகாண்டம், உஎ:சு.)

(பி - ம்.)—[1]புகையூ. [2]ஏந்திய. [3]காதலர் நாளணிகூட்டும். [4]செறுப்ப. [5]கொடிச்சேருத்திருக்கோவைகாழ்க்கொள. [6]தொடைக்கவிழ். [7]உட்செம் பஞ்சியும். [8]மயிருந் திமிர்சாந்து.

*விருப்பொன்று பட்டவ [1]ருளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்
திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை [2]யறைகென
முரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று
அன்று, போரணி யணியிற் புகர்முகஞ் சிறந்தென
நீரணி யணியி னிரைநிரை பிடிசெல
வேரணி யணியி னிளையரு மினியரு
†மீரணி யணியி னிகன்மிக நவின்று
[3]தணிபுன லாடுந் தகைமிகு போர்க்கண்
டுணிபுன லாகத் துறைவேண்டு மைந்தி
னணியணி யாகிய தாரர் கருவிய
ரடுபுன லது [4]செல வவற்றை யிழிவர்
கைம்மா னெருத்தர் கலிமட மாவினர்
நெய்ம்மாண் சிவிறியர் நீர்மணக் கோட்டினர்
வெண்கிடை மிதவையர் நன்கிடைத் தேரினர்
சாரிகை மறுத்துத் தண்டா வுண்டிகை
[5]யோரிய வுறுத்தர வூரூர் பிடந்திரீஇச்

---

உரு - ௩எ. அங்ஙனம் கிளர்ந்த அன்று, போர்க்கு அணியும் அணியினையுடைய களிற்றினங்கள் சிறந்தாற்போலக் கிளர்ச்சியையுடைய வையைவாய் நீராட அணிந்த அணியுடனே நிரைநிரையாகப் பிடிகள் செல்லுதலானும் அழகாக அணிந்த அணிகளையுடைய மைந்தரும் மகளிரும் அவற்றை நீக்கிப் புனலாட அணிந்த அணிகளுடனே யானையெருத்தத்தாரும் கலித்த மென்னடைமாமிசையாருமாய் விளையாட்டிகலை மிகவிரும்பித் தண்புனலாடுதற்குவேண்டும் தகுதிமிக்க துணிபுனல் போர்க்களமாகக் குறித்து ஒருவரினொருவர் முற்பட்டுத் துறையைவேண்டுமைந்துடனே திரள்திரளாகிய தூசித்தன்மையராய் அவ்விகற்கேற்ற படைக்கலங்களையுடையராய் உள்விட்ட புழுகுநெய்யான்மாண்ட துருத்தியராய் உள்விட்ட பனிநீரான்மணமிக்க கொம்பினராய் வெண்கிடையாற் சமைத்துச் செல்கின்ற மிதவையராய் நிறம் பிடித்த நன்கிடையாற் சமைத்துச் செல்கின்ற தேரின

---

* "காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு, நாணுத்தாழ் வீழ்த்த கதவு" (குறள். கஉருக) என்பது இங்கே அறிதற்பாலது.

† "நீரணி கொண்ட வீரணி நீக்கி" (பெருங்கதை. க. சஉ. கசங.)

(பி - ம்.)— [1]உள்ளநிறை. [2]அறையெழு. [3]தண்புனல். [4]செலவுவறை யொழியா. [5]ஓரியமுறுத்தர.

சேரி யிளையர் செலவரு நிலையர்
வலிய ரல்லோர் துறைதுறை [1]யயர
மெலிய ரல்லோர் விருந்துபுன லயரச்
சாறுஞ் சேறு [2]நெய்யு மலரு
நாறுபு நிகழும் யாறுவர லாறு
நாறுபு நிகழும் யாறுகண் டழிந்து
வேறுபடு புனலென விரைமண்ணுக் [3]கலிழைப்
புலம்புரி யந்தணர் கலங்கினர் மருண்டு

---

ராய்ச் செலவுதவிராத யானைத்திரளும் குதிரைத்திரளும் தம் கதியிற் சேற லொழிந்து அவ்வொருநெறியிற் செல்வாரை நெருக்குமாற்றான் அவற்றை ஊர்ந்தூர்ந்து இடந்தொறுந்திரிதலானும்.

மைந்துடனே (௩0) திரிதலானும் (௩௭) என இயையும்.

௩௧. தூசித்தன்மை - முன் செல்லுதல்.

௩௬. 'உண்டை' என்பது *"கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்" என்புழிப்போலத் திரள்மேலதாய் 'உண்டிகை' எனத் திரிந்து நின்றது.

௩௭. 'திரீஇ' என்பது திரிய என்பதன் திரிபு.

௩௮ - ௪௨. காதலாற் செல்லும் புறச்சேரியில் இளையர் செல்லுதற்கரிய நிலைமையராக மெலியோர் உள்புகமாட்டாமையால் துறையைத் துறையை விரும்ப, வலியோர் புதுப்புனலை உள்புக்காடுதலாற் †பத்துத்துவர் முதலாயின ஊறினநீரும் சந்தனமுதலியவற்றது குழம்பும் ‡வாசஎண்ணெயும் சூடிய பூக்களும் நாற ஒழுகாநின்றது, இவ்வியாறு வருகின்றவாறு.

௪௩ - ௪௫. அங்ஙனம் நாறியொழுகாநின்ற ஆற்றைமறையை விரும்பும் அந்தணர் கண்டு, அதன்கண் மகளிரும் மைந்தரும் பூசிய விரைகளைக் கழுவின கலங்கல் நீரை அது தூய்தாய நிலைமையழிந்து வேறுபட்ட புனலெனமருண்டு நீராடலும் வாய்பூசலுமுதலிய தம் தொழில் செய்யாது நீங்கினர்;

---

* இறை. சூ. ௨. மேற். ௫ - ஆம் கலித்துறை.

† "பத்துத் துவரினு மைந்து விரையினு, முப்பத் திருவகை யோமா லிகையினு, மூறின நன்னீ ருரைத்தநெய் வாச, நாறிருங் கூந்த னலம்பெற வாட்டி" (சிலப். ௬ : ௭௬ - ௭௯.)

‡ "வாச வெண்ணெயும் வண்டிமிர் சாந்தமும்" (சீவக. ௮௬௪.)

(பி - ம்.)— [1]அமர. [2]நேயமு. [3]கலுழை, கலிழ.

மாறுமென் மலருந் தாருங் கோதையும்
வேருந் தூருங் காயுங் கிழங்கும்
பூரிய மாக்க ளுண்பது மண்டி
நாரரி [1]நறவ முகுப்ப நலனழிந்து
வேறு பட்டன்றிவ் விரிபுனல் வரவெனச்
சேறுடு புனலது செலவு
[2] வரையழி வாலருவி (?) வாதா லாட்டக்
கரையழி வாலருவிக் கால்பா ராட்ட
விரவிற் புணர்ந்தோ [3]ரிடைமுலை யல்கல்
புரைவது பூந்தாரான் குன்றெனக் [4]கூடார்க்
குரையோ டிழிந்துரா யூரிடை யோடிச்
[5]சலப்படை யானிரவிற் றாக்கிய தெல்லாம்

சசு - ருக. அவரேயன்றிச் சூடிக்கழித்த மென்மலரும் *மைந்தர் தாரும் மகளிர் கோதையும் கரைக்கண் மரத்தனவும் கொடியனவுமாகிய வேரும் தூரும் காய்களும் கிழங்குகளும் பரக்க அதன் மேலும் கீழாயமாக்கள் உண்ணலின் மிக்கு நறவத்தை உகுத்தலான் அவ்விரிபுனல்வரவு அடியின் நலனழிந்து வேறுகாகின்றதென்று பிறரும் நீங்கினர்; அச்சேறுடுபுனலது செலவு இது.

'பரக்க' என்பதூஉம் 'பிறரும்' என்பதூஉம் 'இது' என்பதூஉம் வருவிக்கப்பட்டன.

ருஉ - சுய. இரவுக்குறிக்கண் மணந்ததலைவர் எல்லையின்றி இழியும் வெளிய அருவி (?) மண......ாறு பாராட்டத் தடையின்றிச் செல்லும் உருவிலதாகிய நல்லகாற்றுத் தாலாட்ட அம்மகளிரிடைமுலைக்கட்கிடந்து துயிறல்கூடுவது முருகன்பரங்குன்றதன்கண்ணேயென, ஆண்டுச் செல்லாதார்க்குச் சொல்லுதற்றொழிலோடும் இழிந்துபோந்துமதுரையில் தெருவின்கண் ஓடி வஞ்சனைசெய்யும் படையான் இரவிற்செய்ததெல்லாம் ஊர்காப்பார்க்குப் புலப்படாநின்று அத்தெருவு வைகறைக்கண் வெறு நிலமாக வார்ந்தது; இவ்வாற்றான் எங்கும் பரந்தது, தமிழையுடைய வையைப் புனல்.

* "கலிகொளாயம்...இசையே" என்பதும், 'புதுநீர்விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தேகொண்ட மகளிர்திரள் தம்மிடத்து நெருங்கின கோதை தம் கணவர் மார்பின் மாலையுடனே அழகுபெறக்கூடி அவர்களுடனே நீராடுமோசை' என்னும் அதனுரையும் இங்கே அறியற்பாலன; (**மதுரை.** உசுச - அ. ந ;) பட். அடி க0க, கக0 - பார்க்க.

**(பி - ம்.)**— [1]நறவழகுவப்பநலனணிந்து. [2]வரையிழிவாலருவிபாதாலாட்ட. [3]இடையல்கல். [4]கூட்டார்க்கு. [5]சலப்படை தானிரவிற்.

[1]புலப்படப் புன்னம் புலரியி னிலப்படத்
தான்மலர்ந் தன்றே
தமிழ்வையைத் தண்ணம் புனல்
விளியா விருந்து [2]விழுவார்க்குக் கொய்தோய்
தளிரறிந் தாய்[3]தா மிவை
பணிபொசி பண்படண் டெல்லா [4]நணியுருவத்
தென்னோ துவள்கண்டீ
யெய்துங் [5]களவினி [6]நின்மார்பிற் றூர்வாடக்
கொய்ததும் வாயாளோ கொய்தழை கைபற்றிச்
செய்ததும் வாயாளோ செப்பு

இற்பரத்தையுடன் நீராடிய தலைமகன் காதற்பரத்தைக்கு வையை நீர் விழவு கூறியது.

மேல் அக்காதற் பரத்தை 'நகையமர் காதலரை நாளணிக் கூட்டும், வகைசாலும்' (௧௨ - ௩) எனவும், 'விருப்பொன்று பட்டவ ருளநிறை யுடைத்து' (௨௧) எனவும், 'ஏரணி யணியி னிளையரு மினியரு, மீரணி யணியி னிகன்மிக நவின்று' (௨௭-அ) எனவும், 'இரவிற் புணர்ந்தோ ரிடைமுலை யல்கல், புரைவது பூந்தாரான் குன்று' (௫௪ - ௫) எனவும் அவன்கூறியவற்றை உட்கொண்டு தனக்குக் கையுறைகாட்டினானோடு புலந்து கூறுகின்றாள்:—

௬௧. இத்தளிர் கொய்தது பழையேனாதலான் நீ இகழாநின்ற எனக்கு அன்று; எப்பொழுதும் புதியராக விரும்பும் மகளிர்க்குக்கொய்தாயென;—

மேல் தலையகன்:—

௬௨. நீ அறிந்தாய்; அவைதாம் இவை; மெய்யென்றான்.

என்றது, நீ அறிந்திலை; இத்தளிர்கள் அத்தன்மையவல்லவென்னும் குறிப்பிற்று.

மேல் காதற்பரத்தை:—

௬௩ - ௭. டணியாநிற்கவும் அன்பின்றி [7]முறிந்த பண்பினையுடையாய்! இப்பொழுது களவு வெளிப்படாநின்றது; பணடு எனக்கு நீ கொய்துழியெல்லாம் கடிதின்வருதலால் தளிர் உருவத் துவட்சியுண்டோ? இஃது அவட்குக் கொய்துசென்று அவளால் மறுக்கப்பட்டமையால் துவண்டவாறு பாராய்; இனி அவள்தான் இதனை நின்மார்பிற்றூர்வாட நின்று கொய்ததற்கும் நேர்ந்திலளோ? இக்கொய்தழையைக் கையிற்கொண்டு நீ செய்த தாழ்ச்சிக்கும் நேர்ந்திலளோ? சொல்லு என,—

மேல் தலைமகன்:—

(பி-ம்.)— [1]புலப்புடைப்புன்னம்புலரின். [2]வீழ்வார்க்கு. [3]தாடவை. [4]நணியுருவத், நளியுருவத். [5]கனவினின். [6]நின்மார்விற். [7]முரிந்த.

புனைபுணை யேறத் தாழ்த்ததை [1]தளிரிவை
நீரிற் றுவண்ட சேஎய்குன்றங் காமர்
பெருக்கன்றோ வையை வரவு
ஆமா [2]மதுவொக்குங் [3]காதலங் காம
மொருக்க வொருதன்மை நிற்குமோ வொல்லைச்
சுருக்கமு மாக்கமுஞ் சூளுறல் வையைப்
பெருக்கன்றோ [4]பெற்றாய் பிழை
யருகு பதியாக [5]வம்பியிற்றாழ்ப் பிக்குங்
குருகிரை தேரக் [6]கிடக்கும் பொழிகாரி
லின்னிள வேனி [7]லிதுவன்றோ வையைநின்...
வையை வயமாக வை
செல்யாற்றுத் தீம்புனலிற் சென்மரம் போல

சஅ - எ௦. புனைந்த புணையேற வேண்டுகையாலே பொழுது தாழ்த்தது; அதனால், இத்தளிர்கள் வையைநீர் காரணமாகத் துவண்டன; சேய் குன்றத்து ஆனை; வையை வரவு அழகிய பெருக்கன்றோ என்ன,—

காதற் பரத்தை, அவள்காமப்பெருக்கம் வையைவரவொக்குமென்றாளாக உட்கொண்டு பின்னும் புலந்து கூறுகின்றாள்:—

எக - ச. ஆமாம்; நீ சொல்லுகின்றதொக்கும்; காதலையுடைய காமம் எப்பொழுதும் அவ்வொருதன்மையிலே நிற்குமோ? சிலர்பால் விரையச் சுருங்குதலானும் சிலர்பால் விரையப்பெருகுதலானும் வையைப் பெருக்குத்தானன்றோ? வேண்டாது சூளுற்றாய் பிழையுடையையாயினாய்; இனிச் சூளுறல்;

எ௫ - அ. வானம் பொழிகின்ற கார்காலத்து எம்பதி நின்பதிக்கு அருகாயிருக்க, புணைகாரணமாக நின்னைத் தாழ்ப்பிக்கும் இன்னிளவேனிற்கண் குருகுகள் இரைதேரும் அளவிற்றாய்க்கிடக்கும் இத்தன்மைத்தன்றோ வையை; அதனால் நின்காமத்தையும் வையைவழித்ததாகக்கருது.

மேல், 'வையைப், பெருக்கன்றோ' (எசு-ச) என்ற துணையல்லது அதன் இயல்பு கூறிற்றிலள்; கூறுதாள் இதனால் அதன் இயல்பு கூறி இவ்வொப்புமையுண்மையான் அதன்கண் அவளொடு நுகர்ந்த நுகர்ச்சி இன்னும் ஒழிதற்பாற்றன்றென்றாளாம். (?)

எகூ-அகூ. தனக்கென ஒரு செலவின்றி* யாற்றின்கட் செல்கின்ற புனல்

* "நீர்வழிப் பட்ட புணை" (நீதிநெறி. சச.)

(பி - ம்.)— 1 தளிரிய. 2 அதுவொக்குமாகாதாங்காமம். 3 காதரங் காமம். 4 பெற்றாம்பிழை. 5 அம்பிற்றாழ்ப். 6 கேடக்கும். 7 இதுவொன்றோ.

[1] வவ்வுவல் லார்புணை யாகிய மார்பினை
யென்னும் பணியா யிரவெல்லாம் வைகினை
வையை யுடைந்த மடையடைத்தக் கண்ணும்
பின்னு மலிரும் பிசிர்போல வின்னு
மனற்றினை துன்பவிய [2]நீயடைந்தக் கண்ணும்
[3] பனித்துப் பனிவாருங் கண்ணவர் நெஞ்சங்
கனற்றுபு காத்தி வரவு
நல்லாள் கரைநிற்ப நான்குளித்த பைந்தடத்து
நில்லா டிரைமூழ்கி நீங்கி யெழுந்தென்மே
லல்லா [4]விழுந்தாளை யெய்தியெழுந் தேற்றியான்
கொள்ளா வளவை யெழுந்தேற்றாள் கோதையி
னுள்ளழுத்தி யாளெவளோ [5]தோய்ந்த தியாதெனத்
தேறித் தெரிய [6]வுணர்நீ பிறிதுமோர்
யாறுண்டோ விவ்வையை யாறு

வழியேசெல்லும் மரம்போல வௌவிக்கொள்ளுதல்வல்ல மகளிர்க்குப் புனலாடுதற்கட் புணையாகிய மார்பினையாய் அதற்குச் சிறிதும் அஞ்சுவதுஞ்செய்யாதே இரவெல்லாம் அவளோடு தங்கினை; அவ்வையைக்கண் உடைந்தமடையை அடைத்தவிடத்தும் பின்னும் ஒழுகும் ஊற்றுநீர்போல முன் அனற்றிய துன்பங்கெட நீ சேர்ந்தவிடத்தும் பில்கிப் பனிவாருங் கண்ணினையுடைய மகளிர் நெஞ்சத்தை இன்னும் கனற்றுநின்று வருதலையொழி; என,—

மேல் தலைமகன்:—

அஎ-கூக. ஒருத்தி கரையின்கண்நிற்ப, நான் குளித்ததடத்துள்ளே அவள் பேதைமையாற் கரையில் நில்லாது புகுந்து திரையின்கண் அழுந்திப் பின்னர் அதனை நீங்கியெழுந்து என்மேல் அல்லாந்து விழுந்தாளைக் குளித்த யான் எழுந்து அணுகி ஏற்றுக்கொள்ளாவளவை எழுந்தாள்; அதனால் அவள் காமநுகர்ச்சியறியும்பருவத்தளல்லள், அவளொழியக் கோதைபோல என் மார்பினுள் அழுத்தப்பட்டவள் யாவளோ? அவளோடு யான் ஆடியயாறு யாது? என,—

கூ0. 'எழும்' என்பது காலமயக்கம்.

மேல் காதற்பரத்தை:—

கூஉ-௩. அதனை யான் சொல்லத்தேறி நீயே தெளிய அறி; அத்தன்மையது பிறிதுமோர்யாறுண்டோ? அது இவ்வையை யாறு; என,—

மேல் தலைமகன்:—

(பி - ம்.)— 1வவ்வல்லார். 2நீயடைக்கண்ணும். 3பனிற்றுப். 4விழுந் தாரை. 5தோய்ந்தறியாதென, 6உரைநீ.

இவ்வையை யாறென்ற மாறென்னை கையாற்
றலைதொட்டேன் றண்பரங் குன்று
சினவனின் னுண்கண் சிவப்பஞ்சு வாற்குத்
துனிநீங்கி [1]யாட றொடங்கு துனிநனி
கன்றிடிற் காமங் கெடூஉ மகளிவ
னல்லா [2]நெஞ்ச முறப்பூட்டக் காய்ந்தே
வல்லிரு ணீய லதுபிழை யாகுமென
[3] வில்லவ ராட விரந்து பரந்துழந்து
வல்லவ ரூட லுணர்த்தர நல்லாய்
களிப்பர் குளிப்பர் காமங் கொடிவிட
வளிப்ப துனிப்ப வாங்காங் காடுப

---

௯௪-௫. யான் தடத்துக்குளிக்க நீ இவ்வையையயாறென்ற மாறுபாடு என்னை? முன்புபோலன்றித் தண்பரங்குன்றின் தலையைக் கையாற்றொட்டேன்.

என்று பின்னும் சூளுற்றானென்று இவ்விருவர் கூற்றையுங்கொண்டு கூறினாள்.

காதற் பரத்தையை அவளில்லின்முதுபெண்டிர் கழறியவாறும் வாயில்கள் ஊடலுணர்த்தியவாறும் அவளைத் தலைமகன்புணர்ந்தவாறும் விறலிக்குத் தலைமகள் கூறுகின்றாள்:—

௯௭ - ௧௦௦. நின் உண்கண் சிவப்பிற்கு அஞ்சுவான் அவனுக்குத் துனி நீங்கி அவனோடு விளையாடலைத்தொடங்கு; இவ்வாறு துனியின்கண் மிகுவையாயின் அவன் காமவின்பங்கெடும்; அதற்குக் காரணமாகியமகள் இவன் சொல்லியபேதைப் பருவத்தாள்; இவனைக்காய்ந்து இவன்நெஞ்சின்கண் அல்லாப்பை இறுகப்பூட்டுதலால் நீ (?) பெ......ண் இருட்பொழுதினில் நீங்கற்பாலையலலை; நீங்கின் * இடனறிந்து ஊடி இனிதின் உணரும் ஒழுக்கத்திற்குப் பிழையாமென்று அவளை அக்குடியின்முதிர்பெண்டிர் கழற,—

௧௦௧-௪. ஊடலுணர்த்தவல்ல வாயில்கள் இரந்தும் பரந்தும் வருந்தி யுணர்த்த அவ்விருவருங்கூடி மதுவாற்களிப்பார்கள்; களியால் வையைக்கட் குளிப்பார்கள்; குளித்துக் காமமிகுதியாற் கலப்பார்கள்; கலந்து, †அதற்கு இன்பமுண்டாகப் புலப்பார்கள்; அவ்வவ்விடந்தோறும் விளையாடாநிற்பர்.

என விறலிக்குக்கூறிப் பின் அவள்கேட்ப வையையைக் குறித்து,—

---

* "இடனறிந் தூடி யினிதி னுணரு, மடமொழி மாதராள் பெண்" (நாலடியார், கற்புடை. ௪.)

† "ஊடுதல் காமத்திற் கின்பம்" (திருக்குறள், ௧௩௩௦.)

(பி - ம்.)— [1]யாறுடங்கு. [2]நெஞ்சமபூறபபூணடக்காய்ந்தே. [3]இல்லவருட.

௧0௫ வாடுவோர் நெஞ்சத் தலர்ந்தமைந்த காமம்
வாடற்க வையை நினக்கு.

என்பது, வையைநீர் விழவணியிற் காதற்பரத்தை இற்பரத்தையுடன் நீராடினான் தலைமகனெனக் கேட்டுப் புலந்தாளைப் புலவிநீக்கிப் புணர்ந்தானெனக் கேட்ட தலைமகள் வாயிலாகப் புக்கவிறலிக்கு அவ்வையைநீர்விழவணியும் ஆங்குப்பட்டசெய்தியுங்கூறி வாயின்மறுத்தது.

[1]ஆசிரியனல்லந்துவனார் பாட்டு.
மருத்துவனல்லச்சுதனார் இசை.
பண்ணுப் பாலையாழ்.

---

௧0௫ - ௬. 'வையாய்! நின்கட் புனலாடுவார் நெஞ்சத்து மிக்குப்பொருந்திய இக்காமத்தையுண்டாக்குந்தன்மை நினக்கு எஞ்ஞான்றும் குறையாதொழிக' என வாழ்த்துவாளாய்த் தலைமகன்செய்தியை வற்புறுத்தி வாயின் மறுத்தவாறு கண்டு கொள்க.

௧0௪. 'துனிப்ப' எனப் பன்மையாற் கூறிற்று, *உணர்ப்பு வயின்வாரா ஊடலை நோக்கி. (௬)

---

* "உணர்ப்புவயின் வாரா வூட லுற்றோள் வயின், புலத்த லானே கிழவற்கும் வரையார்" (இறை. சூ. ௫0.)

(பி - ம்.)— [1]ஆசிரியர் நவ்வந்துவனார்.

# ஏழாம் பாடல்.

## வையை.

திரையிரும் பனிப்பௌவஞ் செவ்விதா வறமுகந்
துரவுரு முடன்றார்ப்ப வூர்பொறை கொள்ளாது
கரையுடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு
வரைவரை தொடுத்த வயங்குவெள் ளருவி
யிரவிருள் பகலாக விடமரிது செலவென்னாது
[1] வலனிரங்கு முரசிற் றென்னவ ருள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை [2]நிவப்பன்ன
பெயலாற் பொலிந்து பெரும்புனல் பலநந்த
நலனந்த நாடணி நந்தப் புலனந்த
வந்தன்று வையைப் புனல்
நளியிருஞ் சோலை நரந்தந் தாஅ
யொளிர்சினை வேங்கை விரிந்தவிண ருதிரலொடு
துளியி னுழந்த தோய்வருஞ் சிமைதொறும்
வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்

(ஏழாம்பாடலுரை.)

க – க0. திரையையும் குளிர்ச்சியையுமுடைய கரியகடலை நேராக வற்ற முகந்து வலிய உருமேறு வெகுண்டார்ப்பத் தன்மேலேறின பாரத்தைப் பொறுக்கமாட்டாது கரையுடைந்த குளத்துநீர் கழலுமாறுபோல அப் பாரங்கழல மேகம் வயிறழிதலாற் [3]சயிலத்திற் சிகரந்தோறுந்தொடுத்த அருவிநீர் பெயலாற் பொலிந்து மற்றையிடங்களிற் சேரும்புனல்பலவற் றோடுங்கூடிப்பெருகுதலால், வையைப்புனல், உயிர்கட்கு நன்மைமிக மென் புலங்கள் அழகுபெற வன்புலங்கள்விளைய வந்தது.

ரு – எ. * வெற்றியுண்டாக ஒலிக்குமுரசினையுடைய தென்னவர் கொள் ளக்கருதிய நாட்டையுற நிமிரும் அவர்தானையது நெடுநிரையின் நிமிர்ச்சி யொக்க யாம்செல்லுமிடம் அரிதென்னாது இருளையுடைய இரவும் பகலாக வந்ததெனக்கூட்டுக.

கக. நளி – செறிவு.

கக – கூ. நரந்தப்புல்லின்கட்பரந்து வேங்கையது இணரினின்று உதிர்ந் தபூவோடுகூடி மழையால் ஏறுண்ட கிட்டுதற்கரிய மலையுச்சிகடோறுமுள வாய்க் காற்றான் அலையுங்கொம்புகளையுடைய பெரியமரங்களை வேர் அகழ்ந்து.

* "வலம்படுவியன்பணை" (பதிற். கஎ) என்பதின் உரையைப்பார்க்க.

(பி – ம்.)— [1]வலனீங்கு. [2]நிரப்பன்ன, நிமிர்ப்பன்ன. [3]சையத்திற்.

டியர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி
யுழவர் களிதூங்க [1]முழவு பணைமுரல
வாட லறியா வரிவை போலவு
மூட லறியா வுவகையள் போலவும்
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது
விதியாற்றா னாக்கிய [2]மெய்க்கலவை போலப்
பொதுநாற்ற முள்ளாட் கரந்து புதுநாற்றஞ்
செய்கின்றே செம்பூம் புனல்
கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீ
ரவிழ்ந்த மலர்மீ தூற்றென வொருசார்
மாதர் மடநல்லார் மணலி னெழுதிய
பாவை சிதைத்த தெனவழ வொருசா
ரகவய விளநெல் [3]லரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத் துடிபட வொருசா
ரோதஞ் சுற்றிய தூரென வொருசார்
கார்தூம் பற்றது வானென வொருசார்
பாடுவார் [4]பாக்கங்கொண்டென

---

க௫. பயம்பு - பள்ளம்.

க௬ - உ௨. முழாக்களும் பெரும்பறைகளுமொலிக்க ஆடலியல்பு அறியாத அரிவையைப்போலத் தான்வேண்டிய இடங்களில் நடந்தும் ஊடலியற்கையறியாத ஊடலுவகையள் கணவனைக்கடந்து நீங்குமாறுபோலத் தகைந்த அணைகளைமுறித்தும் போய் நூனெறியானாக்கிய மெய்ப்படுக்கும் கலவையது நாற்றம்போல் நறியனபலகூடிய நாற்றத்தை உள்ளேயுள்ளே யடக்கி மேலே புதியவான நாற்றத்தைச் செய்யாநின்றது, அப்புனல்.

உ௩ - ௪. வெள்ளம் பாயப் புகுந்த நீராலே ஓடை மலர்மீதுற்ற தென்ன ஒருபக்கம்.

உ௫. எழுதிய - புனைந்த.

உ௫ - ௬. பாவைமேற் காதலையுடையமடவார் அழவென்க.

உ௭. இளநெல்லின்கண்ணும் அரிகாற் சூட்டின்கண்ணும்.

உ௯. ஊரைக் கடல்சுற்றிய தென்ன.

௩௦. வானின்மழை தூம்பற்றதென.

௩௧. பாடுவாரிருந்த பாக்கத்தை.

---

(பி - ம்.)— [1]முழவுப்பணை. [2]மெய்க்கலனவை. [3]அரிகால்சூடு. [4] பாகங், பக்கங்.

வாடுவார் சேரியடைந்தெனக்
கழனிவந்து கால்கோத்தெனப்
*பழனவாளை பாளையுண்டென
வித்திடுபுல மேடாயிற்றென
வுணர்த்த வுணரா வொள்ளிழை மாதரைப்
புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் றலைந்து
சினைவளர் வாளையிற் கிளையொடு கெழீஇப்
பழன வுழவர் பாய்புனற் பரத்தந்
திறுவரை புரையுமா றிருகரை யேமத்து
வரைபுரை யுருவி னுரைபல சுமந்து
பூவேய்ந்து பொழில்பரந்து
[1] துனைந்தாடுவா ராய்கோதைய
ரலர்தண்டா ரவர்காதிற்
றளிர்செரீஇக் கண்ணிபறித்துக்
கைவளை யாழி †தொய்யகம் புனைதுகின்
மேகலை காஞ்சி வாகு வலய
மெல்லாங் கவரு மியல்பிற்றாய்த் தென்னவ

௩௩. கழனியை வெள்ளக்கால் வந்து கோத்ததென.

௩௪. நீர் தெங்கு கமுகுகளின் கழுத்தைமுட்டுதலான் வாளை அவற்றின் பாளையை உண்டதென.

௩௫. நாற்றங்கால் வண்டலிட்டு மேடாயிற்றென.

௩௦. 'ஒருசார்' என்பதனைப்பின்பில் எனவெனெச்சங்களோடுங்கூட்டுக.

௩௬ - ௭. ஊடலைத் தானுணர்த்த உணராதமாதரைக் கூட்டுவித்தற்கு முயலும் கணவன்து ஆசைவெள்ளம்போல் விரைந்து.

௩௮ - ௯. விலாப்புடைமருங்குல் விசிப்பமாந்திய உழவர் கிளையொடுங் கூடிச் சினைவளர்ந்த வாளைபோலப் பாய்புனற்கண்ணே தொழில்களோடு பரக்க.

௪௦ - ௫௦. இறுவரைபோலக் குத்துண்டுநிற்கும் இருகரையாகிய காவலுட்பட்டு நுரைபலசுமந்து பூவான் மூடப்பட்டுப் பொழிலின்கட்பரந்து தன்கண் விரைந்தாடுவாராகிய மகளிர்காதின்கண் தளிரைச்செருகி மைந்

* "பாளை தந்த மதுப்பரு கிப்பரு, வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்" (கம்ப. நாட்டு. உச.)

† சிலப். ௬: ௧௦௬-௮.

(பி - ம்.)—1 துனைந்தாடுவர்.

*ஒன்னு ருடைபுலம் புக்கற்ருன் மாறட்ட
தானையான் வையை வனப்பு
புரிந்த தகையினுன் யாருடு வாருட்
டுரந்து புனறூவத் தூமலர்க் கண்க
ளமைந்தன வாங்க ணவரு ளொருத்தி
கைபுதைஇ யவளை
யேக்கழுத்து நாணுற் கரும்பி †னணைமென்ருேள்
[1]போக்கிச் சிறைபிடித்தா ளோர்பொன்னங் கொம்பு
பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வா
ளிரும்பீர் [2]வடியொத்து மைவிளங்குங் கண்ணெளியாற்
செம்மைப் புதுப்புனல் சென்றிரு ளாயிற்றே
வையைப் பெருக்கு வடிவு
விரும்பிய வீரணி மெய்யீரந் தீரச்
சுரும்பார்க்குஞ் சூர்நறு வேந்தினள் கண்ணெய்தல்

தர்கண்ணியைப் பறித்து மகளிர்கைவளையும் தலைக்கோலமும் உடுத்த துகிலும் இருவடமாய்த் துகிற்குள்ளணியுமேகலையும் எண்வடமாய் அதன் புறத்தணியுங்காஞ்சியும் மைந்தராழிமோதிரமும் வாகுவலயமும் என்றி வையெல்லாவற்றையும் கொள்ளுமியல்பிற்ருய்ப் பகைவர் நிலத்திடைத் தென்னவன்புக்க தன்மையையுடைத்து; அவன்வையைவனப்பு இது.

௫௧ - ௬. மிக்க தகைமையையுடைய அவன்யாற்றின்கணும் ஆயமகளி ரெல்லாம் தம்முட்டுரந்து புனலைத்தூவ அவர்கண்கள் அதனை ஏற்று அமைந்தன,......யதற்குத் தோற்றுக் கண்களைக் கையாற்புதைத்தாளை ஒருத்தி வெற்றியால் இறுமாந்ததன்கழுத்திற்......ன் ருணலே தொய்யிற்கரும் பினையுடைய அணைபோலுமென்ருேள்களைக் கட்டிச் சிறையாகப்பிடித்தாள்.

௫௭ - ௬0. அச்சிறையானவட்குப் பரிந்து அவளைக்கைப்பி............... தலைவிகண்ணெளியாற் செம்மையையுடைய புதுப்புனல் அந்நிறம்போய் இருள்நிறமாயிற்று, வையைப்பெருக்கின்வடிவு இது.

இவ்வளவும் தோழி புனலணியின்பங்கூறி, மேல் தலைமகன் காதன்மை கூறுகின்ருள்.

௬௧ - ௪. விரும்பிய புனலாட்டணியையுடையமெய் ஈரந்தீர்ந்துவெய் தாக நுகர்தற்குக் கடியநறுவையேந்தினபொழுது அவள்கண் நெய்தற்பூவை

* "அன்னு யறங்கொ ணலங்கிளர் சேட்சென்னி, ஒன்னு நுடைபுலம் போல நலங்கவர்ந்து, துன்னன் றுறந்து விடல்" (யா-வி. மேற்.)

† கலி. ௧௪, ௬௬.

(பி - ம்.)— [1]போகசிறைபிடித்தாள். [2]வடியொத்த.

[1]பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே
கூர்நறா வார்ந்தவள் கண்
கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர் நோக்கினைப்
பாணா தரித்துப் பலபாட வப்பாட்டுப்
பேணா தொருத்தி பேதுற வாயிடை
யென்னை வருவ தெனக்கென் றினையா
நன்னெமர் மார்ப னடுக்குற நண்ணிச்
சிறைகிடந்த வூடலிற் செங்கண் [2]சேப் பூர
வகைதொடர்ந்த வாடலு ணல்லவர் தம்முட்
பகைதொடர்ந்து கோதை பரியூஉ [3]நனிவெகுண்
டியாறாடு மேனி யணிகண்ட தன்னன்பன்
சேறாடு மேனி திருநிலத் துய்ப்பச் சிரமிதித்துத்
தீர்வில தாகச் செருவுற்றாள் செம்புன
லூருட னாடுங் கடை

---

யொத்தன; அந்நறவை ஆர்ந்தபொழுது அவள்கண் கண்டார்க்கு மிக்கமகிழ்ச்சியைச்செய்யும் பெரியநறவம்பூவையொத்தன.

௬௩. பேணல் ஈண்டு உவமச்சொல்.

௬௫ - ௭௬. அக்கண்ணியல்பைக்கண்டு ஏத்தி அவற்றது காரிகைநீர்மையையுடையநோக்கினை ஆதரித்துத் தலைவன் பாணசாதிபோலப் பலவகையாற்பாட அப்பாட்டைத் தன்காதலியைப் பாடுகின்றதென்றறியாது வேறொருத்திகேட்டு அவனோடுகூடுதற்கு வருத்தமுற அவ்விடத்து அதனைக்கண்டு இனி எனக்கு என்வரப்புகுகின்றதென்று அஞ்சி நல்ல பரந்தமார்பன் தலைவியைச்சேர்ந்து நடுக்கமுற, நறவுண்டுசிவந்தகண் முன்குறைகிடந்த ஊடலின்மேல்விளைந்த இதனானும் சிவப்பூர வகுப்புப்பொருந்திய நீராட்டின்கண்வந்த மகளிர்காண அவளொடு பகைமைமிக்குத் தன்மாலையைப்பரிந்து மிகவெகுள, யாறாடுந்தன்மேனியழகை உட்கொண்டு பாராட்டியகாதலன் தன்சந்தனச்சேறாடியமேனியை நிலத்துய்த்து வணங்க, அவன்சிரத்தை மிதித்துப் பின்னும்வெகுளிதீராமையாலூடினாள், செம்புனலை ஊரெல்லாமாடுகின்றகாலத்து.

இனி இந்நீரணியின்பம் பெறுக யாமென வையையைக்குறித்துக்கூறுகின்றாள்.

---

(பி - ம்.)— 1பௌமகிழ்ச். 2சேப்புச்சார. 3நகைவெகுண்டு, நகவெகுண்டு.

புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழு
[1]மெழுப்புணர் யாழு மிசையுங் கூடக்
குழலளந்து நிற்ப [2]முழவெழுந் தார்ப்ப
[3]மன்மகளிர் சென்னிய ராட றொடங்கப்
பொருதிழி வார்புனற் பொற்பஃ
துருமிடி சேர்ந்த முழக்கம் புரையுந்
திருமருத முன்றுறை சேர்புனற்கண் டுய்ப்பார்
தாமீங் [4]தலைபுனை பேஎ நீர்வையை
[5]நிற்பயம் பாடி விடிவுற் றேமாக்க
நிற்படிந்து [6]நீங்காமை யின்றுபுணர்ந் தெனவே.

என்பது, தலைமகன் தலைமகளோடு புனலாடினானெனக் கேட்டு இன்புற்ற செவிலித்தாய் தோழியை நீங்களாடிய புனலணியின்பம் கூறுகென்றாட்கு அப்புனலணியின்பமும் பல்வேறு வகைப்பட்ட இன்பமும் தலைமகன் காதன்மையுங்கூறி என்றும் இந்த நீரணியின்பம் பெறுகயாமென்றது.

**மையோடக்கோவனார் பாட்டு.**
**பித்தாமத்தரிசை.**
**பண்ணுப் பாலையாழ்.**

---

என - அ௬. பாலையேழினையுமுடைய புரிநரம்பின்கண் இனிய கொளையைத்தருகின்ற யாழும் மிடற்றுப்பாடலும் தம்முளொக்க வங்கியம் அவற்றின் சுருதியை அளந்துநிற்ப முழவு எழுந்து ஆர்ப்ப அரங்கேறிய தலைக்கோல் மகளிரும் பாணரும் ஆடலைத்தொடங்க அக்கம்பலையொடுசேர்ந்த கரையைப் பொருது இழியும்வார்புனலின் கம்பலையாகியபொற்பு உருமிடிசேர்ந்த மழை முழக்கத்தையொக்கும் திருமருதமுன்றுறைக்கட்சேர்ந்த நீர்ப்பரப்பை அனுபவிப்பார்மாலைகளைவாங்கி நின் தலைக்கட்புனையும்வையாய், இன்று நின்னைப் படிந்துநீங்காத இப்பயனைப்பெற்றாற்போல என்றும் நின்னால் யாம்பெறும் பயனைப்பாராட்டி விடிகின்றபொழுதின் தன்மையையுற்று ஏமாப்பேமாக.

அ௪. பேஎ நீர் - ஆழத்தான் அச்சத்தைத்தருநீர்.

அ௫. விடிவுறுதல் - துன்பம்நீங்கி இன்பமாதல்.

'ஏமாக்க' என்னும் வியங்கோள் வேண்டிக்கோடற் பொருட்டாகலின், தன்மைக்கண்வந்தது. (எ)

---

(பி - ம்.) — [1]ஏழுப்புணர். [2]முழவிழிந்தார்ப்ப. [3]மனைமகளிர், மண மகளிர். [4]தலைஇபுனைபௌவநீர். [5]பயம்பாராட்டி [6]நீங்காதுபுணர்ந் தெனவே.

## எட்டாம் பாடல்.

### சேவ்வேள்.

மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசைக் கொடியோனும் புங்கவ மூர்வோனு
மலர்மிசை முதல்வனு மற்றவ னிடைத்தோன்றி
யுலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரு
மருந்துரை யிருவருந் திருந்துநூ லெண்மரு
மாதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரு
மேவரு மூதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்று கின்றுநின் [1]காரண மாகப்
பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கு
மிமயக் குன்றினிற் [2]சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த்தாமரை
மின்னீன்ற விளங்கிணருழா
வொருநிலைப் பொய்கையோ டொக்குநின் குன்றி

(எட்டாம் பாடலுரை.)

க - உ. மலர்ந்த துழாய்மாலையையும் அளவற்றசெல்வத்தினையுமுடைய புள்ளை மேலேயெழுதப்பட்ட கொடியோனும்.

உ. புங்கவம் - ஏறு.

ச. உலகின்கண் இருள்.

ரு - எ. ஆதிரைமுதல்வன்பெயராற்சொல்லப்பட்டநாதர் - உருத்திரர்.

ச - எ. ஆதித்தர்முதலாக உருத்திரரீறாக முப்பத்துமூவரையுங்கூறினர்.

எ. நல்லதிசையைக்காப்போர் - இந்திரன்முதலிய எண்மர்.

அ. இவரெல்லாரும் இவரொழிந்தபிறருமாகிய அமரரும் அவுணரும்.

கூ. அதிகரித்தற்கரியவேதத்தினை அதிகரித்த விழுத்தவமுதல்வர் - தெய்வமுனிகள்.

க0 - கக. நின்னைக்காண்டல்காரணமாக மண்மிசைவந்து உறையும் இடமாகாநின்றது; ஆதலாற் பரங்குன்று அவர்பழையஇடமாகிய இமயக்குன்றத்தையொக்கும்;

கஉ - கரு. அவ்விமயக்குன்றின்கட் சிறப்பெய்தி நின்னையீன்றதாமரை

(பி - ம்.)— [1]காரணம் பரங்குன்று. [2]சிறந்த.

னருவிதாழ் மாலைச்சுனை
முதல்வநின் *யானை முழக்கங் கேட்ட
கதியிற்றே காரின் குரல்
குரல்கேட்ட கோழி [1]குன்றதிரக் கூவ
மதநனி வாரண மாறுமா றதிர்ப்ப
வெதிர்குதி ராகின் றதிர்ப்பு மலைமுழை
யேழ்புழை யைம்புழை யாழிசைகேழ்த் தன்ன [2]வினம்
வீழ்தும்பி வண்டொடு மிஞிறூர்ப்பச் சுனைமலரக்
† கொன்றை கொடியிண ரூழ்ப்பக் கொடிமலர்
[3] மன்றல மலர மலர்காந்தள் வாய்நாற
நன்றவிழ் பன்மலர் நாற நறைபணிப்பத்
[4] தென்ற லசைவரூஉஞ் செம்மற்றே யம்மநின்
குன்றத்தாற் கூடல் வரவு

---

யினது மின்போலும் இணைருதிராத வற்றாப்பொய்கையொக்கும், நினது குன்றின் அருவிதங்கும் ஒழுங்குபட்டசுனை.

கஅ. கதியிற்று - இயல்பினையுடைத்து.

கக - உக. அக்குரலைக்கேட்ட கோழி வெருவிக் குன்றெதிர்கூவக்கூவுதலானும் [6]மதமிக்க வாரணம் அக்குரற்கு மாறுமாறாகப் பிளிறுதலானும் மலைமுழைக்கணெழுகின்ற எதிரொலி அவற்றிற்கு மறுதலையாகா நின்றது.

கக. 'கேட்ட' என்பதனை வாரணத்தொடுங்கூட்டுக.

உக. எதிர்குதிரென்பது ஒருலகவழக்கு.

உஉ - அ. எழுதுளையான வங்கியத்தும் ஐந்துதுளையான வங்கியத்தும் யாழினும் பிறந்த இசைச்சுருதியொத்து நிறத்தாலொத்த இனம்விரும்பும் ‡ தும்பியும் வண்டும் மிஞிறுமார்ப்பச் சுனை பூக்களைமலரக் §கொன்றை தாராகிய இணர்களை மலரக் கொடிமலர்கள் மன்றலையுடையவாய் மலர மலர்ந்தகாந்தட்பூ இடமெல்லாம் நாற மற்று நன்றாகமலர்ந்த பன்மலர்கள் நறைபணிப்பநாற அந்நாற்றங்களோடு தென்றல் அசையுந்தலைமைத்து, நின் குன்றத்தொடு கூடலிடைவழி.

---

* "களிறுங் களித்ததிருங் கார்" (பு - வெ. வஞ்சி. உ.)

† "கொன்றை...கொடியிணரூழ்த்த" (குறுந். கூகூ.)

‡ சீவக. செய். அகூஉ - பார்க்க.

§ "குறும்பல் கோதை கொன்றை மலர" (ஐங்குறு. சகள.)

(பி - ம்.) — [1]குன்றதிர்கூவ, குன்றெதிர்கூவ. [2]நனைவீழ்தும்பி வண்டொடினமிஞிறு. [3]மன்றன்மலர. [4]தென்றலசைவுந்தகைமைத் தேவரூஉஞ்.

குன்ற முடைத்த [1]வொளிர்வேலோய் கூடன்
மன்றல் கலந்த மணிமுரசி னார்ப்பெழக்
காலொடுமயங்கிய கலிழ்கடலென
மால்கடல் குடிக்கு மழைக்குரலென
வேறதிர்க்கு மிந்திர னிருமுரு மென
மன்ற லதிரதிர மாறுமா றதிர்க்குநின்
குன்றங் குமுறிய வுரை
தூதேய வண்டின் றொழுதி முரல்வவர்
காதன்மூ தூர்மதில் கம்பலைத் தன்று
வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி
நெடுமென் பணைத்தோட் குறுந்தொடி மகளி
ராராக் காம மார்பொழிற் பாயல்
வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி
முடியா நுகர்ச்சி முற்றாக் காத
லடியோர் மைந்த ரகலத் தகலா
வலர்ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி

௨௯ - ௩௫. கூடலின் மணத்தைப்பொருந்திய மணிநிறமுரசின் ஆர்ப்பு எழுந்ததாகக், காற்றாலேறுண்ட புடைபெயர்கடலெனவும் மயங்குகடலைக் குடிக்கும் மேகக்குரலெனவும் இந்திரனது அதிர்க்கும் பெரிய உருமேறெனவும் அம்மன்றன்முரசு அதிரவதிர அதற்கு மாறுமாறாக அதிர்க்கும், நின் குன்றம் முழங்கிய முழக்கம்.

௩௫. முழக்கம் மலைக்கு வார்த்தைபோறலின் 'உரை' எனப்பட்டது.

இவ்வளவும் முருகவேளை எதிர்முகமாக்கி வாழ்த்தி மேல் அவன்பரங்குன்றை வாழ்த்துவார், பிரிந்த தலைமக்களது வரவும் அவருட் பரத்தையிற் பிரிந்துவந்தானொரு தலைமகன்கூற்றும் தலைவிகூற்றும் தோழிகூற்றுமாகிய த.........

௩௬ - ௭. தலைவியரால் தூதாக ஏவப்பட்டுத் தலைவரோடுமீண்ட வண்டின்தொழுதியது முரற்சி அத்தலைவியர்காதலை மதில்மூதூர்க்கண் அரவமாக்கின்று.

௩௭. 'கம்பலைத்தன்று' என்பது உரிச்சொல்லடியாகப்பிறந்த வினைத்திரிசொல்.

தலைமக்களது வரவுகூறியவாறு.

௩௮ - ௪௬. மகளிரது ஆராக்காமஇன்பத்தைப் பொழிற்பாயற்கண் தலைவரொடுகூட்டும் களவிற்புணர்ச்சியையும் அடியுறைமகளிர் பூவின்கட்டிரியும்

(பி - ம்.)— [1]ஒளிறுவேலோய்.

புலரா மகிழ்மறப் பறியாது நல்குஞ்
சிறப்பிற்றே தண்பரங் குன்று
இனிமன்னு மேதிலர் நாறுதி யாண்டுப்
பணிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர்
மாலைக்கு மாலை வருஉம் வரைசூணில்
காலைப்போய் மாலை வரவு
இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்
பணிபொழி சாரலும் பார்ப்பாருந்
துனியன் மலருண்கண் சொல்வேறு நாற்றங்
கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது
துனிய னணிநீநின் [1]சூள்
என்பாணி நின்னி லெலாஅபாணி நீநின்சூள்
சான்றாள ரீன்ற தகாஅத்த காஅமகாஅ
னீன்றாட் கொருபெண் ணிவள்

---

மகன்றில்போல மைந்தரகலத்தையகலாத நல்லபுணர்ச்சியையும் மறவாது அம்மகளிர் மனமெனத் தருஞ்சிறப்பிற்று, தண்பரங்குன்று.

என்று தலைமகன் மகளிர்மேல்வைத்துக்கூறி.........ய இன்பமிகுதி கூறியதுபொழுது மேல் தலைமகள் புலந்து உரைக்கின்றாள்:—

௪௭ - ௫௰. இப்பொழுது மிகவும் அயல்மகளிர்நாற்றத்தைநாறாநின்றாய்; ஆண்டு அவரோடுகூடுதற்கு நீகாலைப்போய் மாலைவருதல் ஒளிமலரையுடைய மாலைப்பொழுதுதோறுமுண்டாகாநின்றது ; இனிப் பண்டைச்சூளைத்தவிர்;

௪௯. 'மாலைக்குமாலை' என்றது, 'அடிக்கடி' என்றாற்போலநின்றது.

மேல் தலைமகன்:—

௫௧ - ௫. இனிய மணலையுடைய வையைக்கண் இரும்பொழிலாணை; குன்றத்துச்சாரலாணை; பார்ப்பாராணை; துனியல்; மலருண்கண்ணாய், அது சொல் எனக்கு இயைவதன்று; இந்நாற்றம் பரங்குன்றத்துக்கனியினும் மலரினும் பயின்ற காற்றுச் சீத்தடித்துவந்தது; ஆதலான், மிகவுந்துனியல்; என,

மேல் தலைமகள் வையைமணலையும் பரங்குன்றத்தையும் சூளுற்றான் குறிப்புநோக்கி,

௫௫. நீ நின்சூளைவிடு; என,

மேல் தோழி:—

௫௬ - அ. ஏடா! யானென்று சொல்லுங்காலத்தளவும் நில்லுநில்லு; நீ

---

(பி-ம்.) 1 சூள் சூளேல் பாணி.

இருண்மையி ருண்க ணிலங்கிழை யீன்ருட்
கரியளோ வாவ தறிந்திலே னீதா
வருபுனல் வையைமண ருட்டேன் றருமணவே
[1] டண்பரங் குன்றத் தடிதொட்டே னென்பாய்
கேளிர் மணலின் கெழுவு மிதுவோ
வேழுலகு மாளி திருவரைமே லன்புளிதோ
வென்னை யருளி யருண்முருகு சூள்சூளி
னின்னை யருளி [2]லணங்கான்மெய் வேறின்னும்
விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ னோக்கி
[3] யறவ ரடிதொடினு மாங்கவை சூளேல்
குறவன் மகளாணை கூறேலா கூறே

---

நின்சூளைப் பின்னை உறு; அமைதியையுடையோர்பெற்ற மிகத்தகுதியில்லாதமகனே! இவள்தாய்க்கு ஒருபெண்;

என நினக்கு இச்சூளான் ஏதம் வரின் இவள் இறந்துபடுமென்பது கூறிப் பின்னும் அவன் கூற்றைக் கொண்டுகூறுகின்றாள்:—

௫௯ - ௬௦. இலங்கிழை ஈன்ருட்கு அரியளோ? அரியளாவது நீசொல்லுதற்குமுன் யான் அறிந்திலேன்; இதனைப்பார்;

அறிந்திலேனென்பது குறிப்புமொழி.

ஈதாவென்பது ஒரு மரூஉமுடிபு; அஃது இக்காலத்து *இந்தாவென்று வழங்கப்படும்; †சுட்டு நீண்டது.

௬௧. மணத்தைத் தரும் வேள்.

௬௩. கேளிரையொத்த மணலொடு நட்பும் இத்தன்மைத்தோ? அது கிடக்க;

௬௪ - ௬. திருவரைமேல் அன்பு அளிக்கத்தக்கது; ஆதலால், எனக்கு அருள் செய்தாயாக அருள் முருகன் சூளைச் சூளுறின், நின்னை அருளில்லாத அணங்குடனே அவன்வேல் மெய்யாகவருத்தும்;

௬௭ - அ. அதுவேயன்றிப் பார்ப்பாரடியைத் தொடினும் விறல் வெய்யோனூர்மயிலையும் அவன் வேல் நிழலையுநோக்கி அவற்றைச் சூளுறல்;

௬அ. ஆங்கு, அசைநிலை.

௬௯. குறவன் மகளாணையைக் கூறலுறுகின்ற ஏடா! அதனையுங்கூறல்;

---

* "இந்தாவிஃதோரிளங்குழவி" (கந்த. வள்ளியம்மை. ௩௫.)

† "இதா தோன்றுகின்ற சோலை" (சீவக. ௧௨௩௨.)

(பி - ம்.)— [1] தண்பரங்குன்று. [2] அணங்குடகானமெய். [3] யாவரடி.

ஐய சூளி னடிதொடு குன்றொடு
வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்
யார்பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு
நீருரைசெய் நீர்மையில் சூளென்றி நேரிழாய்
1 கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை
நயவரு நறவிதழ் மதருண்கண் 2வாணுதன்
முகைமுல்லை வென்றெழின் முத்தேய்க்கும் வெண்ப
னகைசான்ற கனவன்று நனவன்று நவின்றதை
யிடுதுனி கையாறு வெற்றுயர் கூரச்
சுடுமிறை யாற்றிசி னடிசேர்ந்து சாற்றுமின்
மிக, ஏற்றுதுமல ருட்டுது மவி
3 கேட்டுதும் பாணி யெழுதுங் கிணைமுருகன்
றட்டொழு தண்பரங் குன்று

---

௭௦ - ௭௧. ஐயனே ! சூளுறல் வேண்டின், வணங்கப்படும் குன்றொடு வையைக்கேற்ற சீர்மணலைச் சூளுறுதொழி.

என்று சூள்விலக்க, மேல் தலைமகன்:—

௭௨ - ௩. நேரிழாய்! யார்பிரிய யார்வர யார்வினவ யாரது *செப்பு உண்டாகின்றது ?

என்றது †இருதலைப்புள்ளினோருயிரேமாதலாற் பிரிவும் வரவும் வினவும் செப்பும் நம்மிடை உளவாகாவென்றவாறு.

௭௩ - ௭. நீ அது கருதாது, 'நீருரைக்குஞ்சூள் நீர்மையில் கடுஞ்சூள்,' என்றி, கயத்தின்கணுள்ள நெய்தற்பூவையும் கமழ்முகைகளது மணத்தைத் தருகின்ற அலர்ச்சியான் நயக்கப்படும் நறவம்பூவினது இதழையுமொத்த கண்ணிணையும் நுதலையும் வெண்பல்லையுமுடையாள் நவின்ற குற்றம் நனவுமன்று, கனவுமன்று ;

௭௬. முகைமுல்லை - முல்லையது முகை.

௭௭. பொய்யாதலால், நகைமிக்ககனவு.

௭௮ - ௮௨. என்மாட்டு இன்றியிருக்க இவளிட்ட இத்துனிக் காரணத்தை என்னொழுக்க நெறியாக ஓர்த்தலால் இதனைப் பொய்ச்சூளென்று கருதி என்னை இறை துயர்கூரச்சுடும்; இது செய்யாமல் நீ சென்று அவ

---

* செப்பு - விடை.

† "யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி, னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே" (அகநா. ௧௨); கலி. ௮௯-ம் செய்யுளையும் பார்க்க.

**(பி - ம்.)**— 1கயவருநெய்தல். 2வாணுதலார். 3தோற்றுதும்.

தெரியிழாய் 1செல்கென்றா யெல்லாயாம் பெற்றே
2 மொருவர்க்கும் பொய்யாநின் 3வாயில்சூள் வௌவல்
பருவத்துப் *பன்மாணீ சேறலிற் காண்டை
யெருமை யிருந்தோட்டி யெள்ளீயுங் காளை
செருவஞ் 4செயற்கென்னை முன்னைத்தன் சென்னி
யருள்வயினாற் றூங்கு மணிகையாற் றாக்கி
நிரைவளை யாற்றிருஞ் சூள்
வளிபொரு சேட் 5சிமை வரையகத்தாற்
6 றளிபெருகுந் தண்சினைய
பொழில்கொளக் குறையாமலரக்
குளிர்பொய்கை யளறுநிறைய

---

னடியைச் சேர்ந்து ஆற்றுவாயாக; இவ்வுரையை எல்லார்க்கும் அறிவிம்மின்; முருகன் தானை யாவருந்தொழும் பரங்குன்றத்தின்கட்சென்று மலரை ஏற்றுதும்; அவியையூட்டுதும்; பாணித்தாளத்தையுடைய பாட்டைத்தோற்றுவிப்பேம்; கிணையொலியை எழுவிப்பேம்.

௭௯ - ௮௧. 'ஆற்றிசின்' என்றது, தோழியை நோக்கி. 'சாற்றுமின்' என்றது, தன் ஏவிளையரைநோக்கி. உளப்பாடுகள் அவளையும் அவரையுநோக்கி.

மேல் தோழி:—

௮௫ - ௮௯. ஏடா! என்னைச் சாந்திசெய்யச் செல்கவென்றாய்; அதனாலே நின் பொய்ச்சூளானாகிய ஏதம் நின்னை வௌவுதலை யாமறிந்தேம்; கூற்றினது மிக்க ஆணையையுமிகழும் ஆற்றலையுடைய முருகன் நின்னை மாறுபடுதற்குமுன்னே என்னிரைவளை தூங்கும் மணிநாவைக் கையாற்றாக்கித் தன் சென்னியான் வணங்கி இருஞ்சூளான் வரும் ஏதத்தை அருட்கூற்றான் ஆற்றுதலை ஏதிலரைப்புணரும்பருவத்து ஆண்டு நீ பலகாலும் சேறலாற் காண்டி;

என்றது, யான் ஆற்றவேண்டா; அவள் தானே ஆற்றுமெனத் தலைமகள் கற்புடைமை கூறியவாறு.

௮௪. 'ஒருவர்க்கும் பொய்யாநின்' என்றது குறிப்புமொழி.

கணவற்குவரும் ஏதமஞ்சிச் செய்தலால் தம் கற்பிற்கும்... .........

தலைமகளிர் யாவரும் இத்தன்மைய செய்வரென அவரது செய்தி கூறுகின்றாள்:—

௯0 - ௯௧. மழையான் வளர்ந்த தண்சினைப் பொழில்கள் பூக்கள்

---

* பன்மாண் - பலகாலும்; (பரி. ௨. ௭௮; ௧௮. ௯௨.)

(பி - ம்.) — 1சொல்லென்றாயேலா. 2ஒருவற்கும். 3வாயிற்சூள். 4செயற்கென்னை. 5சிமைய. 6தளிர்பெருகும்; தளிர் பெறுஞ்சினை.

மருந்தநளி மணன் [1]ஞெமர்ந்த
நளிமலர்ப் பெருவழிச்
சீறடியவர் சாறுகொள வெழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையு
மாறுசெல் வளியி னவியா விளக்கமு
நாறுகமழ் வீயுங் கூறுமிசை முழவமு
மணியுங் கயிறு மயிலுங் குடாரியும்
பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி
யருவரைச் [2]சேராத் தொடுநர்
கனவிற் றொட்டது [3]கைபிழை யாகாது
நனவிற் சேஎப்பநின் னளிபுனல் வையை
வருபுன லணிகென வரங்கொள் வோருங்
கருவயி றுறுகெனக் [4]கடம்படு வோருஞ்
செய்பொருள் வாய்க்கெனச் [5]செவிசார்த்து வோரு
மையம ரடுகென வருச்சிப் போரும்
பாடுவார் பாணிச்சீரு மாடுவா ரரங்கத் தாளமு
மஞ்சாடு மலைமுழக்குந்

---

பறிக்கத் தொலையாவாக மலரக் குளிர்பொய்கைகள் நீரால் நிறையச் செறிந்த மணல்பரந்த வரையோடு கூடலிடைவழி... ..பூசை செய்யவெழுந்து சாந்தமும் புகைப்பனவும் மாற்றாயியங்கும் காற்றால் நந்தாத விளக்கிற்குவேண்டுவனவும் நாறுகின்ற கமழ்வீயும் இசையைக்கூறுகின்ற முழவமும்.

௧௦௦. கயிறு - பாசம்.

௧௦௨ - ௫. அருவரைக்கட்சென்று சேயது அடிமலரைத்தொழுது, கனவின் யாம் எம் காதலரைத் தொட்டது பொய்யாகாமல் நனவின்கண் எய்த வையைப் புதுப்புனலை அணிக.

௧௦௬. யாம் வயிறுகருவுறுகவெனப் பொருள்களை நேர்வோரும்.

௧௦௭. எம் கணவர் செய்பொருள் வாய்க்க.

௧௦௮. எம் கணவர் வியக்கத்தக்க அமரையடுகவென அருச்சிப்போருமாய்.

௧௦௯. பாடுவாரது பாணியாகிய தாளமும்,

௧௧௦ - ௧௧. மலைக்கண் எதிரொலியுமாகிய இக்கெடாத கம்பலைக் கண்ணே.

---

(பி - ம்.)— [1]ஞெமிரநளி. [2]சேஎத்தெடுநர்க்கு. [3]கைபிழையாது. [4]கடன்படு. [5]செவிசாத்துவோரும்.

துஞ்சாக் கம்பலைப்
பைஞ்சுனைப்பாஅ யெழுபாவைய
ராயித ழுண்க ணலர்முகத் தாமரை
தாட்டா மரைத்தோட் டமணியக் கயமல
ரெங்கைப் பதுமங் கொங்கைக் கயமுகைச்
செவ்வா யாம்பல் சென்னீர்த் தாமரை
புனற்று மரையொடு புலம்வேறு பாடுறூக்
கூரெயிற்றூர் குவிமுலைப் பூஞொடு
மார ஞைப்பார் மார்பணி கலவி
யரிவைய ரமிர்தபான
முரிமை மாக்க [1]ளுவகையமிர் துய்ப்ப
மைந்தர் மார்வம் வழிவந்த
செந்தளிர் மேனியார் செல்ல [2]தீர்ப்ப
எனவாங்கு

கககூ. ஏழாவது *வினைசெயிடத்தின்கண் வந்தது.

ககஉ. சுனைக்கட் பாய்ந்தெழு பாவையராகிய கூரெயிற்றூர் (ககஅ) என மேலே கூட்டுக.

ககந - உச. கண்ணாகிய தாமரைப்பூவும் முகமாகிய தாமரைப் பூவும் தாளாகிய தாமரைப் பூவும் தோளாகிய பொற்கயத்து மலர்ந்த எம் கையாகிய தாமரைப்பூவும் கொங்கையாகிய பெரிய தாமரைமுகையுமாய்ச் செவ்வாயாம்பலொடுங் கூடி இயங்குநீர்மையையுடைய இத்தாமரைகள் அந்நீரின்கட்டாமரையொடு வேறுபாடுறூத கூரெயிற்றூர் முலைப்பூஞொடு கணவர்மார்பணிகள் மயங்க, அவர்க்கு அரிவையராக்கும் அமிர்தம்போலும் காமபானத்துடனே அமுதாக்குதற்குரிய மடையர் உவகையைச் செய்யும் அமிர்தத்தைக் கொடுக்கத் தம் கணவர் மார்பின்கண் வழிவந்த செல்லலைச் செந்தளிர் மேனியார் தீரா நிற்பர்.

கககூ. 'கலவ' என்பது கலவியென நின்றது.

சிறடியவர் சாறு கொளப் (கூகூ) பெருவழியிடத்து (கூ௫) எழுந்து (கூகூ) பிறவுமேத்தி (க௦க) வரையகத்துச் சென்று தொழுது (க௦உ) கம்பலைக்கண்ணே (ககக) மார்பணி கலக்க (கககூ) உவகையமிர்துய்ப்ப (கஉக), வரங்கொள்வோரும் (க௦௫) கடம்படுவோரும் (க௦கூ) செவிச்சார்த்துவோரும் (க௦எ) அருச்சிப் போருமாய் (க௦அ) செல்லல் தீர்ப்ப (கஉந) எனக்கூட்டுக.

கஉச. எனவாங்கு - என்றிவ்வாற்றால்.

---

* தொல்காப்பியம், வேற்றுமையியல், சூ. உ௦ பார்க்க,

(பி - ம்.)— [1]உவகையமிர்துவாக்க. [2]நீர்ப்பவாங்க.

[1]உடம்புணர் காதலரு மல்லாருங் கூடிக்
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோ டந்த
நெறிநீ ரருவி யசும்புறு செல்வ
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
தண்பரங் குன்ற நினக்கு.

**கடவுள் வாழ்த்து.**

**[2]ஆசிரியனல்லந்துவனார் பாட்டு.**

**[3]மருத்துவனல்லச்சுதனாரிசை.**

**பண்ணுப்பாலையாழ்.**

---

கஉரு - ஙஂ0. பரங்குன்றமே! தம்முட் பிரியாத மகளிரும் மைந்தரும் அல்லாத வரம்வேண்டுவாருங் கூடி மறுமிடற்றண்ணற்கு மாசிலோள் தந்த கடம்பமர்செல்வன் கடிநகரை வழிபடச் செல்வத்துடனே மண்வருந்த மழைவறந்ததாயினும் நெறிநீரருவி அசும்புமிகுஞ்செல்வம் நினக்கு மன்னுவதாக.

கஉகூ. மா, வியங்கோளசைச்சொல்.

முருகற்கிடமாகிய பரங்குன்றை வருணித்த முகத்தால் எதிர்முகமாக்கியும் படர்க்கையாக்கியும் அவனையே வாழ்த்தி முடித்தமையிற் கடவுள்வாழ்த்தாயிற்று. (அ)

---

(பி - ம்.)— 1உடன்புணரக்காதலரும். 2ஆசிரியர்நல்லந்துவனார், ஆசிரியநல்லந்துவனார், ஆரியநல்லந்துவனார். 3மருத்துவ நல்லச்சுதனார்.

## ஒன்பதாம் பாடல்.

### செவ்வேள்.

இருநிலந் துளங்காமை வடவயி னிவந்தோங்கி
[1]யருநிலை யுயர்தெய்வத் [2]தணங்குசா றலைகாக்கு
முருமுச்சூழ் சேட்சிமை யுயர்ந்தவ ருடம்பட
வெரிமலர்த் தாமரை யிறை [3]வீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்நீ
மையிருநூற் றிமையுண்கண் மான்மறிதோண் மணந்தஞான்
றையிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகண் மலருண்கண்
மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்
தணிமழை தலையின்று தண்பரங் குன்று

(ஒன்பதாம் பாடலுரை.)

க - கக. பெரியநிலம் அசையாமல் வடதிசைக்கண்ணே மிக ஓங்கி அணங்குதல்சான்ற தெய்வசாதிக்கு இறையாகிய இந்திரனாற் காக்கப்படும் இமயச்சிமையத்தின்கண் தெய்வமுனிவரறுவருமுடம்படக் கற்பால் நன்கு மதிக்கப்படும் ஆரலிடத்தே மணிமிடற்றண்ணற்குப் பிறந்தோய்! மையாகிய கரிய நூற்றான் அணியப்பட்ட இமைக்குங்கண்ணையுடைய வள்ளிதோளை நீ களவின்கண் மணந்த அன்று மெய்யின்கண் ஆயிரங்கண்ணையுடைய இந்திரன்மகள் தேவசேனையது கண் முதுவேனில் காராந்தன்மைபெற மணிநிற மழைபெய்தாலொக்கப் பரங்குன்றின்கண் நீராகிய தணிந்த மழையைப் பெய்தது.

ச - அ. அயனால் வீழ்த்தப்பட்ட ஆகாயகங்கையை மலர்ந்துவிழும் பூவையொப்ப வேகந்தணியச்சடைப்பாரத்தின்கட்டாங்கிய ஒப்பில்லாத நிலைமையினையுடைய சலதாரியாகிய மணிமிடற்றண்ணலெனக் கூட்டுக.

சு. சலதாரி - சலத்தைத் தரிக்குமியல்பையுடையவன்.

அ. வள்ளியை 'இமையுண்கண்மான்மறி' என்றார், [4]மானுடை மகளாகலின்.

இவ்வளவும் முருகவேளை எதிர்முகமாக்கிக் [5]கைகோளிரண்டிற்குமுரிய தேவியராற் காதலிக்கப்பாடு கூறிவாழ்த்தி மேல் வள்ளியது சிறப்பும் அவன்

(பி - ம்.)— [1]அகனிலையுயர். [2]அணங்குகாறலை. [3]வீழ்தத முருகுபெருவாரி. [4]மானுடமகள், மானிடமகள். [5]கைக்கோள்.

நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் [1]கேண்மின் சிறந்தது
காதற் காமங் காமத்துச் சிறந்தது
விருப்போ டொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதா
னிரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்
பரத்தையுள் ளதுவே பண்புறு கழறு
றோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே
[2]கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே, அதனால்,
அகற லறியா வணியிழை நல்லா
ரிகறலைக் கொண்டு [3]துனிக்குந் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பிற் [4]றண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்

பரங்குன்று அவட்கொத்தவாறும் கூறலுறுவார், நான்மறைப்புலவரை நோக்கித் தமிழது சிறப்புக் கூறுவாராய்ப் பொதுவகையான் அவற்றிற்குக் காரணம் கூறுகின்றார்:—

கஉ - ௩. நான்மறைப்பொருளை விரித்து அம்மறையது நல்லிசையை விளக்கும் புலவீர்! சிறந்ததொரு பொருளைக் கேண்மின்:

கச - ௫. காமத்துச் சிறந்தது காதலையுடைய காமம்; அஃதாவது, மெய்யுற்றறியாதாரிருவர் அன்பொத்துப் பான்மை வகையால் தாமே மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சி.

க௬ - உ௬. இனி அன்பு ஒவ்வாத கற்புப் புலத்தலாற் சிறந்தது; அப் புலவியாவது, தான் வாயில் வேண்டலும் வாயினேர்தலுமாகிய இவையுள் ளீடாகத் தலைவனது பரத்தைமையான் வருவது. இனிப் புதிதாகத்தோள் நுகரப்பட்ட பரத்தையில்லின்கண்ணே ஒருத்தியை நாட்காலையே செவ் வணியணிந்து விட்டுப் பூப்பு அறிவிப்ப அப்பண்புறு கழறலால் தலைவன் வந்து உவக்கும்புணர்ச்சியை யுடைத்து; அப்புணர்ச்சிகடாம் தலைவிக்குப் பாங்காயினார் கேட்டு வருத்தமுறப் பரத்தையால் தன் மனைக்கண் அலர் தூற்றப்பட்டுள. அப்புணர்ச்சியின்பந்தானுண்டாவது இயல்பானன்றி ஊட லானுயது; அதனால், இக்கற்பிற் போலத் தலைவர் நீங்குதலறியாத கள

(பி - ம்.)— [1]கேண்மினறந்தது. [2]கேளணங்குறமனைமனைக். [3]துணிக் குந்தவறிலரைத். [4]தண்டமிழாவந்துழார், தண்டமிழாயவந்திப்பார்.

ஊழாரத் தோய் [1]கரை நூக்கிப் புனறந்த
காழாரத் தம்புகை [2]சுற்றிய தார்மார்பிற்
கேழாரம் பொற்ப வருவானைத் தொழாஅ
வாழிய மாயாநின் றவறிலை யெம்போலுங்
கேழிலார் மாணல முண்கோ திருவுடையார்
மென்றோண்மே லல்கி நல்கலு மின்று
வையெயிற் றையா மகளிர் திறமினிப்
பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய
[3]கரையாவெந் நோக்கத்தாற் கைசுட்டிப் பெண்டி
ணிகலி [4]ணிகந்தானை யவ்வே டலைக்கண்ணி
திருந்தடி தோயத் திறைகொடுப் பானை

விற்புணர்ச்சியையுடைய மகளிர் அவரொடு மாறுகொண்டு துனிக்கும் குற்றமுடையாரல்லார் இப்புணர்ச்சியை வேண்டுகின்ற பொருளிலக்கணத்தையுடைய தமிழை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தைக் கொள்ளமாட்டார்.

கஅ. பண்புறுகழறலாவது:—* "பூப்பின் புறப்பா டீராறு நாளும், நீத்தகன் றுறைத லறத்தா றன்றே" எனும் அறத்தொடு பொருந்திய உறுதிச் சொல்.

இனி அக்களவிற்புணர்ச்சியையுடைமையான் வள்ளி சிறந்தவாறும் அத்தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்தவாறுங் கூறுகின்றார்:—

உஎ – சச. சந்தனமரங்களையுடைய ஊழான் மெலிந்த கரையை முறித்து வையைப்புனல்கொண்டுவந்த வயிர்த்த சந்தனத்தினது புகைசூழ்ந்த தாரையுடைய மார்பின்கண் நிறத்தையுடைய முத்தாரம் அழகுபெறத் தன்னொடு கலத்தற்குவரும் முருகவேளைத் தொழுது 'எம்போலி...வஞ்சனே! வாழ்வாயாக; நின்னை அறியாது அகப்பட்ட அவ் வையெயிற்று மகளிர் திறம் இனி மழைபெய்ய வேண்டி வருந்தும் காவையொக்கும்; ஆதலால் அவரே தவறுடையராவதல்லது நீ தவறுடையையல்லை; நின்னையெய்துந் திருவுடையார்மென்றோண்மேலல்கி நல்கலும் நினக்கின்று ; ஆகையால் நின் மாணலமுண்ணக்கடவேனோ' என்று தன்னைக் கையாற் சுட்டிச்சொல்லி வெகுளி மிக்க நோக்கத்துடனே அவன் பெண்டுகாரணமாக உண்டான புலவியானீங்கிய [5]தேவசேனையைச் சென்றெய்தி அவ்வேள் தன்தலைமாலை அவள் திருந்தடியைத் தோய வணக்கமாகிய திறையைக் கொடுப்ப, அவள் புலவிநீங்கி

* "பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி, பூப்பின் புறப்பா டீராறு நாளு, நீத்தகன் றுறைத லறத்தா றன்றே" (இறை. சூ. சங.)

(பி – ம்.)— [1]கரைநீக்கிப். [2]சுற்றிய மார்பிற். [3]கரையாவ நோக்கத்தாற். [4]இகந்தானை வேள்கண்ணித். [5]தெய்வச்சேனை.

[1] வருந்த லெனவவற்கு மார்பளிப் பாளைக்
குறுகலென் றொள்ளிழை கோதைகோ லாக
* [2]விறுகிறுக யாத்துப் புடைப்ப
வொருவர் மயிலொருவ ரொண் [3]மயிலோ டேல
[4] விருவர் வான்கிளி யேற்பின் மழலை
செறிகொண்டை மேல்வண்டு சென்றுபாய்ந் தன்றே
வெறிகொண்டான் குன்றத்து வண்டு
தார்தார் [5]பிணக்குவார் கண்ணியோச்சித் தடுமாறுவார்
[6] மார்பணி கொங்கைவார் மத்திகையாப் புடைப்பார்
† கோதை வரிப்பந்து கொண்டெறிவார்
பேதை மடநோக்கம் பிறிதாக வூத
நுடங்கு நொசிநுசுப்பார் நூழி றலைக்கொள்ளக்

அவனை வருந்தலென்று சொல்லித் தன் மார்பையளிப்ப, வள்ளி அதனைக் கண்டு 'இனி அவளைக் குறுகல்' என்று அவன்கையை மிகஇறுகயாத்துத் தன் ‡ கோதை கோலாகப் புடைப்ப அதனைக்கண்டு ஒருவர் மயில் ஒருவர் மயிலோடேல, இருவர் வான்கிளியும் தம்முள் மழலையேற்கின்ற அளவிலே, வெறியாட்டைவிரும்பினன் குன்றத்துவண்டு தேவசேனையது கொண்டைமேற் செறிந்த வண்டை மேற்சென்று பாய்ந்தது.

௩௪. காவையொத்தலாவது:—கா, தனக்கு இன்றியமையாத மழையை வருவித்துக் கொள்ளமாட்டாது அது தானேவந்துழிப் பொலிந்து வாராத வழியும் ஆமளவுமாற்றி ஆகாத எல்லைக்கண் [7]இறந்து படுதல்.

௪௪. குன்றத்துவண்டென்றமையான் அது வள்ளியுடையதாயிற்று.

௪௫. அங்ஙனம் பாய்ந்த அதனைக் கண்டு தேவசேனைபாங்கியர் வள்ளிபாங்கியரோடு இகலித் தாரையும் தாரையும் பிணக்குவார்.

௪௬. மார்பை அழகுசெய்த கொங்கைக்கண்.

௪௭ - ௯. கோதையையும் வரிப்பந்தையும் கொண்டெறிவாராய்த் தம் பேதைமையையுடைய மெல்லிய நோக்கம் வெகுளியான் வேறுபட ஊத நுடங்கு நுசுப்பினராயிருந்தே மிடைந்த போரைமேற்கொள்ள,

* "இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்" (நாலடி. புல்லறிவாண்மை. ௮.)

† "கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி" (கலி. ௫௧.)

‡ "கோதை கோலா...அலைப்பேன் போலவும்" (கலி. ௧௨௮.)

(பி - ம்)— [1]வருந்தாலெனவவடாரக்கு. [2]இறுதிறுக. [3]மயிலோடல, இருவான கிளி. [5]பிணங்குவார். [6]மாரணி [7]இறந்துபடுமாகலானத் தொழில்களானொத்தல்.

கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்
வயம்படு [1]பரிப்புரவி மார்க்கம் வருவார்
தேரணி யணிகயிறு தெரிபு வருவார்
வரிசிலை வளைய மார்புற வாங்குவார்
[2] வாளி வாளிக ணிலைபெற மறலுவார்
தோள்வளை யாழி சுழற்றுவார்
மென்சீர் மயிலிய லவர்
[3] வாண்மிகு வயமொய்ம்பின்
வரையகலத்தவனை வானவன்மகள்
மாணெழின் மலருண்கண்
[4] மடமொழியவ ருடன்சுற்றிக்
கடிசுனையுட் குளித்தாடுநரு
மறையணிந்த வருஞ்சுனையா
னறவுண் [5]வண்டாய் நரம்புளர்நருஞ்
சிகைமயிலாய்த் தொகைவிரித்தாடுநருங்
கோகுலமாய்க் கூவுநரு
மாகுல மாகு நருங்

---

௫௦ - ௫௬. அதனைக்கண்டு, வள்ளி பாங்கியராகிய மென்சீர்மயிலியலவர், தோட்டிப்புண்ணுறல் மென்மைபட்ட சென்னியை யுடைத்தாய...... ......................................மதத்தாற் கமழ்கின்ற களிற்றியல்பைத் தம்பாற்கொள்வார்; வெற்றிபட்ட செலவினையுடைய புரவிகளது கதியால் வருவார்; தேரணிபோல வடிக்கயிற்றைத் தெரிந்துகொண்டு வருவார்; வாளி மார்புற வரிசிலையை வளைய வாங்குவார்; வாளையுடையவர் நிலைமை பெற மறலுவார்; தோள்வளையாகிய ஆழியைச் சுழற்றுவாராக,

௫௭ - ௬௦. வானவன் மகளுடைய பாங்கியர் அதற்கு அஞ்சி வாட்டழும்பு நெருங்கிய வெற்றிமொய்ம்பினையுடைய முருகனைத் தொக்குச் சூழ்ந்துகொண்டு,

௬௨ - ௩. அப்பாறையணிந்த சுனைக்கண் வண்டாய் நின்று.

௬௬. ஆகுலமாகுநருமாக,

---

(பி - ம்.)— [1]படுபுரவிமாறகம். [2]வாவாளிகள். [3]வாணவயமொய்ம்பின். [4]மடிமொழி. [5]வண்டாறு.

குறிஞ்சிக் குன்றவர் [1]மறங்கெழு வள்ளிதமர்
வித்தகத் தும்பை விளைத்தலான் வென்வேலாற்
கொத்தன்று தண்பரங் குன்று
கடுஞ்சூர் மாமுத றடிந்தறுத்தவே
லடுபோ ராளநின் குன்றின் மிசை
யாட னவின்றோ [2]ரவர்போர் செறுப்பவும்
பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்
[3] வல்லாரை வல்லார் செறுப்பவு
மல்லாரை யல்லார் செறுப்பவு மோர்சொல்லாய்ச்
செம்மைப் புதுப்புனற்
றடாக மேற்ற தண்சுனைப் பாங்கர்ப்
[4] படாகை நின்றன்று.
மேஎ வெஃகினவை
வென்றுயர்த்தகொடி விறல்சான்றவை
[5] கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர
வாழ்த்தினேம் பரவுதுந் தாழ்த்துத்தலை நினையா

௬௭ - ௯. குறிஞ்சிநிலத்து மக்களாகிய குறவர்பெற்ற மறங்கெழு கொடிச்சியர் திருந்திய போரைவிளைத்தலால் வென்வேலானுக்கியைந்தது.

இவ்வாறு அவனைப் படர்க்கையாக்கி இவை கூறிப் பின்னும் எதிர்முக மாக்கி வாழ்த்துகின்றார்:—

௭௦. வேலால்.

௭௨. ஆடல் பயின்றாரை அவ்வாடல் பயின்றார் வெல்லவும்.

௭௪. வல்லாரை - வல்லுப்போர்வல்லாரை.

௭௫. அல்லார் - ஒழிந்த கல்விகளையுடையார்.

இக்கல்வி வென்றிகளான் ஒப்பில்லாத புகழ்பரப்ப.

௭௭ - ௮. தடாகம்போலும் சுனைப்பக்கத்துக் கொடியெடுத்து நின்றது.

௭௯. நினக்குப் பொருந்தினவேலினை.

௮௦. வென்றுயர்ந்தகொடியால்விறலமைந்தனை.

௮௧ - ௫. கற்புப்பொருந்திய நெறியையுடைய தேவியாரது அன்பு

(பி - ம்.)— [1]மறகெழு. [2]அவைபோர். [3]வல்லாரைவல்லாணர் செறுப்பவும். [4]படாக்கைநினகுன்று. [5]கற்பினை.

நயத்தலிற் சிறந்தவெம் மடியுறை
பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே.

**கடவுள் வாழ்த்து.**
**குன்றம்பூதனார் பாட்டு.**
**மருத்துவனல்லச்சுதனாரிசை.**
**பண்ணுப் பாலையாழ்.**

---

பொருந்திய அவ்வூடலுரிமையைய நயத்தற்கேற்ற பண்பினையுடைய குமர! யாம் நின்னை வணங்கி வாழ்த்தி வேண்டிக்கொள்ளாநின்றேம்; அன்பாற் சிறந்த எம்மடிக்கணுறைவு நாடோறும் டொலிந்து பயன்தருதலொடு சிறக்கவென்று.

என்றென்பது அவாய்நிலையான் வந்தது. (௯)

---

## பத்தாம் பாடல்.

### வையை.

மலைவரை மாலை யழிபெயல் காலைச்
செலவரை காணுக் [1]கடற்லைக் கூட
நிலவரை [2]யல்ல னிழத்த விரிந்த
பலவுறு போர்வைப் [3]பருமணன் மூஉய்
வரியரி யாணு முகிழ்விரி சினைய
[4] மாந்தீந் தளிரொடு வாழையிலை மயக்கி
யாய்ந்தளவா வோசை [5]யறையூஉப் பறையறையப்
போந்தது வையைப் புனல்
புனன்மண்டி யாடல் புரிவான் சனமண்டித்
தாளித நொய்ந்நூற் சரணத்தர் மேகலை
யேணிப் படுகா [6]லிறுகிறுகத் தாளிடூஉ
நெய்த்தோர் நிறவரக்கி *னீரெக்கி யாவையு
முத்துநீர்ச் சாந்தடைந்த மூஉய்த் தத்திப்

---

(பத்தாம் பாடலுரை.)

க - அ. வையைப்புனல் மலையிடத்து மாலைக்கட்பெய்த மிக்க பெயலான் எல்லைசென்று காணப்படாத கடலைக் கூடுதற்குக் காலைப்............... போந்தது.

க. ஈண்டு ஏதுப்பொருண்மைக்கண் வந்த ஆனுருபு இறுதிக்கட் டொக்கு நின்றது.

உ. 'சென்று' என்பது 'செல்ல' எனத் திரிந்தது.

ங - அ. நிலவெல்லைக்கட் பசிமுதலிய துன்பங்கள் சுருங்க விரிந்த பல பூக்கள் நெருங்கின போர்வையுடனே பருமணலை மூடி வரியையுடையவண்டு ...............முகிழ்விரிசினையின் கண்ணவாகிய மாந்தளிர்களுடனே வாழையிலைகளை மயக்கி ஆராய்ந்து அளவிடப்படாத பல ஓசையும் ஒலிக்கக் கரைகாவலரையழைக்கின்ற பறை அறையப்போந்ததெனக் கூட்டுக.

சு. 'மாந்தீந்தளிரொடு வாழையிலை மயக்கி' என்பது புனல் கரையிற் சோலைகளுள் மரச்சினைகளைத்தோய்ந்து செல்கின்றமை தோன்ற நின்றது.

கூ - கஅ. அப்புனலின்கண் மண்டியாடுதலைச் செய்ய வேண்டிச் சனம் செல............ ............யவிதமான சரணத்தையுடையராய்

---

* 'நீரேக்குவோரும்' என்றும் இது படித்தற்கு இடமுண்டு.

(பி - ம்.)— [1]கடல்வரைக்கூடி. [2]அல்லலிழக்கவிரிந்தபுலவுறு. [3]பயிருமணல். [4]மாந்தளிரோடு. [5]அறைபிறபறையறைய. [6]இறுகுறுகுதன்னா.

புகவரும் பொங்குளைப் *புள்ளியன் மாவு
மிகவரினு மீதினிய வேழப் பிணவு
1 மகவரும் பாண்டியு மத்திரியு மாய்மாச்
சகடமுந் தண்டார் சிவிகையும் பண்ணி
வகைவகை யூழூழ் கதழ்புமூழ்த் தேறி
முதிய ரிளையர் முகைப்பரு வத்தர்
வதிமண வம்பலர் 2வாயவிழ்ந் தன்ன
ரிருதிற மாந்தரு மின்னினி யோரும்
விரவு நரையோரும் 3வெறுநரை யோரும்
பதிவத மாதர் பரத்தையர் பாங்க

---

மேகலையாகிய ஏணிப்படுகாலை மிக இறுகுமாறு தாளிட்டு அரக்குநீரை †எக்கும் கருவியெல்லாவற்றையும் முத்துப்போலும் பனிநீரோடு அளவிய சந்தனத்துடனே மூயின்கட்கொண்டு தத்துதலான் மேல்கொளற்கரிய மாவையும்....................மேலிருத்தற்கு இனிய பிடியையும் பெயர்சொல்லி அழைக்கப்படும் அரிய எருதுபூண்ட வையத்தையும் கோவேறுகழுதையையும் ஆய்மாபூண்ட சகடத்தையும் தண்டார்ந்த சிவிகையையும் வகைவகையாகப்பண்ணி முறைமுறையாக வந்துமொய்த்து விரைந்தேறி.

க0 - கக. ‡இருகோவை முதல் முப்பத்திருகோவையீறாக ஒன்றற்கொன்று வடமேறுதலான் மேகலையை §'ஏணிப்படுகால்' என்றார்.

கரு. மூடுதலுடைமையாற் பூப்பெட்டியை 'மூடய்' என்றார்.

கசு. பாண்டியென்பது ஆகுபெயர்.

கஎ - உசு. முகைபோலும் பருவத்தாரும் தங்கிய மணத்தையுடைய புதுமலர் வாயவிழ்ந்தன்ன பருவத்தாருமாகிய இளையவரும் விரவுநரையோரும் வெறுநரையோருமாகிய முதியவரும் என்ற இவ்விருதிறமாந்தரும்

---

* "புள்ளேர் புரவி" (பரி. கக-அடி ருஉ), "புள்ளியற்கலிமா" (தொல். கற்பு. ருஈ.) - புள்ளியற் கலிமா (அகம் - 64)

† "மருப்பினீரெக்குவோரும் (பரி. கக), "சிவிறிப் பொறிநீரெக்கியும்" (க - சஉ. கஅஅ), "குருதிச் செம்புன றவிரா தெக்கவும்" எனவருவன, (ஷை சசு - உகூ) பெருங்கதை.

‡ "எண்ணிரண் டிரட்டி கோத்த விரிசிகை யிருபத் தொன்றிற், பண்ணிய கலாப மீரேழ் பருமநா லிரண்டிற் செய்த, வண்ணமே கலையிரண்டிற் காஞ்சியிவ் வகையோ ரைந்தும், புண்ணியக் கொடிவண் டார்ப்பப் பூத்த போற் புலம்பப் பூட்டி" (திருவிளை. திருமணப். கருஅ.)

§ ஏணிப்படிகாலெனவும் வேறுநூல்களில் இப்பெயர் வழங்கும்.

(பி - ம்.)— 1அகவவரும். 2வாய்பிளந்தன்னர். 3வெற்றுநரையோரும், அறநரையோரும்.

ரதிர்குரல் வித்தக ராக்கிய தாள
விதிகூட் டியவிய மென்னடை போலப்
பதியெதிர் சென்று பரூஉக்கரை நண்ணி
நீரணி காண்போர் [1]நிரைமாட மூர்குவோர்
பேரணி நிற்போர் பெரும்பூச றாக்குவோர்
மாமலி யூர்வோர் வயப்பிடி யுந்துவோர்
வீமலி கான்யாற்றின் றுருத்தி குறுகித்
*தாம்வீழ்வா ராகந் தழுவுவோர் தழுவெதிரா
தியாமக் குறையூட லின்னசைத் தேனுகர்வோர்
காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்

---

கற்புடைமகளிர் பரத்தையரெனப்பட்ட இப்பருவங்களின் மகளிரும் இம் மாந்தர்க்கும் மகளிர்க்கும் பாங்காயினாரும் வித்தகராக்கிய தாளவிதியாற் கூட்டப்பட்ட அதிர்குரலியங்களது மென்னடைபோலப் பிறபதியிலுள்ளாரோடு யாற்றெதிரே நடந்துசென்று அதன் உயர்ந்த கரையைச் சேர்ந்து.

உம்மைகள் வேண்டியவழிக் கூட்டியுரைக்கப்பட்டன.

௨௪-௫. தாளவிதிகூட்டிய இயமென்னடை போறலாவது: இயங்கள் ஒன்றற்கொன்று கூறுவேறுபாடுடையவேனும் விளம்பிதநடையையுடைய தாளகதியால் எல்லாம் மென்னடையவாய்ச் செல்லுமாறுபோல எதிர் செல்கின்றவர்களும் வன்மை மென்மை இடைமையாகிய பண்புவேறுபாடுடையரேனும் நெருக்கத்தால் எல்லாரும் மென்னடையராய்ச் சேறல்.

நீரினது அழகுகாண்டல் (௨௭) முதலாக அமளிசேர்தல் (௩௪) ஈறாகச் சொல்லிய விளையாட்டுக்கள் அலர்வாயவிழ்ந்தன்னபருவத்துக் (௨௰)கற்புடைமகளிர் பரத்தையரன; அவற்றில் மாவின்றிரளை ஊர்தலும் பிடியை உந்துதலும் பரத்தையர்க்கேயுரிய.

௨௭. நிரைத்த நீரணிமாடம்.

௨௮. மைந்தரொடு பொரும் விளையாடற்போர்க்குப் பேரணியாய் நிற்பார்; தூசியராய்ச்சென்று தாக்குவார்.

௩௰. நறுநாற்றத்தையுடைய பூ மிக்க யாற்றிடைக்குறை.

௩௧-௪. அத்தழுவுதலைச் செய்யாது யாமத்து ஊடற்குறையாகிய இனிய கலவிநசையைத் தரும் தேனை நுகர்வோர்; †காமக்கணிச்சி உடைத்தலால் ஊடலைச் சுழற்றியெறிந்துவிட்டு அமளிசேர்வோராக.

---

* "தாம் வீழ்வார் மென்றோள்" (திருக்குறள், ௧௧௦௩.)

† "காமக்கணிச்சி யுடைக்கு நிறையென்னு, நாணுத்தாழ் வீழ்த்த கதவு" (திருக்குறள், ௧௨௫௧.)

(பி - ம்.) — [1]நிரைமரம்.

தாம்வேண்டு காதற் கணவ ரெதிர்ப்படப்
பூமேம்பா டுற்ற புனைசுரும்பிற் சேம
மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து
தாம்வேண்டும் பட்டின மெய்திக் கரைசேரு
மேமுறு நாவாய் வரவெதிர் கொள்வார்போல்
யாம்வேண்டும் வையைப் புனலெதிர்கொள் கூடல்
ஆங்க, அணிநிலை மாடத் தணிநின்ற பாங்கா
மடப்பிடி கண்டு வயக்கரிமா னுற்று
நடத்த நடவாது நிற்ப மடப்பிடி
யன்ன மனையாரோ [1]டாயா நடைக்கரிமேற்
[2] சென்மன மாலுறுப்பச் சென்றெழின் மாடத்துக்
கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று

௩௫ - ௪௦. ஏனை முகைப்பருவத்துமகளிர் (௧௯) பூவின்மேம்பாட்டை நாடிவந்துற்ற சுரும்புபோலத் தாம்விரும்பும் காதற்கணவர் தம்மைவந்து எதிர்ப்பட்டுப் புணர்தற்பொருட்டு நீராடல்குறித்துத் தமக்குக் காவலாகிய பாட்டியரைத் தப்பி அவர்தடுத்தலையுங்கடந்துபோய் நாவாயதுவரவை எதிர் கொள்வார்போல்விருப்பமுற்று யாம் விரும்புகின்றவையைப்புனலை எதிர் கொள்கின்ற கூடலின்கண்.

௩௮ - ௯. தாம்நினைத்த பட்டினத்தைச்சேர்ந்து ஏற்றிவிட்ட பண்டங்களைக் கொடுத்து ஆண்டுள்ளனகொண்டு இடையூறின்றிவந்து கரையைச் சேரும் நாவாயென்க.

சரணத்தராய்த் (௧௦) தாளிட்டுக்கொண்டு (௧௧) ஏறிச் (௧௮) சென்று நண்ணி (௨௯) அலர்வாயவிழ்ந்தன்னார் (௨௦) இப்பெற்றிய செய்ய (௨௭ - ௩௪) முகைப்பருவத்தார் (௧௯) எதிர்கொள்கின்ற கூடல் (௪௦) எனமுடிக்க.

௪௧. ஆங்க, அசை.

௪௧ - ௫௫. ஒருவயக்கரி தனக்குப்பாங்காய பிடியைக்கண்டு காமத்தால் மயக்கமுற்று மேலிருந்தமைந்தர் நடத்தநடவாது அழகியநிலைகளையுடையமாடத்தையணைந்த இடத்திலே நிற்ப அப்பிடிதானும் கரிமேற்சென்ற மனம் மயக்கமுறுப்ப மேலிருந்தமகளிரொடு நடத்தல்சுருங்கிச் சென்று அப்புலிமுகமாடத்துப் பண்ணிவைத்த *வேங்கையைக்கண்ட அளவிலே அதனை மெய்வேங்கையென்றும் கரியைப்பாயுமென்றுங் கருதி

* பிடி வேங்கைக்கு அஞ்சுதல், நற்றிணை ௪௭, ௮௫, ௧௪௪ - ஆம் செய்யுட்களாலும் விளங்கும்.

(பி - ம்.)— 1 அயர்நடை. 2 சென்மெனமாலுறுப்ப.

மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்
செய்தொழில் கொள்ளாது மதிசெத்துச் [1]சிதைதரக்
கூர்ங்கை மதமாக் கொடுந் *தோட்டி [2]கைந்நீவி
நீங்கும் பதத்தா லுருமுப் பெயர்த்தந்து
வாங்கி முயங்கி வயப்பிடி [3]கால்கோத்துச்
சிறந்தார் நடுக்கஞ் சிறந்தார் [4]களைய
விதையுங் கயிறும் பிணையு மிரியச்
† சிதையுங் கலத்தைப் [5]பயினாற் றிருத்துந்
திசையறி [6]நீ கானும் போன்ம்

வெருவி அம்மேகத்தையொத்தபிடி அம்மகளிர்நடுங்கப் பாகர்செய்யும் தொழிலைக்கொள்ளாதுசிதைய அச்சிதைவிற்கு ஆற்றாது பிளிறுகின்ற அக் கைம்மா தோட்டியைக்கடந்துசிதையுமளவில் அம்மைந்தர் ‡உருமுப்போலு முழக்கத்தையொழியுமாறு அதனைப் புலிமுகத்தினின்றும்வாங்கிப் பிடி சிதையாமல் அதனையணைவித்து அம்மகளிர் நடுக்கத்தை அவர் களைகின்ற செயல், பாயும் கயிறும் மரக்கூட்டமுமிரியச் சிதையப்புகாநின்ற மரக்கலத் தைப் பயினால் திருத்தி அதனகத்தார்நடுக்கம் களையும் நீகான்செயலோ டொக்கும்.

சக. அணிநிலைமாடம், ஆகுபெயர்.

௫௪ - ௫. கலங்களை ஓட்டும் திசையறிந்தநீகானென்க.

௫௫. உம்மை, இசைநிறை.

§ வையைநீர்விழவின்கண் மைந்தரும் மகளிருமேயன்றி விலங்கு களும் ஒத்தஅன்பினவாயின; அது நின்மாட்டில்லையாயிற்றென்பது கூறிய வாறு.

---

* "தோட்டிநீவி" (பதிற். ௫௩.)

† 'சிதையுங் கலத்தை...போன்ம்' என்னும் பகுதி "செய்யு ளிறுதிப் போலி மொழிவயி, னகார மகார மீரொற் றாகும்" (தொல். மொழி. சூ. ௧அ. ௩.) என்பதற்கும், "ளமெய் ...லுள்ளே" (நன். சூ. ௧௧௯-மயிலை; ஷை சூ. ௧௨0-விருத்தி) என்பதற்கும் மேற்கோள்.

‡ பரி. அ. அடி ௧எ - அ; "உருமுக்குரலோடை யானை" (சீவக. எ.)

§ "குறியா வின்ப மெளிதி னின்மலைப், பல்வேறு விலங்கு மெய்து நாட, குறித்த வின்ப நினக்கெவ னரிய" (அகநா. ௨) என்பதும், "வருக் கைப் பழம்விழுதே, னெய்யா தயின் றிள மந்திகள் சோரு மிருஞ் சிலம்பா, மெய்யா வரியதென்" (திருச்சிற். ௨௬௨) என்பதும் இதன்விசேடவுரையும் இங்கே அறியற்பாலன.

(பி - ம்.(— [1]சிதைததாங்கூர்ங்கைமடமா. [2]கைந்நிறுவி. [3]கோல் காத்து. [4]களைய, விதையு. [5]பயிராற்றிருத்தித், [6]மீகானும்.

பருக்கோட்டி யாழ்ப்பக்கம் பாடலோ டாட
லருப்ப மழிப்ப வழிந்த [1]மனக் கோட்டைய
(?) ரொன்றோ டிரண்டா முனறேறார் வென்றியிற்
பல்சன நாணிப் [2]பதைபதைப்பு மன்னவர்
தண்ட மிரண்டுந் தலைஇத் [3]தாக்கி நின்றவை
யொன்றியு முடம்பா டொலியெழுதற் கஞ்சி
நின்ற நிகழ்ச்சியும் போன்ம்
காமங் கனைந்தெழக் கண்ணின் [4]களியெழ
வூர்மன்னு மஞ்சி யொளிப்பா ரவர்நிலை
*கள்ளின் களியெழக் காத்தாங் கலரஞ்சி
யுள்ள முளையெழ வூக்கத்தா னுள்ளாட்
பரப்பி மதர்நடுக்கிப் [5]பாரலர் தூற்றக்
கரப்பார் களிமதரும் போன்ம்
[6]கள்ளொடு காமங் கலந்து கரைவாங்கும்
வெள்ளந் தருமிப் புனல்

௫௬ - ௬௨. பரிய கோட்டையுடைய யாழின்கூறு மிடற்றுப்பாடல் ஆடல் இவை திண்மையையழிப்ப அழிந்த துனியினையுடையமகளிரும் மைந்தரும் கூடுதற்குச்செல்கின்ற..................னும் ஒத்திருக்கவும் வென்றி காரணமாக ஒருவரினொருவர் முற்படுதலைநாணிக் கூடாது மெலிவுறுதல், மாறுபாட்டையுடைய மன்னவர்சேனையிரண்டும் தம்முட் கண்ணுற்றுப் பொருதுநொந்தவை சந்தியாதற்கு மனத்தான் இயைந்துவைத்தும் முன்னுக........உடம்பட்டதென்னும் வார்த்தைபிறக்குமென்று அதனையஞ்சிப் பின்னும் போரோடுநின்ற ஒழுக்கத்தையொக்கும்.

௬௩ - ௮. காமம் மிக்கெழ அதனானாகிய கண்ணின்களிப்புப் புலப்படாநிற்கவும் ஊரினுள்ளாரைமிகவுமஞ்சி அதனையொளிப்பாரதுநிலைமை, கள்ளின் களிமிக அதனினாகியமதரு................யெழுமாறு உள்ளேயுள்ளேநடுக்கிப் பாரிலுள்ளார்க்குப்பரப்பி அலர்தூற்றவும் அவ்வலரையஞ்சி ஊக்கத்தாற் பாதுகாத்து அக்களிமதரை மறைப்பாருடைய நிலைமையைப் போலும்.

௬௯ - ௭௦. கள்ளையும் காமத்தையும் பொருந்துதலாற் கரையறும் இன்ப வெள்ளத்தைத்தாராநின்றது, சொல்லுகின்ற இப்புனல்.

* கலி. ௧௧௫; திருக்குறள், ௯௨௮.

(பி - ம்.)— [1]மனக்கோட்டை, யொன்றோடி. [2]பதைபதைப்ப மன்னவர். [3]தாக்கிநின்றன, தாக்குநின்றனை. [4]கனியெழ. [5]பார்த்தலாதூற்ற. [6]கள்ளடைகாமங்.

புனல்பொருது மெலிந்தார் திமில்விடக்
கனல்பொருத வகிலின்புகை [1]காவெழ
நகின்முகடு மெழுகிய வளறுமடை திறந்து
திசைமுழுது கமழ [2]முகிலகடு கழிமதியி
னுறைகழி வள்ளத் துறுநறவு வாக்குந
ரரவுசெறி யுவவுமதியென வங்கையிற் றாங்கி
*யெறிமகர வலய மணிதிகழ் நுதலியர்
[3] மதியுணர மகளென வாம்பல்வாய் மடுப்ப
மீப்பால் வெண்டுகில் போர்க்குநர் பூப்பால்
† வெண்டுகில் சூழ்ப்பக் குழன்முறுக்குநர்
செங்குங்குமச் செழுஞ் [4]சேறு
பங்கஞ் செய்யகில் பலபளித
மறுகு படவறை புரையறு குழவியி

எக. இப்புனலொடு பொருது இளைத்தமகளிரெல்லாம் புணைகளை விட்ட அளவில்.

எஉ - ச. கனல்சுட்ட அகிலின்புகை காவின்கணெழ அதனான் ஈரம் புலர்த்தித் தம் முலைமுகட்டின்கண் மெழுகிய கலவைக்குழம்பு மடைதிறந்தாலொக்கப்பரந்து திசையெங்குங்கமழ.

எரு. உறுநறவு - வெம்மை மிக்கநறவு.

எஎ. தலைக்கோலம் அழகுவிளங்கும் நுதலியர்சிலர்.

எஅ. மதியது கலையையுண்கின்ற தெய்வமகள்போல், மடுப்ப - மடாநிற்க.

எகூ. போர்க்குநர் - போர்ப்பார்.

எகூ - அ௦. பூத்தொழிலைத் தன்பாலுடைய வெண்டுகிலைச் சிலர் குழல்மேற்சுற்ற அதனைமுறுக்குவார்.

அக. குங்குமச்சேறு.

அஉ - ச. சேறாகச்செய்த அகிற்சாந்து பலவாகியகருப்பூரம் இவைதம் முள்மறுகச் சாந்தம்மிக்கண் புரையற்றகுழவியால் அவியைப்பொருந்தின குண்டத்தின்கண் அழலென நிறம்பெற அரைப்பார்.

* "மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்து" (முருகு. உரு.)

† 'வெண்டுகில்' என்றும், "கோபத் தன்ன தோயாப் பூந்துகில்" என்றும் கூறலின், துகில் வெண்மைசெம்மை இரண்டிற்கும் பொது; (சீவக. ௩௪. ௩.)

(பி -ம்.)— [1]கர்வெழந்நினைமுகடுமெழுகியளறுமடையடைதிறந்து. [2] முகிலகடுகெழியமதியின. [3]மதியுணமராமகள், மதியுணராமகள். [4]சேறும்பங்கஞ்செயல்கில்பலபளிததம்.

னவியம ரழலென வரைக்குநர்
நத்தொடு நள்ளி நடை [1]யிறவு வயவாளை
வித்தி யலையில் விளைக பொலிகென்பா
ரில்லது நோக்கி *யிளிவரவு கூறுமு
னல்லது வெஃகி வினைசெய்வார்
மண்ணார் மணியின் வணர்குரல் வண்டார்ப்பத்
தண்ணந் துவர்பல வூட்டிச் சலங்குடைவா
ரெண்ணெய் கழல [2]விழைதுகள் பிசைவார்
மாலையுஞ் சாந்து மதமு [3]மிழைகளுங்
கோலங் கொளநீர்க்குக் கூட்டுவா ரப்புன
லுண்ணா நறவினை யூட்டுவா ரொண்டொடியார்

அம்மிக்குழலிற்கு உவமையாவது அவியமர்குண்டத்தின்மீது தோன்றுகின்ற அழலாகலின், 'அவியமரழல்' என்றார்.

அ௫ - அ௬. †பொன்னாற்செய்த நந்து நண்டு இறவு வாளை இவற்றை நீரின்கண் வித்தி.

அ௭ - அ. இரப்போரது இன்மையைநோக்கி ‡அவர் ஈயென்பதைச் சொல்லுதற்குமுன்பே அறத்தைவிரும்பி அவர்நயக்கும் தானங்களைப் பண்ணுவார்.

அ௯ - ௯௧. மண்ணுதலுற்றநீலமணிபோல நெறித்த மயிர்க்கற்றைக்கண் வண்டார்ப்பப் §பத்துத்துவரையுமூட்டி நீராடுவார், இழைபொடியை இட்டுப் பிசைவார்.

௯௨. மதம் - கத்தூரி.

௯௩. நீர்க்கு ஒப்பனையாதல்கூடாமையிற் கூட்டுவாரென்றார்.

௯௩ - ௪. இங்ஙனம் கூட்டுவார் ஊட்டுவாராயது, தமக்கு அப்புனல் செய்த உதவிக்குக் கைம்மாறுகருதி.

* இரவரவென்றது இங்கே ஈயென்றிரத்தலை; "ஈயென விரத்த லிழிந்தன்று" (புறநா. ௨௦௪); "நாவிற் கிரவி னிளிவந்த தில்" (திருக்குறள், ௧௦௬௬).

† நீரிற் பொன்மீன் முதலியவற்றை விடுத்துவழிபடுதல், இப்புத்தகத்தின் ௪௦ - ஆம் பக்கத்துக் கீழ்க்குறிப்பாலறியலாகும்.

‡ "இலனென்னுமெவ்வ முரையாமை" என்னும் திருக்குறளும் அதனுரையும் இதனுடன் ஒப்புநோக்கற்பாலன.

§ "பத்துத்துவரினுமைந்து விரையினும்...ஆட்டி" (சிலப். ௬ ௭௬-௭.)

(பி - ம்.)— [1]இறவுவயலுளவாளை, இறவுயவலுளவாளை. [2]இழையதுகள்பிசைவார். [3]இழைகளுங் கோலங்கொணீர்க்கு.

[1] வண்ணந் தெளிர முகமும் வளர்முலைக்
கண்ணுங் கழியச் சிவந்தன வன்னவகை
யாட்டயர்ந் தரிபடு *[2]மைவிரை மாண்பகழி
யரந்தின்வாய் போன்ம்போன்ம் போன்ம்
பின்னு மலர்க்கண் புனல்
[3] தண்டித் தண்டிற் றுய்ச்செல் வாருங்
கண்டற்றண் டாது திரைநுரை தூவாரும்
வெய்ய திமிலின் [4]விரைபுனலோ டொய்வாரு
மெய்யதுழவி னெதிர்புனன் மாறுடிப்
[5] பைய விளையாடு வாருமென் பாவையர்
[6] செய்தபூஞ் சிற்றடிசி லிட்டுண்ண வேற்பா
ரிடுவார் மறுப்பார் சிறுகிடையார்

---

கூச – கூ. இத்தன்மையாராகிய ஒண்டொடியார்க்குப் புனலாட்டான் நிறம் ஒளிபெற்று நீரான் ஏறுண்டமுகமும் முலைக்கண்களும் மிகச்சிவந்தன; காதலரோடு அன்னவாகியவிளையாட்டை அயர்ந்திருக்கவும் பின்னும் புனலின்மேற்செல்கின்ற அவர்கண்கள் வண்டுமொய்க்கின்ற ஐந்தாகிய விரை மாண்ட காமபாணத்தினது அரத்தாற் கூர்மையிடப்பட்ட வாய்போலும்.

இது தொழில்பற்றிவந்த இல்பொருளுவமை.

கூஅ, அடுக்கு, துணிவுபற்றிவந்தது.

இனிப் புனல்பொருதுமெலியாத மைந்தரைக்கூறுகின்றார் :

கoo - கoஉ. விரும்பி வாழைத்தண்டாலே நீர்மேற்றுவிச்செல்வாரும் கண்டற்றாதைத் திரையினும் நுரையினும் தூவுவாரும் விசையையுடைய ஓடத்தின்கண்ஏறி அதனை விரைபுனலோடு ஒழுக்குவாரும்.

கoங. புனலுக்கு எதிர் மாறுகஆடி உண்டான மெய்யது உழப்பால்.

கoச – ரு. மென்பாவையரிழைத்த பொலிந்தசிற்றிலில் தாம்அட்ட சிறுசோற்றையிட உண்டற்கு ஏற்பாரும்.

கoசு. முன் இடுவாராய்ப் பின் மறுப்பாராகிய மகளிருடைய.

---

* "செம்மேனி, பொன்போன்ம்பல் வெண்முத்தம் போன்ம்" என்பதற்கு 'ஐவிரைமாண்பகழி......கண்புனல்' என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர், மாறனலங்காரவுரையாசிரியர்; சூ. கூஅ.

(பி - ம்.)— [1]வண்ணமுந்தெளிர. [2]ஐயவிரை. [3]தண்டித்தண்டிற். [4] விரைபுனலோடாயவாருமமெயயாதுழவி. [5]பைவிளையாயவோரும. [6]செய் யபூஞ், செயபூஞ்.

*பந்துங் [1]கழங்கும் பலகளவு கொண்டோடி
யந்தண் கரைநின்று [2]பாய்வாராய் மைந்த
ரொளிறிலங் கெஃகொடு வாண்மா றுழக்கிக்
களிறுபோ ருற்ற களம்போல நாளுந்
தெளிவின்று தீநீர்ப் புனல்
† மதிமாலை மாலிருள் கால்சீப்பக் கூடல்
வதிமாலை மாறுந் தொழிலாற் புதுமாலை
நாளணி நீக்கி நகைமாலைப் பூவேய்ந்து
[3] தோளணி தோடு சுடரிழை [4]நித்திலம்
பாடுவார் பாடல் பரவல் பழிச்சுத
லாடுவா ராட [5]லமர்ந்தசீர்ப் பாணி

---

க0அ. அவரறிந்து வாங்கச்சென்றுழி எட்டாமல் நீருட்பாய்வாருமாய்.

க0ரு, க0அ. இரண்டிடத்தும் உம்மை வருவிக்கப்பட்டது.

க0அ - கக. மைந்தர் எஃகானும் வாளானும் மாறுபட்டு உழக்கக் களிறுகள் தம்மிற் பொருதலுற்ற களம்போறலான் இனியநீர்மையையுடைய புனல் தெளிவின்றாயிற்று.

இனி எல்லாரும் புனலாடிமீண்டவாறு கூறுகின்றார் :

ககஉ - உரு. மாலைக்கண் மாலிருளை மதி கால்சீத்த அளவிலே கூடற்கண் வதியும் இயல்பைநோக்கி மீளுந்தொழிலுடனே புதிய இயல்பையுடைய நாளணிகளைநீக்கி மாலைக்கண் நகுதலையுடைய பூக்களைவேய்ந்து தோளணி தோடு மற்றுள்ள சுடரிழை முத்துவடம் இவற்றையணிந்து பாடுதற்குரியாரதுபாடலும் பல்லாண்டுமுதலாய பரவுதலும் புகழ்தலும், ஆடுதற்குரியாரது ஆடலும் அதற்குப்பொருந்தின சீருடன்கூடிய பாணியென்னுந்தாளமும் மேல்ஆர்க்கின்ற தேனீக்களது செறிந்தவழக்கமுமாகிய அவற்றினாகிய ஓசையெல்லாவற்றொடும் பாடுகின்ற பண்ணொலியைக்கேட்டுத் தம் இனமென்று அதன்வழியே ஊரினின்றும்வருகின்ற வண்டுகள் அப்பாடுவார் வருந்த எதிரேவந்தூத நகைமாலைப்பூவேய்ந்த மயிர்க்கற்றைக்கண் தேன்

---

* விளையாட்டுப் பருவத்தில் சிறுமிகளுடைய பந்து முதலியவற்றை இளைஞர் கவர்ந்தோடுதல் இயல்பு ; "வரிப்பந்துகொண்டோடி" (கலி. ருக). "வரிப்பந்து கொண்டொளித்தாய்" (பு - வெ. பாடாண். ரு0); "முற்றிலைப் பந்தைக் கழங்கைக் கொண் டோடினை" (திருவேங்கடத்தந்தாதி, கள.)

† "தூங்கிருண்மாண் மாலை" (பு - வெ. பெருந்திணை. கரு.)

(பி - ம்.)— [1]கழுங்கும்புலனகளவு. [2]பாய்வாரமைந்த. [3]தோளணிகொடு. [4]நித்தலம். [5]அமாசாபபாணி.

நல்ல கமழ்தே னளிவழக்க மெல்லாமும்
பண்டொடர் வண்டு [1]பரியவெதிர் வந்தூதக்
கொண்டிய வண்டு கதுப்பின் குரலூதத்
தென்றிசை நோக்கித் திரிதர்வாய் மண்டுகால் சார்வா
னளிர்மலைப் பூங்கொடித் தங்கு புகக்கும்
[2] பனிவள ராவியும் போன்ம் மணிமாடத்
துண்ணின்று தூய பனிநீ ருடன்கலந்து
[3] காறிரிய வார்க்கும் புகை
*இலம்படு புலவ ரேற்றகை ஞெமரப்

கொள்ளையைக்கொள்வனவாகியவண்டுகள் உடன்வந்தூத எல்லாரும் தென்றிசையைநோக்கி மீள்கின்ற எல்லைக்கண் ஊரின்மாட......லுந்தித்தூவியபனி நீர் மணத்தொடுகூடிக் காற்றுத்திரிய அதனெடுமாடத்துள் நின்று புறப்பட்டுப்பரக்கும் அகிற்புகை மலையிற்பூங்கொடிக்கட்டங்கிப் பின் மேல் மண்டியேறும் வளர்பனியாவிபோலும்.

ககரு. 'அணிந்து' என்பது வருவிக்கப்பட்டது.

நீக்கி வேய்ந்து (ககச) அணிந்து (ககரு) திரிதர்வாய் (கஉக) என்க.

ககஅ. நல்லகமழ்தேனென்பது, செய்யப்படுவதாகிய தன்பொருட்கு ஏற்ற அடையடுத்துச் செய்வதன்மேல் நின்ற ஆகுபெயர்.

புனலாட்டின்ப நுகர்ச்சி.........................................................

இனி அவ்வின்பங்கட்கு ஏதுவாகிய வையையைவாழ்த்தி [4]முடிக்கின்றார்:

கஉரு. உம்மை, இசைநிறை.

கஉகூ - ௩க. † இன்மையாற்பற்றப்பட்ட புல்வரது ஏற்றகைநிறையப் பொன்னைச்சொரியும் வழுதியைப்போலவே வையை செய்யின்கட் பொன்னைப்பரப்பும் இயல்புவினை மாறுதொழிக; துன்பமறியாது தானேவருபுனற்கு விருந்துசெய்யுங்கூடற்கண் குற்றமின்றி இசைக்கின்ற இசைக்குரிமையுடையவராகிய பாணரும்கூத்தரும் மேவிய கூட்டத்தோடு ஒருங்கு ஏத்தித் தொழ. எ - று. (கo)

* "இலம்படு புலவ ரேற்றகைந் நிறையக், கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கை" (மலைபடு. ருஎகூ-எ.)

† "படுதல் - உண்டாதல்; இனி, இவ்வுரையாசிரியர் பரிபாட்டினுள், 'இலம்படு...வழுதி' என்பதற்குத் தொல்காப்பியத்துள், 'இலமென்கிள

(பி - ம்.)— [1]பெரியவெதிரினவந்தூத. [2]பனிவளாவாவியும். [3]காறிரி வார்க்கும். [4]முடிக்கின்றன்.

பொலஞ்சொரி வழுதியிற் புனலிறை பரப்பிச்
செய்யிற் பொலம்பரப்புஞ் செய்வினை யோயற்க
வருந்தாது வரும்புனல் விருந்தயர் கூட
லருங்கறை யறையிசை வயிரிய ருரிமை
யொருங்கம ராயமொ டேத்தினர் தொழவே.

என்பது, பருவங்கண்டு வன்புறை எதிரழிந்த தலைமகளது ஆற்றாமைகண்டு தோழி தூதுவிடச் சென்றபாணன் பாசறைக்கண் தலைமகற்குப் பருவவரவும் வையைநீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியும் கூறியது.

கரும்பிள்ளைப்பூதனார் பாட்டு.
மருத்துவனல்லச்சுதனாரிசை.
பண்ணுப் பாலையாழ்.

---

விக்கு' என்னும் சூத்திரத்திற்கு இளம்பூரணருரைத்தாங்குரைத்தார்; அத் தன்மை எம்மனோர்க்கு அறிதலரிதென்க; நச்சினார்க்கினியர் அதனை வேறுரைத்தாரென்க'' என்பது, திருக்குறள்நுண்பொருண்மாலை, உ௩க; (செந்தமிழ் எ - ஆம் தொகுதி ௬௧௧ - ஆம் பக்கம் பார்க்க.)

# பதினோராம் பாடல்.

## வையை.

விரிகதிர் [1]மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையு
ளுருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
[2] வருடையைப் படிமகன் வாய்ப்பப் [3]பொருடெரி
புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடிய

(பதினோராம் பாடலுரை.)

க - ௩. விசும்பு மதியத்தோடுபுணர்ப்பனவாகிய எரியும் சடையும் வேழமுமுதலாக அவற்றின் கீழிருந்து வீதியால் வேறுபடுக்கப்பட்ட ஓரொன்று ஒன்பதுநாளாகிய மூவகையிராசிகளுள்.

மேலவாய நாண்மீன்களைக் கீழதாகியமதி புணர்தலாவது அவ்வநேர் நிற்றன்மாத்திரமாகலின், அவற்றை 'விசும்புபுணர்ப்ப' என்றார்.

உ. எரி - அங்கியைத் தெய்வமாகவுடைய கார்த்திகை; அதனால் அதன் முக்காலையுடைய இடபமுணர்த்தப்பட்டது. சடை - சடையை யுடைய ஈசனைத்தெய்வமாகவுடைய திருவாதிரை; அதனால் அதனையுடைய மிதுனமுணர்த்தப்பட்டது. வேழம் - வேழத்திற்கு யோனியாகிய பரணி; அதனால் அதனையுடைய மேடமுணர்த்தப்பட்டது.

இவைமுதலாக இவற்றின்கீழிருத்தலாவது, இவற்றதுபெயரான் *இடபவீதி, மிதுனவீதி, மேடவீதியென வகுக்கப்பட்டு அம்மூவகைவீதியுள்ளும் அடங்குதல். அவற்றுள், இடபவீதி, கன்னி துலாம் மீனம் மேடமென்பன; மிதுனவீதி, தேள் வில்லு மகரம் கும்பமென்பன. மேடவீதி, இடபம் மிதுனம் கற்கடகம் சிங்கமென்பன. ஓரிராசியாவது இரண்டேகால் நாளாகலின், நந்நான்கிராசியாகிய இவை ஓரொன்று ஒன்பதுநாளாயின. கோட்களுக்கு இடனாகலான் இவை பன்னிரண்டும் 'இருக்கை' எனப்பட்டன.

ச - க௦. நிறத்தையுடையவெள்ளி இடபத்தைச்சேரச் செவ்வாய் மேடத்தைச்சேரப் புதன் மிதுனத்தைச்சேரக் கார்த்திகை உச்சமாகவிடிந்த

* "மேட வீதி யிடப வீதி, மிதுன வீதி யெனவொரு மூன்றே, அவை தாம், இருசுடர் முதலிய வியங்கு நெறியே", "இடபஞ் சிங்க மிதுனங் கடக, மீனைய நான்கு மேட வீதி", "மீன மேடங் கன்னி துலாமும், மான விடப வீதிக் கமைந்தன", "வில்லு மகரங் குடமே விருச்சிகம், சொல்லிய மிதுன வீதித் துறையே" என்பன, பிங்கலந்தை.

(பி - ம்.)— [1]மதியொடு. [2] வருடைபடிமகன். [3]பொருடரு.

லங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவி
னில்லத் துணைக்குப்பா லெய்த விறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனி
லெதிர்வரவு மாரி யியைகெனவிவ் வாற்றாற்
புரைகெழு *சையம் பொழிமழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல்
வரையன புன்னாகமுங்
கரையன சுரபுன்னையும்
1 வண்டறைஇய சண்பகநிரை தண்பத
மனைமாமரம் வாள்வீரஞ்

லுண்டாக வியாழம் சனியின் இல்லமிரண்டாகிய மகரகும்பங்கட்கு உப்பாலைமீனத்தைச்சேர யமனைத்தமையனாகவுடைய சனி வில்லுக்குப்பின்னாகிய மகரத்தைச்சேர இராகு மதியமறையும்படி வருநாளின்கண்.

௬ - ௭. ஆதித்தன் சீயத்தையடைய வென்பார், 'புலர்விடியலங்கி யுயர்நிற்ப' என்றார்.

௯ - ௰. பாம்பு மதியமறைய ஒல்லைவருநாளென்றது, அவ்வாவணி மாதத்து மதிநிறைநாளாகிய அவிட்டத்தை. எனவே, மதியும் இராகுவும் மகரத்துநிற்கவென்பதூஉம் கேது அதற்குஏழாமிடமாகிய கற்கடகத்துநிற்க வென்பதூஉம் பெறப்பட்டன.

இதனாற்சொல்லியது, ஆவணித்திங்கள் அவிட்டநாளின் இக்கோட்கள் தமக்குரியநிலமாகிய இவ்விராசிகளில் நிற்பச் சோமனை அரவுதீண்டவென்பதாயிற்று.

௧௧ - ௨. அகத்தியனென்னுமீன் உயர்ந்ததன்னிடத்தைக்கடந்து மிதுனத்தைப்பொருந்த.

பொதியிலைவிட்டெனவும் தோன்றநின்றது.

௧௨ - ௪. முறுகினவெயிலையுடைய முதுவேனிற்குப் பின்வரும் கார்காலத்து மழைபெய்கவென்ற இவ்விதிவழியால் உயர்ந்த சையமலைக்கண் மழைபெய்ய.

௧௭. பூமணத்தால் வண்டு ஒலித்தற்குக்காரணமாகிய சண்பகநிரை.

௧௮. மனைமரம் - இல்லம்; ஆவது தேறு.

வாள்வீரமென்னுமரம் கூவிளை.

* சையம், மேன்மலையென்றுங் கூறப்படும். (பரி. ௧௨ : ௨.)

(பி - ம்.)— 1 வண்டறைஇ.

சினைவளர் வேங்கை கணவிரி காந்த
டாய தோன்றி தீயென [1]மலரா
வூதை யவிழ்த்த வுடையித ழொண்ணீலம்
வேய்பயில் சோலை யருவி தூர்த்தரப்
பாய்திரை யுந்தித் தருதலா னுய்கோல்
வ்வயவ ரரிமலர்த் துறையென்கோ
வரிமலர் மீப்போர்வை யாரந்தாழ் மார்பிற்
றிரைநுரை மென்பொகுட்டுத் தேமணச் சாந்தி
னரிவை யதுதானை யென்கோகள் ளுண்ணூஉப்
பருகு படிமிட றென்கோ பெரிய
திருமருத நீர்ப்பூந் துறை
ஆநா ணிறைமதி யலர்தரு பக்கம்போ
னாளி னாளி [2]னளிவரைச் சிலம்புதொட்டு
நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி,

உ0. கணவிரி - செவ்வலரி.

உக. தீயெனமலர்ந்து தழைத்த தோன்றி.

உஉ. சிறுகாற்றால் விடுக்கப்பட்டஅலர்ந்தஇதழையுடைய சுனைநீலம்.

உ௩ - ௩0. இவற்றின்மலர்களைச் சாரலிற் சோலைக்கண்ணே அருவி கொண்டுவந்துசொரிய அவற்றைத் திரை தள்ளிக்கொண்டுவந்து **திருமருதத் துறைக்கண்**ணே தருதலான், அத்துறையை, பூவாராய்ந்துபறிக்கும் கோலினையுடைய வலியகுடிகள் நிறத்தவாகிய பூக்களைக்கொண்டுவந்துகுவிக்கும் பூமண்டபமென்கோ? வையையாகியஅரிவையது அல்குற்றானையென்கோ? கள்ளை வாய்க்கொண்டு பருகும்நிலமகள் மிடறென்கோ? இவற்றுள் யாதென்றுசொல்லுவேன்.

உசு - அ. அரிமலராகிய படாத்தையும் மலையிலுள்ள முத்துக்கள் தாழ்ந்தமார்பினையும் திரையையும் நுரையையும் குமிழியையும் இனிய மணத்தையுடைய சந்தனத்தினையுமுடைய அரிவையென்க.

வரைவுமலிந்ததோழி வையைச்சிறப்புக்கூறுவாள் இத்துணையும் தான் கருதியவாற்றாற்கூறி மேற் கண்டார்கூறுகின்றவாற்றாற் கூறுகின்றாள்:—

௩க - ௪0. பிறை தோன்றியநாள்தொடங்கி நாடோறும் ஒருகலை வளர்கின்ற முற்பக்கம்போல் நாளுக்குநாட்பெருகி, அதனிலவு எங்கும் பரந்தாற்போல மலைச்சாரல்தொடங்கியுள்ளநிலத்தின்கண் நீரைப்பரப்பி உலகிற்குப் பயன்பட்டு அதன்பிற்பக்கத்து அமரர்க்கு உணவாகிய அம்மதியம் நிறைவு

(பி - ம்.)— [1]மலரவூதையவிழ்த்த. [2]நளிவரை.

யுலகுபயம் பகர வோம்பு பெரும் பக்கம்
வழியது பக்கத் *தமர ருண்டி
மதிநிறை வழிவதின் வரவு சுருங்க
வெண்மதி நிறையுவா †விருண்மதி போல
நாள்குறை படுதல் காணுநர் [1]யாரே
சேணிகந்து கல்லூர்ந்த மாணிழை வையை
வயத்தணிந் தேகுநின் யாணரிரு நாள்பெற
மாமயி லன்னார் மறையிற் புணர்மைந்தர்
காமங் களவிட்டுக் கைகொள்கற் புற்றென
[2] மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்த
லில்லத்து நீதனிச் சேற லிளிவரல்
எனவாங்கு

சுருங்குமாறுபோல......குமிடத்தும் எட்டாம்பக்கத்துமதியளவாதலன்றி இருளுவாவினைப்போல நீர் நேராகக் குறைபடுதலையுடையநாளைக் காண்கின்றாரில்லை; அதனால், நெடுந்தூரத்தைக் கடந்துவந்தவையாய், நீ பெருகினநாளின்யாணரேயன்றி வற்றினநாளின் யாணரையும் உலகம்பெற இந்நீர் மிகுதியைத் தணிந்து ஏகு.

௩௪. பகர்ந்தென்பது பகரவெனத் திரிந்துநின்றது.

௪௦. இருநாளுமென்னுமும்மை செய்யுள்விகாரத்தாற்றொக்கது.

௪௧ - ௪. மறையிற்புணர்ந்த மைந்தர் மாமயிலன்னார் ‡ காமம் சிறப்புடைய அக்களவொழுக்கத்தைவிட்டு இளிவந்தகற்பொழுக்கத்தையுற்றாற்போல, வையாய், நின் § பிறந்தையாகிய மலையைவிட்டு இருத்தற்குரிய நின்கடற்றலைவனில்லத்து நீ தனியேசேறல் இளிவரவு; ஆதலால் ஆண்டுச் சேறற்பாலையல்லை.

௪௫. என - என்றுகண்டார்சொல்ல.

ஆங்கு, அசை.

---

* பிற்பக்கத்துமதி அமரர்க்கு உணவாதல்: பரி. ௩: ௫௨ - ௩ ஷை ௰: ௭௮.

† "குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்கம்" (மதுரை. ௧௯௫ - ௬.)

‡ இந்நூல், ௯ - ஆம் பாடலின் ௧௪ - ஆம்அடிமுதலியவற்றையும் அவற்றினுரையையும் பார்க்க.

§ பிறந்தை - பிறந்தவீடு.

(பி - ம்.)—[1]யார். [2]மல்லாம்புனல்.

கடையழிய நீண்டகன்ற [1]கண்ணுளைக் காளை
படையொடுங் கொண்டு [2]பெயர்வானைச் சுற்ற
மிடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப வடன்மதுரை
யாடற்கு நீரமைந்த தியாறு
ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர் மிளிர்குந்த மேந்துவோர்
கொள்வார்கோல் கொள்ளக் கொடித்திண்டேரேறுவோர்
*புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை
வெள்ளநீர் நீத்தத்து ளூர்பூர் புழக்குநருங்
கண்ணாருஞ் சாயற் கழித்துரப் போரை
[3]வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரு
மணம்வரு மாலையின் வட்டிப் போரைத்
துணிபிணர் மருப்பி னீரெக்கு வோருந்
தெரிகோதை நல்லார்தங் கேளிர்த் திளைக்கு
முருகெழு தோற்ற முரைக்குங்கா ளுளும்
பொருகளம் போலுந் தகைத்தே பரிகவரும்
பாய்தேரான் வையை யகம்

சக - க. எல்லையறநீண்டு அகன்றகண்ணுளை உடன்கொண்டு படையொடும்பெயர்ந்ததலைவனை அவள்சுற்றம் இடைச்சுரத்துச் சென்றுபொருதாற்போல வெற்றியையுடைய மதுரையார் இடையேபுகுந்து நீராடுதற்கு ஏற்றது யாறு.

ருo. வாளும் குந்தமும் †கிடைமுதலியவற்றான் அமைக்கப்பட்டன.

ருக. கொள்வாரெனப் பொதுப்படக்கூறியவதனான் மகளிர்தேர்க்கு மகளிரும் மைந்தர்தேர்க்குப் பாகரும் கோல்கொள்ளவென்பது பெற்றாம்.

ருஉ - ங. வெள்ளநீராழத்துள் இவற்றை ஊர்ந்தூர்ந்து.

ருச - க. கண்ணுக்கு ஆரும் அழகையுடைய மூங்கிற்கழியால் நீரைத் தூரப்போரை அரக்குநீரையடக்கிய வட்டால் எறிவோரும் மாலையினாற் சுழற்றியெறிவோரை அற்ற பிணரையுடைய கொம்பினீரால் எக்குவோருமாய்த் தம், கேளிரொடு நாளும் திளைக்கும்.

இது காரின்கணுடல்.

மேல் இளவேனிற்காலம்.

* "புள்ளியன்மாவும்" (பரி. கo. கச.)

† கிடை - நெட்டி.

(பி - ம்.)— [1]கண்ணளை. [2]பெயவாளை. [3]வணநீர்.

நீரணி வெறிசெறி மலருறு கமழ்தண்
டார்வரை யகலத்தவ் வேரணி நேரிழை
யொளிதிகழ்தகை வகைசெறி [1]பொறி
புனைவினைப்பொலங் கோதையவரொடு
பாக ரிறைவழை மதுநுகர்பு களிபரந்து
நாகரினல் வளவினை வயவேற [2]நளிபுணர்மார்
காரிகைமது வொருவரினொருவர் கண்ணிற் கவர்புறச்
சீரமை பாடற் பயத்தாற் கிளர்செவிதெவி
யும்ப ருறையு மொளிகிளர்வா னூர்பாடு
(?) மம்பி காவர் வழக்கிற்றே யாங்கதை
காரொவ்வா வேனில் கலங்கித் தெளிவர
னீரொவ்வா வையை நினக்கு

சுஉ - எக. நீராடற்கமைந்த அணியினையுடைய அகலத்து அவ்வழகிய ஒப்பனையையும் அதற்கேற்ற இழைகளையுமுடைய அரிமாலையவரோடு நல்வளந்தருகின்ற புண்ணியத்தைச்செய்த நாகரைப்போல இடைவிடாது இறுகப்புணர்தற்குப் பாகுதங்கிய இளமதுவைநுகர்ந்து களிமிக்குத் தாளமமைந்தபாடலின்பத்தால் தங்கள் செவியைநிறைத்துத் தம் அழகாகிய மதுவை ஒருவரினொருவர் கண்ணாலுண்ண, உம்பருறையும் ஒளிகிளர்வானத்தின்கண் வைமானிகர் ஊர்ந்துதிரியும் விமானங்களைக் காட்டும் [3]நீரோட்டத்தையுடைத்து, அவ்வையையகம்.

ஐம்புலன்களாலும் இன்பநுகர்தற்கு இடனாயிற்றென்றவாறு.

சுச - ரு. ஒளிதிகழாநின்ற கட்டுதல்வகைமைசெறிந்த மூட்டுவாய் புனைந்த தொழிலையுடைய அரிமாலையென்க.

வினைத்தொகையடுக்கு.

பரந்து (சுசு) தெவி (சுகூ) என்னும்செய்தெனெச்சங்கள் கவர்புற (சுஅ) என்னும் வினைமுதல்வினைகொள்ள, அச்செயவெனெச்சம் வழக்கிற்று (எக) என்னும் பிறவினைகொண்டது.

எக. ஆங்கதையென்பன அசை.

இத்துணையும் வையையைப் படர்க்கையாக்கிக்கூறி, மேல் எதிர்முகமாக்கி,

எஉ - ரு. வையாய்! இவ்வாறு கார்காலத்துக்கலங்கி வேனிற்காலத்துத்தெளிதலான் இந்நீர்மை எஞ்ஞான்றும் ஒத்திருக்கின்றதில்லை.

எனப் பழிப்பாள்போலப் புகழ்ந்து, மேல் தைந்நீராடல்கூறுகின்றுள்:—

(பி - ம்.)— [1]பொறிபுனை. [2]நளிபுணர்மார். [3]நீரோட்டத்தை.

கனைக்கு மதிர்குரல் கார்வான நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கண் [1]மறுநிறை யாதிரை
விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
வம்பா [2]வாடலி னாய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியி
னூதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளி ரீரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று

எச - எ. கார்வானம் அதிர்குரனீங்கப் பனிமிகுதலாற் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப்பருவத்து ஞாயிறுதெறுத கடைமாரியையுடைய மார்கழிமாதத்துத் திங்கள் மறுவொடுநிறைந்த திருவாதிரை நாளின்கண்.

திருவாதிரை நிறைமதிநாளாங்கால் ஆதித்தன் [3](?) பூத்தடத்தின்கண் நிற்குமாதலின் அதனையுடைய மார்கழிமாதம் குளமெனப்பட்டது.

எஅ. ஆகமங்களையுணர்ந்த பூசகர் அத்திருவாதிரைக்குத்தெய்வமாகிய இறைவனுக்கு விழாவைத்தொடங்க..............................

அ0. வெம்பாதாக - மழையாற் குளிர்வதாக.

அக - எ. அம்பாவாடலையுடையகன்னியர் சடங்கறிந்த முதுபார்ப்பனிமார் நோற்குமுறைமைகாட்டப் பனியையுடைய புலர்தற்கண் ஆடிப் பருமணலையுடைய ஒழுகுகின்றநீரின்கண்ணே குளிர்வாடைவீசுதலான் நின் கரைக்கணுறையும் அந்தணரது வேதநெறியால் வளர்ந்த நுடங்கழலைப் பேணிய சிறப்புடனே அவ்வொப்பனையையுடைய மகளிர்சென்று அதன்கண் தம் ஈரவணியைப்புலர்த்தாநிற்க, அவ்வந்தணர் அவ்வழற்கட்கொடுக்கு மடை, வையாய், நினக்கு வாய்ப்புடைத்தாயிருந்தது.

அக. *அம்பாவாடலென்று தைநீராடற்குப் பெயராயிற்று, தாயோடாடப்படுதலின்.

* அம்பா - தாய்; வடமொழி.

(பி - ம்.)— [1]மறைநிறை. [2]ஆடியவாய்தொடி. [3]பூராடத்தின்கண்.

மையாட லாடன் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுத
னீயுரைத்தி வையை நதி
ஆயிடை, மாயிதழ் [1]கொண்டோர் மடமாதர் நோக்கினாள்
வேயெழில் வென்று வெறுத்ததோ ளேக்கிச்
* [2]சாய்குழை பிண்டித் தளிர்காதிற் றையினாள்
பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்
குவளை குழைக்காதின் கோலச் செவியி
னிவள்செரீஇ நான்கு விழிபடைத்தா ளென்று
நெற்றி விழியா நிறைதிலக மிட்டாளே

அரு. புலர்தற்கணென்னும் ஏழனுருபு தொக்குநின்றது.

இம்மையின்பங்குறித்துக் கன்னியர் தைந்நீராடலும் மறுமையின் பங்குறித்து.........கிய இவை நினைக்கன்றி ஏனையா...........வென்றது.

அஅ - கூஉ. மையோலை பிடித்த இளையபுலவரது விளையாட்டிற்குமாறு யெழுந்து காமக்குறிப்பில்லாத விளையாட்டைச் செய்கின்ற ஆயத்தினை யுடைய அம்மகளிர், நீர்க்கண......புலன்களடக்கிச் செய்யுந்தவத்தை முன் அடுத்தடுத்துச் செய்தோ தாயருகாக நின்று தவமாகிய தைந்நீராடலை நின்கட் பெற்றது?

அஅ. கல்விதொடங்கின அளவாதலின், 'மழபுலவர்' என்றார்.

கூரு. ஆயிடை - அவராடுதற்கண்.

கூரு - சா. வேயழகைவென்று மிக்க தோளழகை...யு...நீலத்தைச் செவித்தாராக அணிந்து ஒரு மடமாதைப் பார்த்தாள்; அவள் குறிப்பறிந்து அப்பொழுது அம்மாது குழைத்த பிண்டியது சாய்ந்த தளிரைத் தன் காதின்கண் அணிந்தாள்; அணிகின்றாள அப்பாய்குழையையுடையாள அணிந்த நீலமெல்லாம் அத்தளிரின செம்மையால இளவெயிலாம்படி யணிந் தாள்.

கூஎ - அ. குழைக்காதினையுடைய கோலச்செவிக்கட் குவளையை இவள் செருகி.

கூகூ. திலகம், செம்மையால் நெருப்பாகிய நெற்றிவிழியாயிற்று.

* "கடிமலர்ப் பிண்டிதன் காதிற செரீஇ" (பரி. கஉ - அடி அஅ.)

(பி - ம்).—[1]கொண்டு நோமடமாதர். [2]சாய்குழைபபிண்டி.

கொற்றவைகோ லங்கொண்டோர் பெண்
பவள வளைசெறித்தாட் [1]கண்டணிந்தாள் பச்சைக்
[2] குவளைப் பசுந்தண்டு கொண்டு
கல்லகா ரப்பூவாற் கண்ணி தொடுத்தாளை
நில்லிகா வென்பாள்போ னெய்தற் றொடுத்தாளே
மல்லிகா மாலை [3]வளாய்
தண்டு தழுவாத் தாவுநீர் வையையுட்
கண்ட பொழுதிற் கடும்புனல் கைவாங்க
நெஞ்ச மவள்வாங்க [4]நீடு புணைவாங்க
நேரிழை நின்றுழிக் கண்ணிற்ப நீரவன்
றாழ்வுழி யுய்யாது தான்வேண்டு மாறுய்ப்ப
வாயத் துடனில்லா ளாங்கவன் பின்றொடரூஉத்
தாயத் திறமறியா டாங்கித் தனிச்சேற
லாயத்திற் கூடென் றரற்றெடுப்பத் தாங்கிற்றே
சேயுற்ற கார்நீர் வரவு

---

க௦௦. கொற்றவை கோலங்கொண்டது, அவற்றின் மிக்கவிழிகாட்டு தற்கு.

க௦க - உ. பவளவளையைக் கையிற் செறித்தாளொருத்தியைக் கண்டு வேறொருத்தி குவளைப்பூவினது மரகதம்போலும் பச்சைத்தண்டைக் கொண்டு தன்கையையணிந்தாள்.

க௦ங. கல்லகாரம் - குளிரி.

க௦ச. நில்லென்பாள் போல்.

* இகவென்னுமசை இகாவென ஈறுதிரிந்தது.

க௦ச - ரு. வேறொருத்தி மல்லிகை மாலையின்கண் நெய்தலை விரவித் தொடுத்தாள்.

மேல் அவர் கருத்தும் வேண்டிக் கோடலும் கூறுகின்றாள்:—

க௦சு - கச. பண்டு ஒருவன் வையையுள் வாழைத்தண்டைத் தழுவி ஆடாநிற்க ஒருத்தியைக் கண்டான்; கண்டபொழுதிலே அவன் நெஞ்சு அழிதலாற் புனல் கையை வலிக்க, புணை தன்னை நெடுந்தூரம் வலிக்க, நீர் அவன் விரும்பின அவளிடத்துக் கொண்டு செல்லாதே..........அவடான் அதனைக்கண்டு அவன் பின் தொடர, தாய் அவ்வன்புடைமையை அறி

---

* "கணமணி காணிகா" (கலி. க௦ரு)

(பி - ம்.)— [1]டண்டணிந்தாள். [2]குவளைத்தண்டு. [3]வாளாய். [4]நீடூர்புணை.

நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தா[1]யென்மாருங்
[2] கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல
விழுத்தகை [3]பெறுகென வேண்டுது மென்மாரும்
பூவீ ழரியிற் [4]புலம்பப் போகா
தியாம்வீழ்வா ரேம மெய்துக வென்மாருங்
கிழவர் கிழவிய [5]ரென்றுதேழ் காறு
மழலீன்று மல்லற்கேண் மன்னுக வென்மாருங்
கண்டார்க்குத் தாக்கணங்கிக் காரிகை காண்மின்
பண்டாரங் காமன் படையுவள் கண்காண்மின்
நீனெய்தாழ் கோதை யவர்விலக்க நில்லாது
பூவூது வண்டினம் யாழ்கொண்ட [6]கொளைகேண்மின்
கொளைப்பொரு டெரிதரக் கொளுத்தாமற் குரல்கொண்ட

---

யாதே தனிச்சேறலை விலக்குதலால் அவள் அரற்றும்படி கரையைப்பொருது வந்தது, சிவப்புற்ற கார்காலத்து நீர் வரவு.

௧௧௫. அந்நீர்போலாது, தைந்நீரே, யாம்ஆடுமளவினையாய் நிறந்தெளிந்தாய்; அதனால் நீ தக்காயென்பாரும்.

௧௧௭. விழுத்தகை - வீறு.

௧௧௮. அரி - வண்டு. யாம் புலம்பப்பிரியாது.

௧௨௦ - ௨௧. எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியரெனப்படாமல் நிலையுறுதலையுடைய இளமையை இத்தவம்தரச் செல்வத்தோடும் சுற்றத்தோடும் நிலைபெறுக வென்பாருமாக.

௧௨௧. 'மல்லற்கேள்' என்பது உம்மைத்தொகை. ஆகவென்பது வருவிக்கப்பட்டது.

இனி ஒருவன் உவந்தவை காட்டுதல் கூறுகின்றாள்:—

௧௨௨. இக்காரிகை தாக்கணங்கு; ஆதலால் இவளைக் காண்மின்.

௧௨௩. உவள்கண் காமபண்டாரமும் படையுமாயிருக்கும்; அவ்வாறு தலைப்பார்மின்.

௧௨௪ - ௫. நீல நிறத்தையுடைய தேனெய் தங்கிய கோதையையுடைய மகளிர் விலக்க நில்லாது அக்கோதையிற் பூவையூதும் வண்டினம் யாழை ஒத்தற்குக் காரணமாகிய பாட்டைக்கேண்மின்.

௧௨௬ - ௭. கொளைப்பொருள்தெரிதரக் கொளுத்தாதிருக்க இனிதாகின்ற சுரும்பினது இசையைக் கேண்மின்.

---

(பி - ம்.)— [1]என்மார். [2]தழுத்தமை. [3]மக்கள்பெறுகென. [4]புலம்பும்போகாது, [5]என்குமெழ. [6]கோள்.

27. நீர்முகந்துண்டமூந் நூறுநின்றபின்
பார்முகந்தொழும்பிரான் பார்த்துநம்பகைப்
போர்முகந்தகுஞ்சய மினிப்பொலிந்தவென்
சீர்முகந்தருந்திறல் சிறப்பிற்றுமென்றான்.

உரை.— ஆண்டவன்கட்டளையிட்டபடி சேதையோன் செய்து கையானீரையள்ளியுண்டவர் மூந்நூறுசேவகர்மாத்திரம்நின்றார், நின்றபின்பு பொதுவற்றுப்பூவுலகில்வணங்கப்பட்டநாதன் பார்த்து இனி யிம்மூந்நூறுசேவகரைக்கொண்டு மட்டின்றிக் கூடியபகைவர் படைகளை வென்று நான்றரும்வெற்றி யுன்வல்லமையாலானதென்று தோன்றும லென்னளவில்லாதவல்லமையே தோற்றுவிக்குமென்றானென்க.

28. வவ்வொருவேலில மங்குஞப்பணிற்
கவ்வொருகாளமட் கலம்விளக்கிவை
யொவ்வொருவற்கிடு கெனவுரைத்தனன்
செவ்வொருதிருவிளை யாட்டுத்தேவனே.

உரை.—மீளவு மிம்மூந்நூறுபேரு மாயிதம்பிடித்துப் பொரவும்வேண்டாம் நடுவிராத்திரியி லொவ்வொருவனுக் கொருகாளமு மொருமட்கலமு மொருதீபமுமு கையிலே கொடுப்பாயாகவென்று ஞரோரிடத்து விளையாடினாற்போலத் தன்திருநீதியைக்காட்டும்நாதனென்க.

29. செம்முகம்புதைத்தொளி சிகன்றபின்செயம்
நும்முகந்தருமென நூறுநூறுமாய்
மும்முகம்பிரித்துமூன் றிட்டுமொய்ப்பகை
யம்முகம்வாய்விடா தணுகினாரோ.

உரை.— ஆண்டவனேவியபடி சூரியன்றன்சிவந்தமுகத்தைக்கடலிற்புதைத் தொளிமாறியிருண்டபின்பு சேதையோன் தன் சேவகரைப்பார்த்து வெற்றியுமதாயிற்றென்று தேற்றி யவரை நூறு. நூறாக மூவகுப்பாய்ப்பிரித தொவ்வொருவனுக்குக் காளமு மட்கலமுந் தீபமுமென்னு மூன்றினையுங் கையிற்றந்து பகைவரிருந்தவிடத்து வாய்விடாமற்கிட்டிப் போனானென்க.

## V. வேறு.

30. எதிரொழுந்தபகையவருறைந்தவிடை யிவரொழுந்தாவமில வுறிக்
கதிரொழுந்தசுடரொளிமறைந்துமிசை கவிழுகின்றபலகலமொடு

[1]வின்னியன்மாண் டேர்ச்சி யிசைபரி பாடன்
முன்முறை செய்தவத்தி [2]னிம்முறை யியைந்தே
மறுமுறை யமையத்து மியைக
நறுநீர் வையை [3]நயத்தகு நிறையே.

என்பது, வரைவுமலிந்ததோழி கன்னிப்பருவத்துத் *தைந் நீராடத் தவம் தலைப்பட்டேமென வையையைநோக்கித் தலைமகன் கேட்பச் சொல்லியது.

ஆசிரியனல்லந்துவனர் பாட்டு.
நாகனரிசை.
பண்ணுப் பாலையாழ்.

---

டலையுடைய நறுநீர்வையாய்! மின்னிழையையும் நறுநுதலையுமுடைய [4] மகட்டன்மை மேம்பட்ட கன்னிமைமுதிராத கைக்கிளைக்காமத்தைத்தருகின்ற நின்னிடத்து இத்தைந்நீராடலை †முற்பிறப்பிற் செய்த தவத்தாலே இப்பிறப்பிற் பெற்றேம்; அதனை யாவரும் நயக்கத்தக்க நின்னீர் நிறைக்கண்ணே மறுபிறப்பினும்பெறுவேமாக. (கக)

---

* "தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ" (கலி. ருக); "நறுவீ யைம்பாலி மகளி ராடுந், தைஇத் தண்கயம்" (ஐங்குறு. அசு.)

† "தவமுந் தவமுடையார்க் காகும்" (திருக்குறள், உகஉ.)

(பி - ம்.)— [1]இனனியலிசைமாணடேர்ச்சி. [2] அம்முறையியைந்தே. [3]நயகக [4]மக்கட்.

# பன்னிரண்டாம் பாடல்.

## வையை.

வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி
விளிவின்று கிளையொடு மேன்மலை முற்றித்
தளிபொழி சாரற் றதர்மலர் தாஅ
யொளிதிக ழுத்தி யுருகெழு நாக
[1]மகரு வழைஞெமை யார மிவையத்
தகரமு ஞாழலுந் தாரமுந் தாங்கி
நளிகடன் முன்னி யதுபோலுந் தீநீர்
வளிவரல் வையை வரவு
வந்து மதுரை *மதில்பொரூஉம் [2]வான்மலர்தாஅ

(பன்னிரண்டாம் பாடலுரை.)

க - அ. வளியாற் பொரப்பட்ட வானம் மின்னையும் இருளையும் மாறி மாறிப்பரப்பிக் கிளையோடு மையமலையைமுற்றித் தளியை இடைவிடாது பொழிந்த அதன்சாரலில் உதிர்ந்தமலர் தன்மேற்பரக்கக் கரைக்கண் நாகம் அகில் வழை ஞெமை சந்தனமிவைவருந்தத் தகரத்தையும் ஞாழலையும் தேவதாரத்தையும் ஏந்திக்கொண்டு வையைவருகின்றவரவு, ஒருகடல் கிளர்ந்துவருகின்றாற்போலும்.

ச. "நெட்டிலைவஞ்சிக்கோ" என்புழியும், †"புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்குங், கல்லென் பொருநை" என்புழியும் மரவிசேடத்திற்குள்ளன அதன்பெயர்த்தாய ஊரின்கண்ணும், ‡"திங்கள்வெண் குடையினாற்குத் திருவிழுக் குற்ற வண்ணம், பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத் துரைத்தும்" என்புழிச் சந்திரற்குள்ளது அவன்பெயர்த்தாய [3]அறிவின்கண்ணும் ஏற்றப்பட்டாற்போல் ஒளிதிகழாநின்ற உத்தியினையுடைய அச்சத்தைத்தருகின்ற நாகமெனப் பாம்பிற்குள்ளது அதன்பெயர்த்தாய மரத்தின்கண் ஏற்றப்பட்டது.

அ. வளிபோலும் விரைந்தவரவு.

---

* வையைநதி மதுரைமதிலைப் பண்டைக்காலத்திற் பொருது சென்றதென்பதை, "வையைதன், னீர்முற்றி மதில் பொருஉம் பகையல்லா னேராதார், போர் முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்" (கலி. ருஎ), "அமிழ்த வெண்டிரை வையையு மொருபுறத் தகழாம்" (திருவிளை. நகர. கஎ.) என்பவற்றாலும் அறிக.

† புறநானூறு, ௩அஎ. ‡ சீவகசிந்தாமணி, ககககூ.

(பி - ம்.)—[1] மகரவாழை. [2]வான்மலர் தாஅய். [3]அவவூரினகணணநதிங்க கணொவினகண ணு மேறபடடாறபொல,

யந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு
மின்னவி ரொளியிழை வேயு மோரும்
* பொன்னடர்ப் பூம்புனை திருத்துவோரு
மகில்கெழு [1]சாந்த மாற்றி யாற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோருங்
கார்கொள் கூந்தற் கதுப்பமைப் போரும்
[2]வேர்பிணி பன்மலர் வேயு மோரும்
புட்டகம் பொருந்துவ புனைகு வோருங்
கட்டிய [3]கயிலணி காழ்கொள் வோரும்
வாச நறுநெய் [4]யாடி வான்றுகண்
மாசறக் கண்ணடி [5]வயக்கி வண்ணமுந்
[6]தேசு மொளியுந் திகழ நோக்கி

---

கூ - க0. வையையாறு தன்மேல் வான்மலர் பரக்கவந்து மதுரை மதிலைப் பொருமெனக்கேட்டு.

கக. வேயுமோர் - அணிவோர்.

உம்மை இசைநிறை.

கஉ. பொன் அடரார்செய்த பூவாகிய அணியை.

கங - ச. சந்தனச்சாந்தைமாற்றி அகிற்புகையினுகிய சாந்தைப் பூசுவோரும்

கரு. கதுப்பு - † குழல்.

கசு. அக்கூந்தலின்கண் ‡ இருவேரியோடு தொடுத்த பலமலர் மாலையை.

கஎ. நீராடற்குரிய புடைவைகளை அலங்கரித்து உடுப்போரும்,

கஅ. கட்டிய § கொக்குவாய் அழகுசெய்த வடங்களைப் பூண்போரும்.

ககூ. வாசவெண்ணெயைப்பூசி வாலிய கற்பொடியால்.

உ0. வண்ணம் - இயற்கையழகு.

உக. தேசு - செயற்கையழகு. ஒளி - கலவியால்வந்ததிறம்

---

* "அடர்பொற்சிரகம்" (கலி. ருச.)

† குழல் - ஐம்பால்வகையுள் ஒன்று; சீவகசிந்தாமணி, உசஙஎ - ஆம் பாடலின் உரையைப்பார்க்க.

‡ இருவேரி - வெட்டிவேர்.

§ கோக்குவாயென்றும் படித்தற்கு இடமுண்டு; கொக்குவாய் கொக்கியெனவழங்கும்.

(பி - ம்.)— [1]சாந்தமாறி. [2]வோர்பன்மலர்மோரும. [3]கலணி. [4] ஆடடி வயககிய. [6]தேசுறுமொளியுந திசைநோககி.

வாச [1] மணத்துவர் வாய்க்கொள் வோரு
[2]மிடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்
[3]கட்டுவடக் கழலினர் மட்டு மாலைய
*ரோசனை கமழும் வாச மேனியர்
மடமா மிசையோர்
பிடிமே லன்னப் [4]பெரும்பெடை யனையோர்
கடுமா கடவுவோருங் களிறுமேல் கொள்வோரும்
வடிமணி நெடுந்தேர் மாமுள் [5]பாய்க்குநரும்
விரைபு விரைபு மிகைமிகை யீண்டி
யாட றலைத்தலை சிறப்பக் கூட
லுரைதர வந்தன்று வையைநீர் வையைக்
கரைதர வந்தன்று காண்பவ ரீட்ட
நிவந்தது நீத்தங் கரைமேலா நீத்தங்

உஉ. †பஞ்சவாசத்தினேடுங்கூட்டி இடித்த பாக்கை வாய்க்கண் அடுப்போருமாய்.

உங ஆணியிடும் புணர்வளையுடனே செறிக்கும் தோள்வளையராய்.

உச. கட்டுவடத்தோடு கான்மோதிரத்தராய்.

உசு. மடமா - நடைமெல்லிய குதிரை.

உஎ. பிடியை நடையால் வென்று ஏறினரென்பது போதர அன்னப் பெடை யனையோரென்றார்.

இவ்வளவும் மகளிர ; மேலன மைந்தர.

உகூ. தேர்களிற்பூட்டின மாக்களை முட்கோலாற் பாய்ந்து செலுத்துவோருமாய்.

ஙக. ஆடல் - நீராடல்.

ஙக - ங. கூடலாரெல்லாரும்புகழ வையைநீர் வந்தது ; அதனைக் காண்பவரீட்டம் அதன் கரையை ஒக்கவந்தது.

ஙச அந்நீர்வெள்ளம் கரைக்கு மேலே ஏறிற்று.

*நலமணம் ஒருயோசனையளவுகமழுமென்றல மரபு; "கமுகின்மேல விரிந்தபாளையும்...ஓரோசனையுலாவி நாறுமே", "ஓசனை நாறும்புகை கமழ" (சீவக. கூகூ, சுருங) என்பவற்றாலும் யோசனகந்தியென்னும் பெயராலு முணர்க.

† பஞ்சவாசமாவன : "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கப்பூரஞ் சாதியோ டைந்து."

(பி - ம்.)— [1]மணததுவாயக. [2]இருபுணா தொடுவளையா. [3]கட்டுவக் கழலினர். [4]பெயரும்படை. [5]பாய்குநரும்.

கவர்ந்தது போலுங் காண்பவர் காதன்
முன்றுறை நிறையணி நின்றவர் மொழிமொழி
யொன்றல பலபல வுடனெழுந் தன்றவை
யெல்லாந் தெரியக் கேட்குநர் யாரவை
கில்லா 1கேள்வி கேட்டன சிலசில
வொத்த குழலி னொலியெழ முழவிமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மருளி
யொத்தளந்து சீர்தூக்கி யொருவர் பிற்படார்
நித்தந் திகழு நேரிறை முன்கையா
லத்தக வரிவைய ரளத்தல் காண்மி
னுள்கொ டோழி நயனில் பரத்தையிற்
*றோணல முண்டு துறந்தா னெனவொருத்தி
யாணர் மலிபுன னீத்தத் திரும்பிடி

௩௪ - ௫. காண்பவர்காதல் வெள்ளத்தையெல்லாம் பருகியதுபோலப் பெருகிற்று.

என்றிவ்வளவும் பாணன் தலைமகனுக்குப் பருவவரவும் வையைநீர்வரவுங் கூறிற்று.

மேல், அதுகாண வருவார்க்கு முன்வந்துகண்டவர் ஆண்டுத்தாம் கேட்டன கூறுகின்றவாற்றானும் காட்டுகின்றவாற்றானும் விழவணியின்பம் கூறுகின்றார்:

௩௬ - ௪௪. துறைமுன் நிறைந்த அணியாக நின்றவர் மொழிகின்ற மொழி ஒன்றையொன்று ஒவ்வாது பலபலவாய் ஒருகாலத்தெழுந்தது; அவற்றையெல்லாம் தெரியக்கேட்க வல்லார்யார்? அவை கேட்டல்கூடா; அவற்றுள், யாம் கேட்டன சிலசில; அதற்குக்காரணமிது:—பொருந்திய வங்கியத்தின் இசையெழ முழவு மத்தரி தடாரி தண்ணுமை இவற்றது ஓசையையுடைய தாளத்தையளந்து அழகுதக நிருத்தத்தின்கண் ஒக்கத்திகழும் அரிவையர் தம் நேரிறைமுன்கையால் அத்தாளத்தைத் தூக்கி அளத்தலைக்காண்மின்.

என்று எல்லாம் கேளாமைக்குக்காரணங்காட்டி, மேல கேட்டன சொல்லுகின்றார்:

௪௫ - ௯. தோழி, ஒருத்தி நாணுக்குறையிலலாத குலமகளாயிருக்கத் தனக்குச்சிறந்தவன் தன்தோள் நலத்தையுண்டு பரத்தையிற்பிரிந்தானென

* "தோணலமுண்டு துறக்கப்பட்டோர்" (கலி. ௨௩.)

(பி - ம்.)—1 கேளவி கேள்வி கேட்டன சில சிலவொழுத்த.

[1]சேண வெரிநிற் சிறந்தாளோ டேறினா
ளணுக் குறைவில ணங்கைமற் றென்மருங்
கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோ
*னோட்டை மனவ னுரமிலி யென்மருஞ்
சொறிந்ததூஉஞ் சொற்றதூஉம் பற்றா ணிறந்திரிந்தா
ணெஞ்சத்தை நீத்தா ணெறிசெல்வான் பின்னிறை
யஞ்சிக் கழியாமோ வன்புற்றா லென்மரும்
பூணார நோக்கிப் புணர்முலைபார்த் தானுவ
னாணா ளவனையிந் நாரிகை யென்மரு
[2]மமிர்தன நோக்கத் தணங்கொருத்தி பார்ப்பக்
கமழ் †கோதை கோலாப் புடைத்துத்தன் மார்பி
[3]லிழையினைக் கையாத் திறுகிறுக்கி வாங்கிப்
பிழையினை யென்னப் பிழையொன்றுங் காணேன்

அவனோடுபுலந்து இதுபொழுது புனல்வெள்ளத்திலே அவனோடு இரும்பிடி வெரிநின் உயரவேறினாள்; அந்நங்கை நாணுடையளல்லளோவென்பாரும்.

௫௦ - ௫௧. அவைக்கண்ணேநின்று கொம்பரொப்பாளுடைய குவி முலையைநோக்குகின்றவன் இளநெஞ்சன்; திண்மையிலனென்பாரும்.

௫௨. பற்றாள் - அறியாள்.

௫௩ - ௪. இவள் நெறிசெல்வானொருவன்பின் நெஞ்சைப்போக்கினாள் [4]பெண்டிராதலானே, அன்புமிக்கால் நிறையழிவிற்கு அஞ்சி அம்மிகுதியைக் கழிக்கக்கடவேமல்லமோ.

௫௫ - ௬. உவன் இந்நாரிகைபூண்ட முத்தாரத்தினது அழகை நோக்கி இதற்கேற்றன இவையென நெருங்கியமுலைகளைப்பார்த்தான்; அதற்கு இவள் நாணுகின்றிலளென்பாருமாயினர்.

என்று கேட்டனகூறி, மேல் உவந்தவைகாட்டல்கூறுகின்றார்:—

௫௭ - ௬௦. தன் கணவனை அமிர்தையொத்த நோக்கால் அணங்கையொப்பாளொருத்திபார்க்க, அது பொறாது அவனைக் கோதையைக் கோலா

* "ஓட்டை நெஞ்சின ராயுழல் வார்களும்" (சீவக. ௬௩௨), "ஓட்டை மனத்தோ டுயிர் தாங்கி" (நளவெண். சுயம். ௬௪).

† "கோதை கோலாக,விறுகிறுகயாத்துப்புடைப்ப" (பரி. ௰. ௫௯-௬௦); "கோதை கோலா விறைஞ்சி நின்ற, ஊதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்" (கலி. ௧௨௮.)

(பி - ம்.)— 1 செணவரிநிற. 2அமர்தருநோக்கத. 3இழைகையாத் தறுக்கி. 4பெண்டிரானே.

றெழுது பிழைகேட்குந் தூயவனைக் காண்மின்
பார்த்தா ளொருத்தி [1]நினையெனப் பார்த்தவளைப்
பொய்ச்சூளா ளென்ப தறியேன்யா னென்றிரந்து
மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச்சூளென்
றொல்லுவ சொல்லா துணைவழுவச் சொல்ல
வுறைத்துஞ் செறுத்து முணர்த்து வானைப்
புல்லா தூடிப் [2]புலந்து நின்றவள்
பூவெழில் வண்ணநீர் பூரித்த வட் [3]டெறிய
வேலெழி லுண்க ணெறிநோக்கம் பட்டபுட்
பாய்குருதி சோரப் பகையின் [4]றுளஞ்சோர
நில்லாது நீங்கி நிலஞ்சோர வல்லாந்து
மல்லா ரகலம் வடுவஞ்சி மம்மர்கூர்ந்
தெல்லாத் துனியு மிறப்பத்தன் [5]காதல
னல்லே ரெழிலாகஞ் சேர்வித்த லெஞ்ஞான்றும்
வல்லதால் வையைப் புனல்

---

க்கொண்டு புடைத்துத் தன்மார்பின்வடத்தை வாங்கி முன்கையை இறுக இறுகக்கட்டி நீ பிழையையுடையையென்ன.

௬௧. தூயவனை - பிழையில்லாதானை.

௬௨. என - என்று அவள் சொல்ல.

௬௫. ஒல்லுவ - பொறுப்பன.

௬௬ - ௭௫. அச்சூளின்கண் மிக்கும் வெகுண்டும் ஊடறீர்ப்பானைக் கூடாது ஊடனீங்காமையினீங்கிப் புலவிநிலைமைக்கணின்றவள் பூநாற்றத்தையும் அழகையுமுடைய அரக்குநீரால் நிறைக்கப்பட்ட வட்டை மார்பிலெறிய அந்நீர் அவளுண்கண்ணின் வேலேறுபோலு நோக்கம்பட்ட புண்ணிற் குருதி சோர்வதுபோலச் சோரப் பகைத்தலைக்கெடுத்து உள்ளஞ்சோர அவன் ஆற்றுஞய் நேர்நில்லாது நீங்கிவணங்க, அதனைத் தான்மல்லாரகலத்தெறிந்தவட்டால வீழ்ந்தானென்றஞ்சி மயங்கி முன்புள்ள துனிகளுமுட்படநீங்க அவள் தன் காதலனாகத்தைச்சேர்ந்தாள்; இவ்வாறு சேர்வித்தலை வையைப்புனல் இன்றேயன்றி என்றும் வற்று; இதனைக் காண்மின்.

நீரையெறிய வட்டையெறிந்தது, ஊடி விளையாட்டு ஒழிந்தமையின்.

௭௪. சேர்ந்தாளென்பது வருவிக்கப்பட்டது.

---

(பி - ம்.)— [1]நினையெனப்பொய்ச்சூளாளெறியென்பதனையானென்னறறிந்துமெய்ச்சூளறிவானை. [2]புலன்றுநிறைவாள். [3]எறியா. [4]உளஞ்சோ வல்லாந்து [5]காதலானல.

எனவாங்கு
மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பக
மல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளங் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவஞ் சுரபுன்னை
யெல்லாங் கமழு [1]மிருசார் கரைகலிழத்
தேறித் தெளிந்து செறியிருண் மான்மாலைப்
பாறைப் பரப்பிற் [2]பரந்த சிறைநின்று
[3] *துறக்கத் தெழிலைத்தன் னீர்நிழற் காட்டுங்
காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே
போரடு தானையான் யாறு
சுடுநீர் வினைக்குழையின் ஞாலச் சிவந்த
† கடிமலர்ப் பிண்டிதன் காதிற் செரீஇ

---

எசு. என - என்றுகாட்ட
ஆங்கு, அசை.
எஎ - அக. இப்பூக்களெல்லாங்கமழும் இருசார்கரையுஞ்..........
அஉ. மாலைப்பொழுதின்கண்.
அங. பாறைப்பரப்புப்போலச் சலியாத அணைகளால் தேங்கி நின்று.
எஎ - அ0. மல்லிகை முதலாயவை ஆகுபெயர்கள். மணங்கமழ்சண்பகம், நல்லிணர்நாகமென்பன தம்பொருட்கேற்ற அடையடுத்துநின்றன.
அக. கரையென்றது, கரையணைந்த நீரோட்டத்தை.
தன்னீரி.................................................................
அரு. இருளையுடைய காலைப் பொழுதின்கட் கலங்கின செங்குருதித் தன்மைத்து.
இங்ஙனம்புனலாட..........................................................
அஎ - அ. சிவக்கச்சுட்ட நீர்மையையுடைய வினைக்குழைபோல நாலும்படி சிவந்த பிண்டிப்புதுமலரைத் தன் காதிற் செருகி.

---

* "குடவளைக்குலம் வயிறுளைந் திலமணி கொழிக்கு, மடுவில் வானக ருருவுகாட் டியதுபோன் மதில் சூழ், கடிகொண் மாநகர்" (நைடதம், நகர. க.)

† அசோகந்தளிரை மகளிர் தம் காதிற் செருகுதல். (பரி. கக, அடிகூரு.), "வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப" (முருகு. உக - உ.)

(பி - ம்.)— 1இருசாரற்கரை. 2பரந்து. 3துறககததொழிலை.

விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி
[1] யடிமே லடிமே லொதுங்கித் தொடிமுன்கைக்
காரிகை யாகத்தன் கண்ணி திருத்தினா
ணேரிறை முன்கை நல்லவள்கேள் காண்மின்
[2] துகில்சேர் மலர்போன் மணிநீர் நிறைந்தன்று
புனலென மூதூர் மலிந்தன் றவருரை
[3] யுரையி னுயர்ந்தன்று கவின்
[4] போரேற் றன்று நவின்று [5]தகர
மார்பழி சாந்தின் மணலளறு பட்டன்று
துகில்பொசி புனலிற் கரைகா ரேற்றன்று
விசும்புகடி விட்டன்று [6] விழவுப்புன லாங்க

௫௯. விடுமலர் - கட்டுவிட்டமலர்.

௬௦ - ௬௨. முன்கையாலே தன் கூந்தலிற் கண்ணியை அழகுடைத்தாகத் திருத்தினாள்; இவள்செய்த இக்குறிப்புத்தொழிலால், இவன் இந்நல்லவள் கொழுநனாயிருந்தான்; இதனைக் காண்மின்.

நெஞ்சம் பிணிப்பதோர் அவயவங்காண்டல் குறித்து அவள் செய்தலால், இது குறிப்புத் தொழிலாயிற்று.

௬௩. துகிலின்கட்சேர்ந்த பூத்தொழில்போலப் புனலின்கண் நீரினையுடைய மணி நிறைந்தது.

மணி, ஆடினாராபரணங்களினின்று உக்கன.

௬௪. அவர்புனலாடியவார்த்தை மூதூர் மலிந்தது.

௬௫. அவர்கவின் அவ்வுரையினு மிக்கது.

௬௬. அக்கவின் மிக்குப் பிறகவினோடு மாறுபாட்டினைக்கொண்டது.

௬௬-௭. அவர்மார்பினின்று அழிந்து வீழ்ந்த தகரச்சாந்தால் மணல் சேறாந்தன்மைப்பட்டது.

௬௮. அவர் துகில்வார்ந்த புனலாலே கரை கார்காலத்துத் தன்மை பெற்றது.

௬௯. இப்புனல்விழவால் வானுலகம் சிறப்பொழிந்தது.

ஆங்க, அசை.

இவ்வின்பங்கட்கெல்லாம் காரணமாகிய வையையை வாழ்த்தி முடிக்கின்றாள்.

(பி - ம்.)— [1]அடிமெனுடங்கி, [2]துகிலிற்சேர். [3]உரையுள். [4]கவினை போர். [5]தகாமாரழி. [6] வீழபுனல.

இன்பமுங் கவினு மழுங்கன் மூதூர்
[1] நன்பல நன்பல நன்பல வையை
நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை யுலகே.

என்பது, கார்ப்பருவத்து வையைநீர் விழவணியிற் பல்வேறு வகைப்பட்ட இன்பங்கூறி, இவ்வகைப்பட்ட இன்பத்தையுடைய நின்னையும் நினைத்திலரென வையையைநோக்கித் தலைமகன்கேட்பத் தோழி இயற்பழித்தது.

நல்வழுதியார் பாட்டு.
[2] நந்நாகனாரிசை.
பண்ணுப் பாலையாழ்.

---

கoo - கoஉ. வையாய்! நின்னால் அழுங்கன்மூதூரின் வாழ்வோர்க்கு இன்பமும் கவினும் நன்பல நன்பல நன்பல உளவாயின; அதனால், இவ்வுலகு அகன்ற இடத்தை யுடைத்தாயினும் நின்புகழை அடக்க மாட்டாது.

கoக. அடுக்கு, பன்மை பற்றி வந்தது. (கஉ)

(பி - ம்.)—1 நன்பலநன்பலவையை. 2 நன்னாகனார்.

## பதின்மூன்றும் பாடல்.

### திருமால்.

மணிவரை யூர்ந்த மங்குன் ஞாயிற்
றணிவனப் பமைந்த பூந்துகில் புனைமுடி
யிறுவரை யிழிதரும் பொன்மணி யருவியி
னிறனொடு மாறுந்தார்ப் புள்ளுப்பொறி புனைகொடி
௫ விண்ணளி கொண்ட வியன்மதி யணிகொளத்
தண்ணளி கொண்ட வணங்குடை நேமிமால்
* பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த
விருவேறு மண்டிலத் திலக்கம் போல

---

(பதின்மூன்றும் பாடலுரை.)

க — ௮. நீலவரைக்கட் பரந்த இளஞாயிற்றினது அழகுபோலும் அழகமைந்த பீதாம்பரத்தையும் நீலவரையை ஊர்ந்த இளஞாயிற்றினது அழகுபோலும் அழகமைந்த புனைமுடியையும் அவ்வரையினின்றிழியும் பொன்மணிகளையுடைய அருவியின் நிறத்தொடு மாறுகொள்ளும் தாரினையும் புள் எழுதிய புனைகொடியையுமுடையையாய் விண்ணின்கணின்று அளித்தற்றொழிலைக்கொண்ட †நிறைமதியது குளிர்ச்சியையொக்கக் குளிர்ந்த அளித்தற்றொழிலைக்கொண்டமாலே,

க. மங்குல் ஞாயிறு — இருளைக் கெடுக்குஞாயிறு; இதனை, ‡"நோய் மருந்து" என்றாற்போலக்கொள்க.

௬. அணங்குதல் — அசுரரைவருத்துதல்.

எ — க௩. கார்ப்பருவம் வாய்த்தலையுடைய பெரிய மேகத்தை இருபாலுமணிந்த இருசுடர்களது இலங்குதல்போல இலங்கும்நேமியையும் சங்கையுமேந்திய கையுடனே §அகலத்தைத்தொழுவோர்க்கு நினக்குரித்தாய் நீமேவிய வைகுண்டமும் உரிமையாதலையுடைத்து.

---

* "விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி...நன்னிற மேக நின்றது போலப், பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந், தகைபெறு தாமரைக் கையி னேந்தி, நலங்கிள ரார மார்பிற் பூண்டு,...செங்க ணெடியோ னின்ற வண்ணமும்" (சிலப். கக: ௪௱-௫௧.)

† பரிபாடல், ௪ அடி ௨௮.

‡ குறுந்தொகை, ௩௪௦.

§ "அகலநோக்கின" என்பதற்கு 'கொடுக்கும் பொருள் மார்பின்வலியான் உளதாமாகலின்' என்றகருத்து ஈண்டு உணரற்பாலது; (புறநா. க௫௫ — உரை.)

நேமியும் வளையு மேந்திய கையாற்
கருவி மின்னவி ரிலங்கும் [1]பொலம்பூ
* ணருவி யுருவி னாரமொ டணிந்த †நின்
றிருவரை யகலந் தொழுவோர்க்
குரிதமர் துறக்கமு முரிமைநன் குடைத்து
[2] சுவைமை யிசைமை தோற்ற நாற்றமூ
றவையு நீயே யடுபோ [3]ரண்ணா
லவையவை கொள்ளுங் கருவியு நீயே
முந்தியாங் கூறிய வைந்த னுள்ளு
மொன்றனிற் போற்றிய விசும்பு நீயே
யிரண்டி னுணரும் வளியு நீயே
மூன்றி னுணருந் தீயு நீயே
நான்கி னுணரு நீரு நீயே
யைந்துடன் முற்றிய நிலனு நீயே
அதனால், நின்மருங் கின்று மூவே ழுலகமு
மூலமு மறனு முதன்மையி னிகந்த

---

எ. வாய்த்தலினையென்னும் இரண்டாவது விகாரத்தால் தொக்கது. தொகுதியையுடைய மின்னினது அவிர்தலையொத்து இலங்கும் பொன்னாரத்தை (க0) முத்தாரத்தோடணிந்த நின் (கக) வரைபோலும் அகலம் (கஉ) என்க.

கங. துறக்கமுமென்னும் உம்மை, சிறப்பும்மை.

கச - கஃ. சுவைமுதலாயபுலன்களும் நீ; அவற்றை நுகரும் பொறிகளும் நீ,

கஎ - உஉ. இவற்றுள் முன்னர்க்கூறப்பட்ட புலன்களுள், ஒன்று - ஓசை; இரண்டு - ஓசையும் ஊறும்; மூன்று - ஓசையும் ஊறும் ஒளியும்; நான்கு - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும்; ஐந்து - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமும்.

இவ்வகுணங்களால் உணரப்படுவனவாகிய பூதங்களும் நீ. எ - று.

உங - ரு. ஆதலால், மூலப்பகுதியும் அறனும் அநாதியானகாலமும்

---

* "மாயோன் மார்பி னாரம் போல, மணிவரை யிழிதரு மணிகிள ரருவி" (தொல். செய். சூ. எஅ - பேர். மேற்)

† "நாறிணர்த் துழாயோ னல்கி னல்லதை, யேறுத லெளிதோ வீறுபெறு துறக்கம்" (பரி. கரு: கரு - கஃ.)

(பி - ம்.)—1 பெரும்பெருமபூண. 2சுவைமையினிசைமை. 3அணணல

காலமும் விசும்புங் காற்றொடு [1]கனலுந்
தன்னுரு வுறழும் பாற்கட னாப்பண்
மின்னவிர் சுடர்மணி *யாயிரம் விரித்த
கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளவஞ் சூடிய வறிதுயி லோனு
மறமிகு மலியொலி மாறடு தானையாற்
றிறனிகந்து வருஉ மவருயி ரகற்றும்
விறன்மிகு வலியொலி பொலிபகழ் புழுதியி
னிறனுழு வளைவாய் நாஞ்சி லோனு
நானிலந் துளக்கற முழுமுத னாற்றிய

ஆகாயமும் காற்றொடு கனலுங்கூடிய இம்மூவேழுலகத்து உயிர்களெல்லாம் நின்னிடத்தவாயின.

உங. மூவேழுலகமென்பது, ஈண்டு ஆகுபெயர்.

உச. மூலப்பகுதியாவது: சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் குணங்கள் மூன்றும் தம்முள் ஒத்த நிலைமையதாதலால் அது கூறவே அறிவறியாமைகள் இன்ப துன்பங்களென்னும் உயிர்க்குணங்களும் அடங்கின.

அறமாகியசிறப்புடைக்குணம் கூறவே சிறப்பில் குணமாகிய பாவமும் அடங்கிற்று.

இதனால், ஈண்டு எண்ணப்பட்டவற்றது கூட்டம் உயிரென்பது உணர்த்தப்பட்டது.

அவ்வுயிர்களின்பொருட்டு அறிதுயிலோனும் (உகூ) நாஞ்சிலோனும் (ஙங) களிறும் (ஙரு) ஆயதுவேயன்றி முக்குணங்களது வேறுபாட்டான் மும்மூர்த்திகளுமாகிய தலைபிரிந்த ஒருவனை (ஙஎ) யென்க.

ஙரு - எ. ஆகியென்னும் வினையெச்சம் ஆகிய வென்னும் பெயரெச்சத்து ஆதலொடுமுடிந்தது.

உரு - ஙரு. தன் நீலநிறத்தொடு மாறுபடும் வெண்மைநிறத்தினையுடைய பாற்கடல்நடுவே மின்னையொத்து அவிர்கின்ற சுடர்மணியொடு விரித்த தலையாயிரத்தினையுடைய சேக்கைக்கட்டுயிலும் துளவஞ்சூடிய அறிதுயிலோனெனவும் மிக்க ஒலியினையுடைய மறமிக்க மாறடுதானையுடனே ஒழுக்கமுடைமையைக் கடந்துவரும் பகைவருயிரை அகற்றும் விறல்மிகுவலியும் ஒலியும் பொலிந்து புழுதியை அகழுமாறுபோல அவர்

* "ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை" (பரி. க), "ஆயிரம் விரித் தெழு தலையுடை யருந்திறற், பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த,... திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்" (சிலப். கக: ஙஎ-சு0.)

(பி - ம்.)— [1]கனலுங்கூட்டி

பொலம்புனை யிதழணி மணிமடற் பேரணி
யிலங்கொளி மருப்பிற் களிறு மாகி
மூவுரு வாகிய [1]தலைபிரி யொருவனை
படர்சிறைப் பன்னிறப் பாப்புப் பகையைக்
கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை
[2]யேவலின் முதுமொழி கூறுஞ்
சேவலோங் குயர்கொடிச் செல்வநற் புகழவை
கார்மலர்ப் பூவை கடலை யிருண்மணி
யவையைந்து முறழு மணிகிளர் மேனியை
வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்குச்செல்
லவைநான்கு முறழு மருள்செறல் வயின்மொழி
முடிந்தது முடிவது முகிழ்ப்பது மவைமூன்றுங்
கடந்தவை யமைந்த கழலி ணிழலவை
யிருமை வினையுமில வேத்துமவை

---

நிறத்தையுமூம் நாஞ்சிற்படையையுடையோனெனவும் நானில............ எடுத்தற்குப் பரிய முதலொடுகவித்த பொன்னிதழணிந்த மணிமடற் கிம்புரியையுடைய மருப்பின்வராகமெனவும் கூட்டுக.

௨௧. யோக உறக்கமாதலால் அறிதுயிலெனப்பட்டது.

அகற்றும் (௩௧) நாஞ்சிலோன் (௩௩) எனவும், நாற்றிய (௩௪) மருப்பு (௩௫) எனவுமியையும்.

௩௮. பகை - கருடன்.

௩௯. கோடாமை - சலியாமை.

௪௰ - ௪௧. ஓதுதற்கு இனிய வேதத்தாற்சொல்லப்படுகின்ற நல்ல புகழையுடையை.

௪௨. கார் - மேகம். மலர்ப்பூவை - பூவையதுமலர்.

௪௪ - ௫. நின் அருள்வயின்மொழி வலம்புரி முழக்கையும் வேத முழக்கையுமொக்கும்; நின்செறல்வயின்மொழி வான்முழக்கையும் உருமேற்றின் முழக்கையுமொக்கும்.

௪௬ - ௭. தோன்றியதும் தோன்றுவதும் தோன்றாநின்றதுமாகிய காலக்கூறுபாடுகளைக் கடந்தவைதாம் பொருந்திய தாள்நிழலையுடையை.

௪௮. நின்னை ஏத்துமன்பர் இருவினையுமுடையரல்லர்.

---

(பி - ம்.)— 1 தலைவிரியொருவனைப. 2 மெவலின.

யொருமை வினை [1]மேவு முள்ளத்தினை
*யடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை
யடியுங் கையுங் கண்ணும் வாயுந்
தொடியு முந்தியுந் தோளணி வலயமுந்
[2] தாளுந் தோளு மெருத்தொடு பெரியை
மார்பு மல்குலு மனத்தொடு [3]பரியை
கேள்வியு மறிவு மறத்தொடு நுண்ணியை
வேள்வியு மறனும் விருப்பொடு வெய்யை
[4]யருஅ மைந்திற் செருஅச் செங்கட்
செருமிகு திகிரிச் செல்வ வெல்போ
ரெரிநகை †யிடையிடு பிழைத்த நறுந்தார்ப்
புரிமலர்த் துழாஅய் [5]மேவன் மார்பினோ

௪௯. காதலாகிய ஒருவினைக்கண்மேவுகின்ற.

௫௦. வளவிய இதழையுடைய தாமரைப்பூவையொக்கும்.

அடை, மேனிக்கு உவமை.

௫௩. எருத்து - கழுத்தடி.

அம்மேனியது பெருமை கூறியவாறு.

சினைவினை முதன்மேனின்றது.

௫௫. அன்பர் தம் குறை தம்முள்ளே கூறியும் அறிதலால், கேள்வி நுண்ணியை யென்றார்.

அருளிச்செய்த அறத்தொடு.

இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது.

௫௬. யாகத்தை விரும்புதலொடு மறம்வெவ்வியை.

௫௭ - அ. நீங்காத வலியினையும் [6]செறு திருக்கச்செய்தே செய்யகண்ணினையும் செருவின்மேம்பட்ட திகிரியாற் செய்யும் வெல்போரையுமுடைய செல்வ!

௫௯ - ௬௦. நிறத்தால் எரியையொத்த வெட்சிமலரை இடையிட்டுக் கட்டின புரிமலர்நறுந் தார்த்துழாயை மேவலையுடைய மார்பினோய்!

* "அடைநிவந்த, முட்டாள சுடர்த்தாமரை" (**மதுரை**. உசஅ - ௯.)

† "பச்சிலை யிடையிடுபு தொடுத்த, மலரா மாலை" (**புறநா**. ௩௩.)

**(பி - ம்.)**— [1]மேவுள்ளத். [2]தாருந்தோளும. [3]பெரியை. [4]மருஅ. [5]வெயனமாரபினைய. [6]செறு திருக்கச்செய்யகண்.

யன்னே்யென நினைஇ நின்னடி தொழுதனெம்
பன்மா [1]ணடுக்க [2]விறைஞ்சினேம் வாழ்த்தினே
முன்னு முன்னும்யாஞ் செய்தவப் பயத்தா
லின்னு மின்னுமெங் காம மிதுவே.

கடவுள் வாழ்த்து.

நல்லெழுநியார் பாட்டு.

......................

* பண்ணேுதிறம்.

---

சுக - ச. பண்டும் பண்டும் யாம்செய்த தவப்பயத்தால் அத்தன்மை யையென நினைத்து நின்னடியைக் கையாற்றொழுது பலகாலும் அடுத்து இறைஞ்சி வாழ்த்தப்பெற்றேம்; யாம் மேன்மேலும் ஆசைப்படுகின்ற பொருள் இது.

அடுக்குக்கள், காலநீட்டங்குறித்துவந்தன. (கரு)

---

* நோ்திறமென்றே இதுகாறும் வழங்கப்பட்டுவரினும், இந்நூற்கை யெழுத்துப்பிரதிகளிலெல்லாம், 'பணணுெதிறம' என்றே காணப்பட்டமை யின், இவ்வாறு பதிப்பிக்கலாயிற்று,

(பி - ம்.)— [1]னடுககலிறைஞ. [2]இறைஞ்சினேமேத்தினேம்வாழ்த்தி னேம்.

## பதினான்காம் பாடல்.

---

### (செவ்வேள்.)

கார்மலி கதழ்பெய றலைஇ யேற்ற
நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே
தண்ணறுங் கடம்பின் கமழ்தா தூதும்
*வண்ண [1]வண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே
௫ [†] யடியுறை மகளி ராடுந் தோளே
நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே
‡ வாகை யொண்பூப் புரையு முச்சிய
§ தோகை யார்குரன் மணந்து தணந்தோரை
நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன் றனவே

---

### (பதினான்காம் பாடலுரை.)

க – உ. மிக்க கதழ்பெயலை மேகம்பெய்தலால் அதனை ஏற்ற மிக்க நீரான் நிறைதலையுடைய சுனைகள் பூமலர்ந்தன.

உ. இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேல் நின்றது.

ச. பண்ணையென்புழி ஐகாரம் பகுதிப்பொருள்விகுதி.

௫ – சு. வேய், ஆடும் அடியுறைமகளிர் தோள்களை ஒத்தன.

எ – அ. சூட்டினவாகிய மயில்களின் குறைவற்றகுரல்.

அ. கூடிப்பிரிந்தோரை.

---

* பண்ணையென்பதில ஐகாரத்தைத் தமிழ்நூலோர் பகுதிப்பொருள் விகுதியென்பரென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (இ - கொ. சூ. கஎ.)

† அடியுறைமகளிரை அடியோரென்றும் வழங்குவர்; (பரி. அ: அடி, சஙு.)

‡ "குமரி வாகைக் கோலுடை நறுவீ, மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்" (குறுந், ஙசஎ.)

§ குயில் இங்ஙனமழைப்பதாக வேறு நூல்களிற் காணப்படுகின்றது: "புணர்ந்தீர் புணர்மி னோவென...இருங்குயி லெதிர்குரல் பயிற்றும்" "பூங்க ணிருங்குயில்....அகற லோம்புமி னறிவுடை யீரெனக், கையறத் துறப்போர்க் கழறுவ போல........நுவல" (நற். உஉச, உசங); "கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப், பிரிந்தீர் புணர்தருமி னென்பன போல,... இருங்குயி, லானா தகவும்" (கலி. கூஉ); "ஊடினீ ரெல்லா முருவிலான் றன்னாணை, கூடுமி னென்று குயில் சாற்ற" (சிலப். அ: இறுதிவெண்பா.)

(பி - ம்.) [1]வண்டின் குரல்.,

நாண்மலர்க் *கொன்றையும் பொலந்தார் போன்றன
மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
வழுகை மகளிர்க் குழுவை செப்ப
† நீரயற் கலித்த[1] நெரிமுகைக் காந்தள்
வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடு ‡கொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப்
பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மலிந் தன்றுநின் குன்று போர்மலிந்து
§ சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே

---

கO. கொன்றை மலர்களும்.

கக - உ. அழுகையையுடைய மகளிர்க்கு அது தீர்தற்பொருட்டுத் தாயர் ||புலிபுலியென்று சொல்லுமாறு வேங்கைப்பூ வியலுறைக்கட் பரந்தன.

கங - எ. இவற்றோடு, நெருங்கிய முகையையுடைய காந்தளவிழ்ந்த இதழ்நிரைதொறும் தோன்றியது விட்டகொடிக்கட்பூத்த செம்பூப்பரக்க நின்குன்று கார்காலத்தன்மைமிக்கது.

இவற்றோடென்பது வருவிக்கப்பட்டது.

கசு. தாவவென்பது தாயெனத்திரிந்தது.

கஅ. சூரைக் கிளையொடறுத்த.

---

*கொன்றைப்பூங்கொத்திற்குத் தார் உவமையாதல்: (பரி. அ : அடி உச), "கொன்றைக்கோதை நிலை", "குறும்பல் கோதை கொன்றை மலர" (ஐங்குறு. சசுஉ, சகஎ), "பொன்போருர் கொன்றை புரிந்தன" (திணைமா. கOக); "மாலிருஞ் சோலையிற் கொன்றைகண்மேற், றூங்குபொன் மாலைக ளோடுட னாய்நின்று தூங்குகின்றேன்" (நாய்ச்சியார் திருமொழி, கூ. க.)

† "அருவியார்ந்த தண்ணறுங் காந்தள்" (குறுந். உருக.)

‡ "தோன்றி மென் கொடி" (சூளா. சீய, உசச.)

§ "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற், சீர்மிகு முருகன்" (அகநா. ருக.)

|| வேங்கைப்பூப் பரந்தபாறை புலிபோற்றோன்று மென்பது பின்வருவனவற்றாலும் விளங்கும்; "கருங்கால் வேங்கை வீயுகு துறுகல், இரும்புலிக் குருளையிற்றோன்றும்" (குறுந். சஎ), "வேங்கை, மாத்தகட் டொள்வீ தாய துறுகல், இரும்புலி வரிப்புறங் கடுக்கும்" (புறநா. உOஉ), "கருங்கா லின வேங்கை கான்றபூக்கன்மேல், இருங்கால் வயவேங்கை யேய்க்கும்" (திணைமா. உசு), "நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி, மறமனை வேங்கை யெனநனி யஞ்சும்" (திருச்சிற். கூசு.)

(பி - ம்.)— 1நெரமுகை.

[1] கறையில் கார்* மழை பொங்கி யன்ன
[2] நறையி னறும்புகை நனியமர்ந் தோயே
யறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
யெழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே
†பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
யிருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ‡ரந்தண ரறனமர்ந் தோயே

---

௧௯ - ௨௦. கார்காலத்து §வெண்மேகம் கிளர்ந்தாலன்ன நறிய அகில் முதலியவற்றாற்புகைத்த ||நறும்புகையை மிகவிரும்பினோய்!

௨௧ - ௨. அறுமுகத்தையும் ஆறிருதோளையும் உடையையாய் அழகாற் பிறமகளிரை வென்ற ¶வெற்றியையுடையவள்ளியது [3]நலத்தை நயந்தோய்! ஆலென்னுமுருபு வேறுவினை ஒடுவின்கண்வந்தது.

௨௨. நறுமலர்வள்ளியென்பது, தன்பொருட்கேற்ற அடையடுத்து நின்ற ஆகுபெயர்.

௨௩ - ௪. பிரிந்தகேளிர் வந்துபுணர்ந்து பின் நீங்காமைப்பொருட்டு மகளிர் யாழையெழுவி நின்னைப்பாடுகின்ற பாட்டை விரும்பினோய்!

௨௬. **சிறந்தோர் - இந்திரன் முதலாகிய தேவர்கள். அஞ்சிய - அஞ்சுதற்குக்காரணமாகிய.

௨௭ - ௮. இரண்டு பிறப்பினையும் அப்பிறப்பால்வந்த இரண்டு நாமத்

---

* "பொங்கல்வெண்மழை" (நெடுநல். ௧௯); "பொங்கலாடி விண்டுச் சேர்ந்தவெண்மழை" (பதிற். ௫௫.)

† பரிபாடல், ௫ : ௫௦ - ௫௪.

‡ "விறன்மிகு விழுச்சி ரந்தணர் காக்கு, மறனும்" (பரி. ௧: ௩௭ - ௮.)

§ "புகைபுரை யம்மஞ் சூர", "வெண்மழை கவைஇக், கலஞ்சுடு புகையிற் றோன்றும்" (அகநா. ௧௭, ௩௦௮); "அகிலெழு கொழும்புகை மஞ்சி னுடவும்" (சூளா. நகர. ௬.)

|| (பரி. ௧௭: ௨௮ - ௩௦), "நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" (முருகு. ௨௩௯), "குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்" (சிலப். குன்ற.

¶ "இவள்விறனலம்" (கலி. ௩) என்பதும், அதனுரையும் ஈண்டு அறிதற்பாலன.

** பரிபாடல், ௧௯: ௧௧.

(பி - ம்.)— [1]கரையில. [2]நறையுணறும். [3]நயத்தை.

யன்னை யாகலி னமர்ந்தியா நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பய
மின்னு மின்னுமவை யாகுக
*தொன் [1]முதிர் மரபினின் புகழினும் பலவே.

என்பது, பருவங்கண்டழிந்த தலைமகள்கேட்ப முருகவேளைப் பரவுவாளாய், இப்பருவத்தே தலைமகன் வருமென்பதுபடத் தோழி வற்புறுத்தியது.

கேசவனார் பாட்டு.
இசையுமவர்.
பண் நோதிறம்.

---

நிலையும் ஈர நெஞ்சத்தினையும் ஒப்பில்லாத புகழினையுமுடைய அந்தணரது வைதிக அறத்தைப் பொருந்தினோய்!

உக - ருஉ. நின்னை யாங்கள் மேவி அடுத்தடுத்து வழிபடுவதன் பயம், இன்னும் இன்னும் நின்புகழினும் பலவாக அவ்வழிபாடுகள்தாமே யாகுக.

ருஉ. மிகவும் பழையதாகிய மரபு.

'வாருமென்பவர் சொற்போன்றன' (கூ) என்றதனானும், 'எழீஇப் பாடும் பாட்டமர்ந்தோய்' (உச) என்றதனானும் இப்பருவத்தே தலைமகன் வருமென்பது பட்டவாறு கண்டுகொள்க. (கச)

---

* "தொன்றியல் புகழது" (பரி. கரு: ருக), "தொலசீர்" (நன். பாயிரம்.)

(பி - ம்.)— [1]மிகுமரபுநின்.

# பதினைந்தாம் பாடல்.

## திருமால்.

*புலவரை யறியாப் [1]புகழொடு பொலிந்து
நிலவரைத் தாங்கிய [2]நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுத றொல்லிசை [3]யமையும்
[4] புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனி னுங்கவை பலவே பலவினு
நிலவரை யாற்றி நிறைபய னொருங்குட
னின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறு
மலரகன் மார்பின் [5]மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினுஞ்

---

### (பதினைந்தாம் பாடலுரை.)

க – ரு. அறிவெல்லையால் அறியப்படாத புகழுடனே பொலிந்து நிலவெல்லையைத்தாங்கிய நிலைமை நீங்காத கெடாத சக்கரவாளமுதலாகத் தொல்லிசைப்புலவர் ஆராய்ந்துரைத்த கொண்டாடப்படும் நெடிய குன்றங்களைச் சிறப்புவகையாற் கூறாது பொதுவகையாற் பலவென்றுரைக்கின்.

ரு. ஆங்கு, அசை.

ரு – கo. அப்பலவற்றுள்ளும் நிலத்துள்ளோரைப் பசிவெம்மை ஆற்றி நிறைபயன்களெல்லாவற்றையும் எப்பொழுதும் அவர்பெறப் பயன்படுகுன்று சில; அச்சிலவற்றுள்ளும் தெய்வங்கள் தாமாகவிரும்பும் மலரை யுடைய அகன்ற தடங்களுடனே மேகங்கள்படியும் சிகரத்தையுடையவாகிய குலவரைகள் சில சிறந்தன.

கo – கஉ. அக்குலவரைகள் சிலவற்றினும் கல்லெனஅறையும் கடலும் கானலும் போல வேறுவேறாகிய நிறத்தினையும் பிரிவில்லாத சொல்லும்

---

* "புலவரை யிறந்த புகழ்சா றோன்ற, னிலவரை யிறந்த குண்டுகண் ணகழி" (புறநா. உக), "புலவரை யிறந்தோய்" (சிலப். உஅ: அடி கஎச), "நிலவரை யிறந்தோர் முடங்கு நா நீட்டும், புலவரை யிறந்தபுகார்" (மணி. ரு: அடிகள் கoஅ – கூ.)

(பி – ம்.)— [1]புகழொடும். [2]நிலையிற்பெயராது. [3] அரையும் [4]புலவுராயபபுரையுபுரைத்த. [5]மைபடு.

சிறந்தது, *கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவே றுருவி னொருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை †யோங்கிருங் குன்றம்
‡ நாறிணர்த் [1]துழாயோ னல்கி னல்லதை
யேறுத லெளிதோ வீறுபெறு துறக்க
§ மரிதிற் பெறுதுறக்க மாலிருங் குன்ற
மெளிதிற் பெறலுரிமை யேத்துகஞ் சிலம்ப
|| வராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த் தாரின் [2]மாண்வரத் தோன்றி

---

பொருளும்போல வேறுபடாத தொழிலினையுமுடைய மாயோனையும் தம் முன்னோனையுந்தாங்கும் நீண்டநிலைமையினையுடைய ¶புகழானுயர்ந்த இருங் குன்றம் சிறந்தது.

புகழானென்பது வருவிக்கப்பட்டது.

கரு. நல்கினல்லது - வெளிப்பட்டுக்கொடுப்பினல்லது.

கஎ - அ. அவ்வரிதிற்பெறுதுறக்கத்தை எளிதிற்பெறுதலுரிமையான் மாலிருங்குன்றத்தை எல்லாருங்கேட்க ஏத்தக்கடவேம்;

என்று ஏத்துகின்றார் :—

கக. அரவின் மெல்லிய தலையாற் கவிக்கப்பட்ட தம்முன்.

உo. ** மராம் - வெண்கடம்பு.

---

* "மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங், கானலுஞ்சேர் வெண் மணலுங் காணுயோ" (திணைமா. ௫அ), "மணிகிளர் நெடுமுடி வானவனுந் தம்முனும்போன், றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்" (யா - வி. சூ. எஅ; இ - வி. சூ. எ௩அ - மேற்.)

† "ஓங்குயர் மலையத்து" (சிலப். கக: அடி கoரு.)

‡ பரிபாடல், க௩: கஉ - ௩.

§ " அரிது பெறு சிறப்பிற் புத்தே ணாடு" (குறுந். கoக.)

|| பரிபாடல். க: க-உ.

¶ "தென்கொடிசைக்குத் திலகமாய் நின்ற திருமாலிருஞ் சோலை" (திருவாய்மொழி, கo : எ. ச.)

** மராம்: " இணர்சேர்ந்த மராமும்" (கலி. உகூ.)

(பி - ம்.)— [1]துழாயோனல்லதை. [2]மான்வரத்.

யலங்கு மருவி யார்த்திமிழ் [1]பிழியச்
*சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர்மொழி †மாலிருங் குன்றந்
தாம்வீழ் காமம் [2]வித்துபு விளைக்கு
நாமத் தன்மை [3]நன்கனம் படியெழ
யாமத் [4]தன்மையிவ் வையிருங் குன்றத்து
மன்புன லிளவெயில் [5]வளாவவிருள் வளர்வெனப்
பொன்புனை யுடுக்கையோன் [6]புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர் கேண்மின் கமழ்சீர்

---

உக - உ. அசையுமருவி மிக ஆர்த்து இழிதலாற் சிலம்பாறு அழகு செய்த இவ்வியக்கத்தக்க இருங்குன்றத்து (உசு).

உஉ - கூ. அழகுபொருந்திய திருவென்னுஞ்சொல்லொடும் சோலையென்னுஞ்சொல்லொடும் மாலிருங்குன்றமென்னுஞ்சொல் தொடர்ந்த மொழியாகிய திருமாலிருஞ்சோலைமலையென்னும் நாமத்தினது பெருந்தன்மை நன்றாகப் பூமியின்கட்பரக்க, மகளிரும் மைந்தரும் தாம்வீழ்காமத்தை ‡வித்தி விளைக்கும் யாமத்தியல்பையுடைய இவ்வையிருங்குன்றத்தெனக் கூட்டுக.

உசு. § குறிஞ்சிக்குச் சிறுபொழுதாகலான் யாமங்கூறினார்.

உஎ - அ. நிலைபெற்ற குளிர்ச்சியையுடைய இளவெயில்சூழ அதனிடையே இருள்வளர்தலையொக்கப் பீதாம்பரத்தையுடையோன் தம்முனொடுகூடி அமர்ந்துநிற்கும் நிலையை.

உகூ. மாந்தீர்! நினைமின்; இனி, அம்மலையது சிறப்பைக்கேண்மின்.

---

* "நிலம்பிசைவீழ்ந்த சிலம்பாற் றகன்றலை" (சிலப். கக: அடி - க௦அ), "சிலம்பார்க்க வந்து தெய்வ மகளிர்க ளாடுஞ்சீர்ச், சிலம்பாறு பாயுந் தென்றிரு மாலிருஞ் சோலையே" (பெரியாழ்வார்திருமொழி, ச: உ. க), "சிலம்பாறுடைமாலிருஞ் சோலைநின்ற, சுந்தரனை" (நாய்ச்சியார் திருமொழி, கூ : க௦), "சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலை நின்ற, நலந்திகழ் நாரணனை" (பெரியதிருமொழி: கூ. கூ. கூ.)

† "திருமால் குன்றத்துச் செல்குவி ராயின்" (சிலப். கக: அடி கூக.)

‡ "வித்திவிளைத்து" (அறநெறி. கூரு.)

§ "குறிஞ்சி, கூதிர்யாம மென்மனார் புலவர்" (தொல். அகத். சூ. சு.)

(பி - ம்.) — [1]இழியாச். [2]வித்திவிளைக்கு. [3]நனகனபடியெழ. [4]தனமைதகனமையிவ. [5]வளாவிருள. [6]புணாமாநிலை.

சுனையெலா நீல மலரச் சுனைசூழ்
சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி
உறழ நனைவேங்கை யொள்ளிணர் மலர
* மாயோ னொத்தவின் னிலைத்தே
சென்றுதொழு கல்லீர் கண்டுபணி மினமே
யிருங்குன் றென்னும் [1]பெயர்பரந் ததுவே
பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது
கண்டுமய றுக்குங் காமக் கடவுண்
மகமுயங்கு மந்தி வரைவரை பாய
முகிழ்மயங்கு [2]முல்லை முறைநிகழ்வு காட்ட

---

௨0 - ௨௨. சுனையெல்லாம் நீலமலர அச்சுனைசூழ்ந்த †செயலை சினையிடமெல்லாம் மலர்தலானும் காய்கனிகளோடு நிறம் மாறுபட வேங்கையிணர் மலர்தலானும் மாயோனையொத்த இனிய நிலைமையையுடைத்து.

‡ நீலமலரைச்சூழ்ந்த செயலைமலர் அவன்பொன்புனை உடுக்கைக்கு ஒப்பு; குன்றத்துக் காய்கனியுறழ மலர்ந்தவேங்கை அவன்மணிமுடிக்கு ஒப்பு.

௨௪ - ௭. பெருங்கலிஞாலத்து இருங்குன்றென்னும்பெயர் பரந்தன் அத்துணையே பழைதாய் இயல்கின்ற புகழையுடைய §அது காண மயரை அறுப்பதொருவழிபடுதெய்வம்; அதனால், சென்று ‖அவனைத்தொழமாட்டீர்! அதனைக் கண்டுபணிமின்.

௨௮. மகவால் முயங்கப்பட்டமந்தி ஒருசிகரத்தினின்று ஒருசிகரத்திற் பாய.

௨௯. முகிழ்நெருங்கினமுல்லை மகளிர்கற்புநிகழச்சியைக்காட்ட.

---

* "மாயோ னன்ன மால்வரை" (நற். ௩௨)

† செயலை - அசோகமரம்.

‡ திருமாலுடைய உடுக்கையும் பொன்முடியும் இச்செய்யுளில் இங்கே கூறப்படவிலவேனும் அவற்றிற்கு ஒப்பென்றது, இந்நூல், ௧, ௨ - ஆம்பாட்டின் முதலிரண்டடிகளை உட்கொண்டென்று தோற்றுகின்றது.

§ அம்மலை காணமயரையறுப்பதொரு வழிபடுதெய்வமென்பதைத் திருவாய்மொழி, ௨ - ஆம் பத்து, "கிளரொளி" என்னும் பத்தாந்திருவாய்மொழியின் பின் இரண்டடிகளாலும் அவற்றின் வியாக்கியானங்களாலு முணர்க.

‖ "திருமா லிருஞ்சோலை மலையென்றே னென்னத், திருமால்வந் தென்னெஞ்சு நிறையப் புகுந்தான்" (திருவாய்மொழி, ௧0. ௮. ௧.)

(பி - ம்.)— [1]பெயாபொ஻ததுவெ. [2]முல்லைநிறை.

மணிமரு [1]ணன்னீர்ச்சினை மடமயி லகவக்
குருகிலை யுதிரக் குயிலினங் கூவப்
பகர்குழல் பாண்டி லியம்ப வகவுநர்
நாநவில் பாடன் [2]முழவெதிர்ந் தன்ன
சிலம்பிற் சிலம்பிசை [3]யோவா தொன்றுர்க்
கடந்தட்டான் கேழிருங் குன்று
தைய லவரொடுந் தந்தா ரவரொடுங்
கைம்மக வோடுங் காத லவரொடுந்
தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்
* புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
வெளவற் காரிருண் மயங்குமணி மேனிய
னெவ்வயி னுலகத்துந் தோன்றி யவ்வயின்
† மன்பது [4]மறுக்கத் துன்பங் [5]களைவோ

௪௦ - ௪௫. சிலம்பிடத்தவாகிய மணிமருள் மயில்கள் அகவவும், குருக்கத்தியிலையுதிர அதன்கணிருந்து குயிலினம் கூவவும், முழைக்கட் சிலம்புகின்ற எதிரொலி ஒவாது, அவ்வோசை நேரே பொருதுகொண்டிருந்த சிறப்பையுடைய குன்றத்தின்கண்.

சுருதியையுணர்த்துகின்ற குழலும் தாளமும் இயம்ப அவற்றைப் பாடுவாரது மிடற்றுப்பாடலும் முழவோசையும் எதிர்ந்தாற்போன்ற.

இசை யென்றவழி, குழலொலியும் மிடற்றுப்பாடலும் குயிலினத்தது கூவற்கும் அதன் எதிரொலிக்குமுவமை. தாள ஒலியும் முழவொலியும் மயிலது அகவற்கும் அதன் எதிரொலிக்குமுவமை.

மந்திபாய (௩௮) முல்லைகாட்ட (௩௯) எனநின்ற செயவென்னெச்சங்கள், இசையோவாதென்னும் (௪௪) பிறவினைகொண்டன.

௪௬ - ௮. அதனை நும்மனைவியரோடும் இருமுதுகுரவரோடும் குழவிகளோடும் சுற்றத்தோடுங்கூடத் தெய்வமாகமதித்துத் ‡திசைநோக்கித் தொழுது சென்மின்.

௪௯ - ௫௩. தன் நாபிகமலத்தையொக்கும் கண்ணையுடையனும்

* இவ்வடியும் இதனுரையும், இந்நூல் ௪-ஆம் பாடல், ௬௦, ௬௧-ஆம் அடிகளுடனும் அவற்றின் உரைகளுடனும் ஒப்புநோக்கற்பாலன.

† "உலகிறுவரை மன்பதும்" (பரி. ௩: அடி ௯.)

‡ "திசைநோக்கித்தொழுகின்றான்" (கம்ப். குக. ௩௦), "திசைநோக்கி மெய்ப்பூசனைபுரியும் வேங்கடமே" (திருவேங்கடமாலை. ௧௩.)

(பி - ம்.)— [1]நளினிரமாட. [2]முழவெதிரந்தமனையாலதிரந்த. [3]ஓவாதொழியானாக. [4]மறுபக்கத்துன்பம. [5]களைவானெனப்படு.

னன்பிது மேஎ யிருங்குன் றத்தான்
1 கள்ளணி பசுந்துளவினவை கருங்குன் றனையவை
யொள்ளொளியவை யொருகுழையவை
புள்ளணி பொலங்கொடியவை
வள்ளணி வளைநாஞ்சிலவை
சீலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வயநேமியவை
வரிசிலை வயவம்பினவை
புகரிணர்சூழ் வட்டத்தவை *புகர்வாளவை

---

நீரை வெளவுதலையுடையமேகமும் இருளும் நீலமணியும்போலுமேனியனும் எல்லாஉலகினும் வெளிப்பட்டு அவ்விடத்து உயிர்ப்பன்மையது மறுக்கத்தைச்செய்யும் பிறவித்துன்பத்தைக் களைவோன் †அன்புபட்டு இருங்குன்றத்தின்கண்ணுறைதலால்.

௪௧. ‡ புவ்வமென்பது பாகதச்சிதைவு.

இவ்வளவும் குன்றத்தையேத்திக் கண்டார்க்கும் அதன்சிறப்புக்கூறி மேல் அதன்கணின்ற இருவரையும் வாழ்த்தி வேண்டிக்கொள்கின்றார் :—

௫௭. கூர்மையணிந்த வளைநாஞ்சிலையுடையை.

௫௮. கோபமிக்க தண்டினையேந்தினை.

௫௯. வலம்புரியொடு வெற்றிநேமியையுடையை.

௬௦. வரிசிலையொடு வெற்றிஅம்பினையுடையை.

௬௧. புகரொழுங்கு சூழ்ந்த §[2]பாராவளையினையுடையை.

இவ்வாழ்த்துக்களுள், ஒள்ளொளியவை, ஒருகுழையவை (௫௫), வள்

---

* "புகர்கொள் பொற்சுரிகை" (தே. சுந்தர. திருநாகை).

† "மாலிருஞ்சோலை தன்னைக் கருதியுறைகின்ற கார்க்கடல்வண்ணன்" (பெரியாழ்வார், ௪: ௨௧. ௧.)

‡ புவ்வம் – பூர்வம்; "அங்க புவ்வ மாதியாய வாதிநூல்" (யா – வி. சூ. ௨௫; யா – கா. ௧: ௧௩-மேற்), "அங்க புவ்வாதி மெய்ந்நூல்" (யசோதர. ௧: ௫௧.) என்பவற்றாலுமுணர்க.

§ பாராவளை – சுழல் படை; "சுழல்படை வட்டம் பாரா வளையே" (பிங்கலந்தை, ௧௫௬௦;) 'மாலையைப் பாராவளையமாக வெறிந்தும்' (சீவக. ௨௬௫௬ – ந. உரை.) என்பதும், "தொல்கதை பாரா வளைவளை யெறிகோல்" (திருவால. ௩௧ : ௧௧) என்பதும் இங்கே அறியற்பாலன.

(பி – ம்.)— [1]களனணி. [2] பாறுவளையம்.

எனவாங்கு
1 நலம்புரீஇ யஞ்சீர் நாம வாய்மொழி
2 யிதுவென வுரைத்தனெ முள்ளமர்ந் திசைத்திறை
யிருங்குன்றத் தடியுறை யியைகெனப்
*பெரும் பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே.

**கடவுள்வாழ்த்து.**
**இளம்பெருவழுதியார்பாட்டு.**
**மருத்துவனல்லச்சுதனரிசை.**
**பண்ணேதிறம்.**

---

ளணி வளைநாஞ்சிலவை (ருஎ), சலம்புரி தண்டேந்தினவை (ருஅ) என வந்தன பலதேவனை; ஏனைய வாசுதேவனை.

சுஙு - சுரு. அழகிய சீரையும் அஞ்சப்படுதலையுமுடைய வேதம் தனக்கு நன்மையைவிரும்பி அவர்பெருமை ஈதென்றுசொல்லுதலால் யாமும் உள்ளம்மேவி அச்சொற்களுள் அறிந்தவற்றைக்கூட்டி உரைத்தேமாய்ப் பெரும் புகழையுடைய இருவரையுந்தொழுதுவேண்டுதும்; எமக்கு இவ்விருங்குன்றத்து அடியின்கண் உறைதல் எய்துகவென்று. எ - று. (கரு)

---

* "பானிற வுருவிற் பனைக்கொடி யோனு, நீனிற வுருவி னேமி யோனு மென், றிருபெருந் தெய்வமு முடனின் றாஅங்கு" (புறநா ருஅ.)

(பி - ம்.)— 1நலமபுரிநதஞசீர. 2இதுவுரைததனெம,

## பதினாறும் பாடல்.

### வையை.

கரையே, * கைவண் டோன்ற லீகை போன்மென
† [1] மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடு
நெய்குடை தயிரி னுரையொடும் பிறவொடு
மெவ்வயி னானு மீதுமீ தழியும்
துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்
‡ பொலம்புனை யவிரிழை [2]கலங்கலம் புனன்மணி
வலஞ்சுழி யுந்திய [3]திணைபிரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோ டொருங்குட னாடுந்
தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே
செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலிற்

(பதினாறும் பாடலுரை.)

க. கைவண்மையையுடைய பாண்டியனது ஈகைபோலுமென்று கண்டார்கூற.

ந - ச. நெய்குடை தயிர்போலு நுரையோடும் பிறவற்றோடும் நீர் பெருகல் எவ்விடத்தும் மேன்மேல் அழியாநிற்கும்.

நீர்பெருகலென்பன அவாய்நிலையான்வந்தன.

ரு - க0. ஒத்து முத்துச்சேர்ந்தவடம், தலைக்கோலமுத்து, பொன்னணி, வலமாகச் சுழிக்கும் யாற்றவாகிய கலங்குதலையுடைய புனல்கொண்டு வந்தமணிகள் இவற்றை இல்வாயில்போந்து நீராடும்புதல்வர் மென்றலைமுச்சியவாகிய முஞ்சமென்னுமணியொடுகொண்டு தத்தம் கணவரோடு ஒருங்குகூடி ஆடும் தத்தரிக்கண்ணாரிடந்தோறும் நீர் வாராநிற்கும்.

எ. திணைபிரிதல் - இல்லினின்றுசேறல்.

கக. விடுமலர்சுமத்தலும் பூநீர்நிறைதலும் வயலுக்கும் அரங்கிற்கும் சிலேடையாகலின்? வயலுக்கு அவிழ்ந்தமலர்களைச்சுமந்து பொலிந்தநீர்நிறைத

* "வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக், கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை, யுள்ள மில்லவர்க் கூர்தொறு முய்த்துராய், வெள்ள நாடு மடுத்து விரைந்ததே" (சீவக. நசு.)

† "மைபடு சென்னிப்பயமலை" (கலி. சந.)

‡ திருமுருகாற்றுப்படை, கஅ.

(பி-ம்.)— [1]மைபடி. [2]கருவினன் கலங்கற்றண்புனன்மணி. [3]திணைப்பிரி...

படுக ணிமிழ்கொளை பயின்றன ராடுங்
களிநா ளரங்கி னணிநலம் புரையும்
காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉ
நரந்த [1]நறுமலர் நன்களிக் கும்மே
[2] கரைபொழுகு தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோற்
கானலங் காவுங் கயமுந் துருத்தியுந்தேன்
றேனுண்டு பாடத் *திசைதிசைப் பூநலம்
பூத்தன்று வையை வரவு
சுருங்கையி னயத்தார் சுற்று [3]மெறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக் கண்டே
யிருந்துகிற் றானையி னொற்றிப் பொருந்தலை
பூத்தன ணீங்கெனப் பொய்யாற்றாற் றோழியர்
[4]தோற்றமோ ரொத்த மலர்கமழ் தண்சாந்தி

லாகவும் அரங்கிற்குக் †கமலவர்த்தனைக்கண் தூவிய மலர்களைச்சுமந்து ‡ பூதாருச்சனைப்பூவும் நீரும் நிறைதலாகவுமுரைக்க.

கஉ - ௩. படுகின்ற இயங்களின் கண்ணொலியையும் பாட்டினையும் பயின்றமகளிர் ஆடுகின்ற அரங்கினது அலங்கரித்த அழகையொக்கும்.

கச - ரு. மேன்மேலுநெருங்கும் சுரும்புகள் இமிரும் தாதுடனே நரந்தம்போலும் நறியமலர்களை மிக அளிக்கும்.

கசு - கூ. கா, தமக்கு விருந்தயர்ந்த ஒலித்தொழுகும் தீம்புனற்கு எதிர்விருந்தயர்வனபோல நன்களிக்குமென்க.

இவைய....................

கஎ - கூ. மணத்தையுடைய காவினும் கயங்களினும் ஆற்றிடைக் குறையினும் மதுவையுண்டு தேன்கள்பாடப் பூவினுகியஅழகு திசைதோறும்பொலிந்தது, வையை வரவின்கண்.

கஎ. கானலங்காவென்புழி, அல்லும் அம்மும் சாரியை.

உ0 - ௨க. வேயினுலே ஆயத்தார் சுற்றுமின்றெறியத் தன்குரும்பை முலைக்கட்பட்ட அரக்குநீரைத் துடையாளாய் இருந்துகிலின் தானையினுல் ஒற்றி நிற்ப, அவள்பால் தலைமகன்வருகின்றவனைத் தோழியர்கண்டு, பூத்த

* "திசை திசை தேனார்க்குந் திருமருத முன்றுறை" (கலி. உசு.)

† கமலவர்த்தனை: சீவக. கூஎரு - ஆம் பாடலின் உரையைப்பார்க்க ; கமலவட்டணையென்றும் வழங்கும்

‡ பூதர் - வருணப்பூதர். (சிலப்)

(பி - ம்.)— [1]நாறுமலர். [2]கரைபொழியுந தீம்புனற். [3]எறிந்த. [4]தோற்றமாரொத்த.

ஞாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்
திருங்கடற் கூங்கிவரும் யாறெனத் [1]தங்கான்
மகிழக் [2]களிப்பட்ட தேன்றேறன் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தன ணங்கை பொலிகென நாணுதல்
வாய்த்தன்றால் வையை வரவு
மலையி னிழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி [3]மடவார்
நனைசேர் கதுப்பினுட் டண்போது மைந்தர்
மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீனாரம் பூத்த வியன்கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கொத்த லெஞ்ஞான்றுந்
தேனிமிர் வையைக் கியல்பு
[4] புள்ளே புனலே புலவியிம் மூன்றினு

---

னள், அவளைப்பொருந்தாதேநீங்கென்று பொய்யாற்றாற்சொல்ல, அப்பூப்பின் தோற்றத்தை ஒருதலையாகஒத்த செஞ்சாந்தின்நாற்றத்தால் பூப்பின்மையை அறிந்துவைத்தும் [5]சனத்திடையாணுதலான் அவன் ஆண்டுநின்றும் நகையொடும் போந்து பின் இல்லின்கட் கடலைநோக்கி மலையினின்றும்பரந்து வரும் யாற்றையொக்க விரைந்துசென்று மகிழுமாறு களிப்புமிக்க பழத் தேனாற்செய்த தேறலையுநுகராது குருதிபோலும் பூநீரைத் துடைத்து அணுகி மருவுதலின், அவர் அவளில்லத்தார்க்கு நங்கை பூத்தனள்பொலிகவென்று சொல்ல, அதற்கு அவள் நாணுதலைப்பயந்தது, வையையது வரவு.

இதுவும் வருகின்றனவும் காதற்பரத்தையைக்குறித்துக்கூறியன.

௩௨ - எ. மலையினின்றுமிழிந்த அருவிபோந்து கரையிடந்தோறும் இடந்தோறுமுளவாகிய மல்கிணர்மரத்தைச்சேர்ந்து அவற்றதுபூவால் அழகு பெற்று மடவார்கதுப்பினிற்றீர்ந்த தேன்சேர் தண்போதுகளும் மைந்தர்கள் மார்பிற்றீர்ந்த மலரிதழ்களும் பரக்கப்பட்டு மீனாகியமுத்துப்பூத்துவிளங்கிய வானத்தின்கட் கங்கைபெயர்ந்தகூற்றை ஒத்தலுடைமை.

௩௯ - ௪௬. ஒளிகிளர் உண்கட்கெண்டை, மதுபானம் புனலாட்டு புலவியென்னும் இம்மூன்றினும் ஒள்ளியநிறம் சிவக்க, வண்டினம் வாயைச்சூழும் அழகுடனே மயிரினின்றுநீங்குநீர்மையையுடைய பூக்களினின்றுந்தேனொழுக மிக்கநீரின்கண் ஆடும்பரத்தையரை அடுத்தடுத்துப்புல்

---

(பி - ம்.)— [1]தாங்க. [2]கனிப்பட்ட. [3]மடவாரநதனைசொ. [4] கள்ளே. [5] சந்தனத்திடையாணுதலால்.

மொள்ளொளி [1]சேய்தா வொளிகிளருண் கட்கெண்டை
*பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடுஞ்
[2] சென்னீர் வீவயிற் றேன்சோரப் பன்னீ
ரடுத்தடுத் தாடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தா ரகலத்தா
னெடுத்தவே †யெக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றங்
கொடித்தேரான் வையைக் கியல்பு
வரையார்க்கும் புயல்கரை
திரையார்க்குமித் தீம்புனல்
கண்ணியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய வீகைப் பயன்கொள்வா [3]னுடலா
ளுண ‡ளுநறையு நறுஞ்சாந்துங் கோதையும்
பூத்த புகையு மவியும் புலராமை

லுதலால் நெகிழ்ந்து அழிந்ததும் அழியாததுமாகிய கத்தூரிக்குழம்பார்ந்த அகலத்தான், பனியால்வளைந்தவேய் அப்பனிநீங்க மேலேகிளர்ந்து [4] மிசைச் சென்று தாக்குதலால் தேன்சோர்ந்துவிழும் வரையையொக்கும் தோற்ற முடைமை.

௪௦. கெண்டை நிறஞ்சிவக்கவெனப் பண்பின்றொழில் பொருண்மேல் நின்றது.

௪௮ - ௯. மேகம் வரைக்கண்ணே ஆராநிற்குமவ்வளவில் இவ்வகைத் தாகிய தீம்புனலுள் திரை கரைக்கண்ணே ஆராநிற்கும்.

இவ்வளவும் தோழி தன்னுள்ளே கூறுவாளாய்ப் புனலாடியவரலாறு கூறி, மேல் வையையைநோக்கிக்கூறுவாளாய் வாயின்மறுக்கின்றாள் :—

௫௦ - ௫௫. வையாய்! கண்ணியராய்த் தாரராகிய மைந்தரும் கமழ்

* "வரிவண்டுவாய்சூழும் வளங்கெழுபொய்கை" (கலி. எக.)

† எக்கி, திசைச்சொல்; (தெலுங்கு)

‡ "புகைபூ, அவியாராதனை யழல்பல வேந்தி" (பரி. ௫: கக.)

(பி - ம்.) — [1]செய்தாரொளி. [2]செனனனீவுவீவயிற. [3]ஆடலின. [4] விசை.

மருஅற்க வான [1]மலிதந்து நீத்தம்
நுரு வருஅற்க வையை நினக்கு.

என்பது, காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில்வேண்ட அவள் புனலாடியவாறுகூறி வாயின்மறுத்தது.

நல்லழுசியார் பாட்டு.
நல்லச்சுதனரிசை.
பண்ணோதிறம்.

---

நறுங்கோதையராகியமகளிரும் முன் பொருள்களைத்*தானம்பண்ணி அதன் பயனாகியபோகத்தை நுகரவேண்டி நாடோறும் ஆடுதலான் அவர்கையுறையாகிய †பொன்மீன்முதலியவும்அவரணிந்தசாந்தும் மாலையும் ஈரணிபுலர்த்தும் பொலிந்தபுகையும் நினக்குத்தரும் உண்டியும்இடையறாமல் மழைமாறாதொழிக; அம்மழையினாகியவெள்ளம்பெருகி நினக்குவறாதொழிக. (கசு)

---

* "தானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமாம்" (சிறுபஞ்ச. ருக.)

† இப்புத்தகத்தில் சo - ஆம் பக்கத்துக் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.)— [1]மலிந்து.

# பதினேழாம் பாடல்.

## செவ்வேள்.

தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
யேந்திலை சுமந்து சாந்தம் [1]விரைஇ
விடையரை யசைத்த வேலன் கடிமரம்
பரவின ருரையொடு பண்ணிய விசையினர்
விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக்
கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
மாலை மாலை யடியுறை யியைநர்
மேலோ ருறையுளும் வேண்டுநர் யாஅர்
ஒருதிறம், பாணர் யாழின் றீங்குரலெழ
ஒருதிறம், யாணர் வண்டி னிமிரிசையெழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ

(பதினேழாம் பாடலுரை.)

௧ - ௮. கோலப்படும் எரியும் இசையியங்களும் சந்தனமுதலியவிரைகளும் அகிற்புகையும் கொடிகளும் ஒருங்கேவரத் தாம் தேன்விளைந்தமலர்களையும் குழைகளையும் பூத்தொழில்களையுடைய துகில்களையும் வடித்தமணியினையும் ஏந்தப்படும் இலையினையுடைய வேலினையுஞ்சுமந்துவந்து கடிமரமாகிய *கடம்பை உரையாலே ஏத்தினராய். †ஆளத்தியாலாக்கிய இசையினராய் விரிமலர்மதுவான் மரங்கள்நனையுங்குன்றத்து அடியின்கண் உறைதலை மாலைகடோறும்பொருந்துவாருள் தேவருலகத்து உறைதலை வேண்டுவாருளரோ?

௨ - ௩. சந்தனத்தைத்தெளித்து அரைக்கண்ணே வேலன் விடையைக்கட்டின பூசையையுடைய மரமெனக் கூட்டுக.

௫. கோலெரி - தீபம்.

எழவெனவும் சுமந்தெனவுநின்ற வினையெச்சங்களும், பரவினர் இசையினரென்னுமுற்றுவினையெச்சங்களும் இயைநரென்னும் தொழிற்பெயருள் இயைதலொடுமுடிந்தன.

௧௦. பூக்களாகிய புதுவருவாயினையுடையவண்டு.

௧௧. கரைபு...................................

* "கடம்பமர் அணிநிலை" (பரி. ௧௧)

† ஆளத்தியினியல்பைச் சிலப்பதிகாரத்திற் காண்க; (பக். ௮௫.) இப்பெயர் ஆலாபனமென்று வழங்கும்.

(பி) - ம்.)— [1]விரைஇய.

ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத
ஒருதிறம், மண்ணார் முழவி னிசையெழ
ஒருதிறம், அண்ண னெடுவரை யருவிநீர் ததும்ப
ஒருதிறம்,* [1]பாடனல் விறலிய ரொல்குபு நுடங்க
ஒருதிறம், வாடை யுளர்வயிற் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலி
னீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை யரிகுர றோன்ற
மாறுமா றுற்றனபோன் மா [2]றெதிர் கோடன்
மாறட்டான் குன்ற முடைத்து
பாடல் சான்று பல்புகழ் முற்றிய
கூடலொடு பரங்குன் றினிடைக்
கமழ்நறுஞ் சாந்தி னவரவர் திளைப்ப
[3] நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து

---

கஉ. ..................போலுமிசையினை.

கரு. பாடுதல் நல்ல விறலியர்.

வினையது நன்மை வினைமுதன்மேனின்றது.

கசு. உளர்வயின் - அசைந்தவிடத்து.

கஎ - அ. பாலையையுடைய அழகிய மிடற்றுப்பாடற்கண் நாலுதாக்கு டையகிழமையும் இரண்டுதாக்குடைய.......................குறையுந்தோன்ற

கஅ. சீருக்கிசைய ஆடுகின்ற மயிலது அரிந்தகுரல்.

உ0. கல்விகளால் மாறுமாறுந்தன்மையுற்றனபோல இகலை ஏற்றுக் கோடல்.

கஉ - கஅ. †யாழின்குரலொடுவண்டிசைக்கும், குழலின் கரைபொடு தும்பியிசைக்கும், முழவிசையொடு அருவிநீரொலிக்கும், விறலியர்நுடக்கத் தொடு கொடிநுடக்கத்திற்கும் கிழமைநிறைகுறைகளின் தோற்றத்தொடு அரிகுரற்றோற்றத்திற்குங்கொள்க.

உஉ - ரு. பாடுதலமைந்து பலபுகழும் முற்றுப்பெற்ற கூடற்கும் பரங்

---

* பதிற்றுப்பத்து, ருக: க0 - கக; பரி. கசு: கஉ - ௩; மது. உகஎ - அ.

† "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டினம் நல்யாழ் செய்ய", "கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப், பொங்கர் வண்டின நல்லி யாழ் செய்ய" (மணி. ச: ௩ - ச; கஅ: ருஎ - அ); "அருவி, தாழ்ந்து வீழ்ந் தவை முழவிற்றதும்பின", "படுகண் முழவினிமிழருவி" (சீவக. கருசு0. உகஎஉ), "வல்லியென்னுமாதராடு நாடகங், கண்டு" (சூளா. சீய. உகசு.)

(பி - ம்.)— [1]பாடல்விறலியர், ஆடலலவிறலியர். [2]எதிர் கொள்ளன. [3] நணிந்தணிததாயினுஞ்.

மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியிற்
1 சோர்ந்தவி ழிதழி னியங்குமா றின்று
வசைநீங்கிய வாய்மையால் வேள்வியாற்
றிசைநாறிய *குன்றமர்ந் †தாண்டா ண்
டாவி யுண்ணு மகில்கெழு கமழ்புகை
வாய்வாய் மீபோ யும்பரிமை பிறப்ப
தேயா மண்டிலங் காணுமா றின்று
வளைமுன்கை வணங்கிறையா
ரணைமென்றோ ளசைபொத்தார்
தார்மார்பிற் றகையியலா
ரீரமாலை யியலணியார்
மனமகிழ் தூங்குநர் பாய்புட ளுடச்
சுனைமலர்த் தாதூதும் வண்டூதே லெய்தா
வனையபரங் குன்றி னணி

குன்றத்திற்கும் இடைநின்றநிலம் மிக அணித்தாயினும் மகளிரும் மைந்தரும் நெருங்கி விளையாடுதலால் மிகச் சேய்த்தாகாநின்றது.

உசு - எ. மகிழ்ச்சிமிக்க அவர்கள்கூந்தலினின்றும் குஞ்சியினின்றும் வீழ்ந்து அவிழ்ந்த மாலையால் தடுக்கப்பட்டு இயங்குநெறி இன்றாகாநின்றது.

உகூ - ௩உ. ‡ புகழால் திசையெங்கும்பரந்த குன்றின்கண்மேவி உலகத்தார் பலவிடத்தும் செய்கின்றபூசைக்கண் முருகன் ஆவியாகக்கொள்ளும் அகிற்புகை அவ்விடந்தோறும் மேலே போதலான் உம்பர் இமையாநின்று நீங்குவார்; ஆதித்தமண்டிலமும் ஆண்டுக் காணும் இயல்புடைத்தன்று.

௩உ. தேயாமண்டிலமென்றார், § ஏனைமண்டிலம் தேய்தலின்.

௩௩ - கூ. ஈரமாலை இயலணியாராகிய வளைமுன்கை வணங்கிறையாரும் அவர் அணைமென்றோளின் கட்டங்கி அன்பொத்தாராகிய தார்மார்பிற் றகையியலாரும் மனமகிழ்தூங்கி உடனே பாய்ந்தாடுதலால், வண்டுகள் வெருவிச் சுனைமலர்த்தாதினை ஊதப்பெறா; பரங்குன்றினது அலங்காரம் அத்தன்மைய.

* "குன்றமர்ந் துறைதலுமுரியன்" (முருகு. எஎ.)

† 'ஆண்டாண்டுறைதலு மறிந்தவாறே" (முருகு. உசகூ.)

‡ "இசையாற் றிசை போய துண்டே" (சீவக. ௩க.)

§ ஏனைமண்டிலம் - சந்திரமண்டிலம்; "மதியிற்றேய்வன" (மதுரை. கஅரு - சு), "தேய்தலுண்மையும்" (புறநா. உஎ.)

(பி - ம்.)—1 சோர்ந்தவிதழின்.

கீழோர், வயல்பரக்கும் வார்வெள்ளருவி பரந்தானாதரோ
மேலோர், இயங்குதலால் வீழ்மணி [1]நீலஞ் செறுவுழக்குமரோ
தெய்வ விழவுந் திருந்து விருந்தயர்வு
மவ்வெள் ளருவி யணிபரங் குன்றிற்குந்
தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்குங்
கொய்யுளை மான்றேர்க் கொடித்தேரான் கூடற்குங்
கையூழ் தடுமாற்ற நன்று
எனவாங்கு
*மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ
[2] பணியொரீஇ நின்புக ழேத்தி

---

என்றது, முன்னர்ச்சொல்லுகின்றவற்றை.

சO - சக. மலைக்கண் வார்வெள்ளருவி ஆனாது பரந்து உழவரது வயலின் கட்பரக்கும். மேல் விளையாடுமகளிர் இயங்குதலால் அவர் பூணி னின்றும் விழுந்தமணிநீலம் உழுநிலத்தைச் சிதைக்கும்.

இரண்டு அரோவும் அசை.

சஉ - எ. பிரிந்ததலைவர் வினைமுடித்துக் கடிதின்வந்து கூடுதற்கு அவ் வெள்ளருவியணிந்த பரங்குன்றின்கண் தலைவியர்செய்யும் தெய்வவிழாவும் அங்ஙனங்கூடியவழிக் கெடாத விழுப்புகழையுடைய வளங்கெழு வையை யின்கண்ணும் ஏனையார் கொய்யுளைமான்றேராற்சூழப்பட்ட கொடித்தேரை யுடையான்கூடற்கண்ணும் அவர்செய்யும் திருந்துவிருந்தயர்வும் தம்மிற் காரணகாரியங்களாய்த் தடுமாறிவருதல் இல்லறநெறியாதலின் அவர்க்கு நல்லொழுக்கமாயிற்று.

வையையின்கண் விருந்தயர்தலாவது, அவரோடு புதுப்புனலாடுதல்.

கற்புடைமகளிரும் தலைவரது அறம்நிமித்தமாகப் பூசைசெய்து அதன் பயனுகர்வரென்றலின், இதுவும் கடவுண்மேலதாயிற்று.

இவ்வளவும் முருகனது பரங்குன்றத்தைப்புகழ்ந்து, மேல் அவனை எதிர்முகமாக்கி வாழ்த்துகின்றார்:—

சஅ - ருங. மணிநிற மஞ்ஞையினையும் உயர்ந்த கோழிக் கொடி

---

* "மணிமயி லுயரிய மாறா வென்றிப், பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. ருசு.)

(பி - ம்.)— 1நீலஞ்சேறுழக்கும், நீலஞ்சிதைக்கும். 2பணியொரீஇய.

யணிநெடுங் *குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுது
† மேம வைகல் பெறுகயா மெனவே.

கடவுள் வாழ்த்து.
நல்லழுசியார் பாட்டு.
நல்லச்சுதனாரிசை.
பண்ணோதிறம்.

---

யினையும் ‡ பிணிமுகத்தையூர்ந்து செய்யப்பட்ட வெல்போரையுமுடைய தலைவ! மக்கண்மாட்டுப் பணிமொழியையொழிந்து நின்புகழையேத்தி .........யாமும் எம் சுற்றமும் வேண்டிக்கொள்ளாநின்றேம்; பிறவித்துன்பம் சாராதவைகலைப் பெறுகவென்று. (௧௭)

---

* "பயமலை யேத்தி யகவினம்பாடுவாநாம்" (கலி. ௪௦), "தேமுயர் சிமையக் குன்றம் பாடும்" (அகநா. ௨௦௮),' 'நின்னுநின் மலையும் பாட'' (புறநா. ௧௪௩), "தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை, வான்பொரு நெடுவரை வளனும்பாடி" (சிறுபாண். ௧௨௭ - ௮).

† "சேவலங் கொடியோன் காப்ப, வேம வைக லெய்தின்றா லுலகே" (குறுந். கடவுள்.)

‡ பிணிமுகம் - முருகக்கடவுளுக்கு உரிய யானை; (பரி. ௫: ௨.); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம், வாழ்த்தி" (முருகு. ௨௪௭) ; "ஊர்ந்ததை,... வேழம்" (பரி. ௨௧: ௧ - ௨); "கடுஞ்சின விறல் வேள் களிறூர்ந்தாங்கு" (பதிற். ௧௧.); "பிடல்கெழுவேலவன்களிற்றின் மீது", "அடர்ந்திடு களிற்று வாகனனாய்" (இலிங்க, ௭௦ - ௬; ௮௦ - ௭.)

# பதினெட்டாம் பாடல்.

## செவ்வேள்.

*போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக்
காரெதிர்ந் தேற்ற [1]கமஞ்சூ லெழிலிபோ
னீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச்
சூர்நிரந்து சுற்றிய [2]மாதபுத்த வேலோய்நின்
ரு சீர்நிரந் தேந்திய குன்றொடு [3]நேர்நிரந்
தேறுமா [4]றேற்குமிக் குன்று
ஒள்ளொளி †மணிப்பொறி யான்மஞ்ஞை நோக்கித்தன்

(பதினெட்டாம் பாடலுரை,)

க - சு. தம்முட்கூடிப் போரையேற்ற அவுணரது வலியானுண்டாகிய பெருமிதம் கெட, விசும்பின்கட்பரந்து கார்காலத்தையெதிர்ந்த நிறைந்த சூலையுடைய மேகம்போலிருண்டு நீரைப்பரந்தேற்ற நிலத்தால் தாங்கப்படும் கடற்பரப்பினுட் பரந்துசுற்றிய சூர்மாவைத் தபுத்தோய்! நின்னைப்பயந்த புகழைத் தான் அகன்று ஏந்திய ‡இமயத்தொடு நேர்நின்று ஏறுமாறுதலை யேற்கும், இப்பரங்குன்று.

மதந்தப மாதபுத்தோயென இயையும்.

சு. §ஏறுமாறென்பது, பகைத்தற்கு ஓருலகவழக்கு.

நீ விரும்புதலால் இப்பரங்குன்று நின்னைப்பயந்த இமயம்போலப் புகழ்பெற்றது. எ - று.

இனி முருகவேளைப் படர்க்கையாக்கி இம்மலைச்சிறப்புக் கூறுகின்றார் :—

எ - கரு. ஒள்ளொளி மணிபோலும் பொறியினையுடைய ‖ஆலுமயிலை

* இப்பாடலின் முதல்நான்கடிகளும், "அணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சின விறல்வேள்" (பதிற். கக) என்பதும், "அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர், மாமுத றடிந்த...வேற்சேய்" (முருகு. ருகூ - சுக) என்பதும், 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார்வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்த தொருமாவை வெட்டின சேய்' என்னும் அதன்விசேடவுரையும் இங்கே ஆராய்தற்பாலவை.

† "மணிப்பொறிக்குடுமிப், பீலி மஞ்ஞையாலும்" (நற். ஙருஎ).

‡ "பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்" (பரி. அ: கக.)

§ "ஏறுமாறாக இருப்பளே யாமாயின்" (தனிப்பாடல்.)

‖ "ஆலுமிம்மஞ்ஞை" (சீவக. உஙசு.)

(பி - ம்.)— [1]கயஞ்சூழெழிலி. [2]மாதபுத்தோய். [3]நீர்நிரந்து. [4]ஏற்றருங்குன்று.

னுள்ளத்து நினைப்பானைக் கண்டனை டிருநுதனு
முள்ளிய துணர்ந்தேனஃ துரையினி நீயெம்மை
யெள்ளுதன் மறைத்தலோம் பென்பாளைப் பெயர்த்தவன்
காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ்
பேதுற்ற விதனைக்கண் டியானேக்க நீயெம்மை
1 யேதிலா நோக்குதி யென்றுங் குணர்ப்பித்த
லாய்தேரான் குன்ற வியல்பு
ஐவளம் பூத்த வணிதிகழ் குன்றின்மேன்
மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்
கைவளம்பூத்த வடுவொடு காணுய்நீ
மொய் *வளம் பூத்த முயக்கம்யாங் கைப்படுத்தே
மெய்வளம் பூத்த 2விழைதகு பொன்னணி
நைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம்
பூத்தன பாணநின் பாட்டு

நோக்கி, அதனழகையும் களிப்பினையும் தன் உள்ளத்தாற் குறிக்கொள்ளும் கானவனைத் திருநுதல்கண்டு நீ நினைத்ததறிந்தேன்; இனி, அதனை எமக்கு உரை; எம்மை நோக்காது இகழலை மறைத்தலொழியென்று ஊடுவாளை அவன் அதனைமாற்றி, யாம் செய்யுங்காதலை யுடையாய்! தன்னுற்களவு கொள்ள அரிதாய நின்சாயலைக் களிமகிழாற் களவுகொள்ள எண்ணி அது தான்பெறாது வருத்தமுற்ற இதனைக்கண்டு யான் அவ்வருமையை நினைக்க, நீ எம்மை இகழ்ந்தேமாகக் கருதாநின்றாயென்று அவ்வூடலை அப்பொழுதே யுணர்ப்பித்தல்.

கரு - உக. மெய்அழகுபூத்தற்கு ஏதுவாகிய விழைதகு பொன்னணியினை யுடைய பாண, ஐந்துவளமும் பொலிந்த பரங்குன்றின்மேல் வாழும் மழைக்கண்ணாரது இறுகன்மிகுதியையுடைய முயக்கத்தை அவருகிர் செய்தவடுவால் யாம் தெளியவறிந்......................நட்டபாடை யென்னும் பண்ணைத்தருகின்ற யாழ்நரம்பிற்கு இயைந்த நின் பண்டைப் பாட்டு(?) நின்னையல்லது பரத்தைமையானொன்னும் இயலொடு கூடுதலால் நின் பொய்ம்மிகுதியையுணர்த்திற்று.

மலைவளமைந்தாவன. †"அரக்கிறலி செந்தே னணிமயிலின் பீலி, திருத்தகு நாவியோ டைந்து." என்பதனுனறிக.

* வளம் - மிகுதி ; "வினைவள நீறெழ நீறணியம்பலவன்" (திருச்சிற்றம்பலக்கோவையார், ககஅ.)

† "இச்செய்யுள், "அரக்குலண்டு" என்றபாடபேதத்துடன், காடுபடு திரவியத்திற்கு மேற்கோளாக வேறுரைகளில் வழங்குகின்றது.

(பி - ம்.)— 1ஏதிலானேக்குதி. 2விழைதருமெய்யணி.

தண்டளிர் தருப்படுத் தெடுத்துரைஇ
மங்குன் மழைமுழங்கிய விறல்வரையாற்
கண்பொருபு சுடர்ந்தடர்ந்திடங்
திருள்போழுங் கொடிமின்னால்
வெண்சுடர் வேல்வேள் விரைமயின்மேன் ஞாயிறுநின்
னொண்சுட ரோடைக் களிறேய்க்கு நின்குன்றத்
*தெழுதெழி லம்பலங் காமவே ளம்பின்
றொழில்வீற் றிருந்த நகர்
ஆர்ததும்பு மயிலம்பு நிறைநாழி
சூர்ததும்பு வரைய காவாற்
கார்ததும்பு [1]நீர்ததும்புவன சுனை
[2] யேர்ததும்புவன பூவணி செறிவு

---

இது. பாணனுக்குத் தலைவன்பரத்தைமை கூறுகின்றாளொரு தலைவி கூற்று.

இதனால் அத்தன்மைத்தாகிய இன்பத்தென்பது பெறப்பட்டது.

இனி அவனை எதிர்முகமாக்கி,

உ௬ - ௬. வேலையுடையவேளே! விரைந்த மயின்மேல் வருஞாயிறே! மழை முழங்கிய சிகரமும் அதன் கட் கொடிமின்னும், நின் ஓடையையுடைய களிற்றையொக்கும்; நின்குன்றத்தின்கண் எழுதிய அழகையுடைய அம்பலம் அம்பினது ஏத்தொழில் நிலைபெற்ற காமவேள் †சிரமச்சாலையையொக்கும்;

.........த்துமின்னும் வழக்கு நோக்கி......அம்பின்தொழிலென்றார்.

‡ மழைக்கு முழக்கம் கூறினமையான், யானைக்கும் முழக்கம்கொள்ளப்படும்.

௩௦ - ௩௩. சூர் நிறைந்த வரையவாகிய சோலைகளும் மேகத்தால் நிறைந்த நீர்துளும்புவனவாகிய சுனைகளும் பூவணிந்த செறிவால் அழகு துளும்புகின்றவை ஆர்மிக்க கூரிய அம்பு நிறைந்த அவன்றூணியை யொக்கும்.

---

* பரிபாடல், கக: சஅ - ருஎ.

† சிரமச்சாலை - ஆயுதப்பயிற்சி செய்யுமிடம்; "சிரமநீதிசான்றவர்" (திருவால. ௩ரு: ச), "சிரமநிலை காண்மின்" (வி - பாரதம். வாரணவத. ருச.)

‡ "முதல்வநின் யானை முழக்கங் கேட்ட, கதியிற்றேறாக் காரின் குரல்" (பரி. அ: கஎ - அ.)

(பி - ம்.)— 1நீர்தயங்குவன. 2ஏர்தயங்குவன, பேர்தயங்குவன.

போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ [1]கார்தோற்றுங்
காந்தள் செறிந்த கவின்
கவின்முகை கட்டவிழ்ப்ப தும்பிகட் டியாழின்
புரிநெகிழ்ப்பார் போன்றன கை
அச்சிரக் காலார்த் [2]தணிமழை கோலின்றே
வச்சிரத் தான்வான வில்லு
வில்லுச்சொரி பகழியின் மென்மலர் தாயின
வல்லுப்போர் வல்லாய் மலைமேன் மரம்
வட்டுருட்டு [3]வல்லாய் மலைய நெட்டுருட்டுச்
சீர்ததும்பு மரவ முடன்சிறந்து
போர்ததும்பு மரவம் போலக்
கருவி யார்ப்பக் கருவிநின்றன குன்ற
மருவி யார்ப்பமுத் தணிந்தன வரை

௩௪ - ௫. கார் தோன்றுவிக்கும் காந்தட்குலைகள் நெருங்கிய அழகாற் போர்தோற்றுக் கட்டுண்டார் கையையொக்கும்.

௩௬ - எ. தும்பி கட்டவிழ்ப்பனவாகிய கவினையுடையகாந்தண்முகைகள் கட்டுதலையுடைய யாழ்நரம்பினது புரியை நெகிழ்ப்பார்கையை ஒத்தன.

உவமை, மலராது குவியாது இடையதாகிய நிலைமைபற்றி நின்றது.

௩௮ - ௯. அழகியமேகம் முன்பனிக்காலத்தின்கண் ஆர்த்து இந்திரனது வானவில்லைவளைத்தது.

ஆர்ததும்பும் (௩௦) என்பது முதலாய இந்நான்குறுப்பிற்கும் குன்றத் தென்பது அதிகாரத்தான் வருவிக்க.

௪௦ - ௪௧. சூதுப்போர்வல்லவனது மலைமேன்மரங்கள் அவ்வில்லுச் சொரியுங்கணைகளுளவாயின் அவற்றையொக்க மெல்லியமலரைப்பரப்பின.

௪௨ - ௫. வட்டுருட்டுதல்வல்லவன்மலைக்கட் குன்றத்துப் போரின் கண்மிகும் அரவம்போலத் திரளாகிய தாளமொலிக்கும் ஒலியொடு சிறந்து இயங்களார்ப்ப மேகத்தொகுதியும் அவ்வார்ப்பொடு நின்றன.

ஈண்டு குன்றமென்றது, முருகவேள்கோட்டத்தையும் அதனைச்சூழ்ந்த இடத்தையும்.

௪௬. மலைக்கட்சிகரங்கள் அருவி *யார்த்தலால் முத்தணிந்தாலொத்தன.

* ஆர்த்தலால் - ஒலித்து இழிதலால்; "அருவியார்க்கும்" (புறநா. ௧௨௮) என்பதன் உரையைப்பார்க்க.

(பி - ம்.)— [1]கார்தோற்றற் காந்தளஞ்செறிந்த. [2]அணிமணிமழை. [3]வல்லாயமலை நெருட்டுருட்டுச.

குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை
யெருவை கோப்ப வெழிலணி திருவில்
வாணி *லணித்த வரியூதும் பன்மலராற்
கூணி வளைத்த சுனை
புரியுறு நரம்பு மியலும் புணர்ந்து
சுருதியும் பூவுஞ் சுடருங் கூடி
யெரியுரு ககிலோ டாரமுங் கமழுஞ்
செருவேற் றானைச் [1]செல்வநின் னடியுறை
†யுரிதினி னுறைபதிச் சேர்ந்தாங்குப்
பிரியா திருக்கவெஞ் சுற்றமோ டுடனே.

**கடவுள் வாழ்த்து.**

**குன்றம்பூதனார் பாட்டு.**

**நல்லச்சுதனா ரிசை.**

**பண் காந்தாரம்.**

---

சஎ. தினைகள், குருவியார்க்குமாறு கதிர்கள்விளைந்தன;

சஅ - ௫0. சுனைகள், கரையினின்றும்சாய்ந்த வேழத்தை முட்டுவன பல நிறத்துமலராற் கூனற்பட்டு எழிலணிந்த ‡ திருவில்லைவளைத்த வானை யொப்பவாகி வண்டூதும் அழகுடையவாயின.

இவ்வளவும் மலைச்சிறப்புக்கூறி மேல் வாழ்த்திமுடிக்கின்றார்:—

௫க - சு. செருவேற்றானைச்செல்வ! நின்பூசைக்கட் புரிதலுற்ற நரம்பினது ஒலியும் புலவர்பாடிய இயற்பாட்டுக்களும்பொருந்தி வேதவொலியும் உபசாரமாகியபூவும் தீபமுங்கூடி எரியின்கண் உருகுமகிலும் சந்தனமும் தூபமாய்க் கமழாநிற்கும் நின் அடியின்கணுறைதலை எமக்குஉரித்தாக வுறையும் பதியைச்சேர்ந்தாற்போல எம்சுற்றத்தோடுகூடி யாம் பிரியா திருப்பேமாக. (கஅ)

---

* அணித்த - அழகுசெய்த.

† "உரிதமர் துறக்கம்" (பரி. கங : கங); "உரிதி னொருதலை யெய்தலும்" (கலி. சுஉ); "அரிதுற்றனையாற்பெரும வுரிதினிற், கொண்டாங்குப் பெயர்தல்" (அகநா. க.)

‡ திருவில் - இந்திரவில்; (சிலப், கரு : கருசு ; மணி. சு : க0.)

(பி - ம்.)— [1]செல்வனின்.

## பத்தொன்பதாம் பாடல்.

### செவ்வேள்.

*நிலவரை யழுவத்தான் வானுறை புகறந்து
புலவரை [1]யறியாத புகழ்பூத்த †கடம்பமர்ந்
தருமுனி மரபி ‡னான்றவர் நுகர்ச்சிம
ணிருநிலத் தோரு மியைகென வீத்தநின்
றண்பரங் குன்றத் தியலணி நின்மருங்கு
சாறுகொ ளுறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலு மயிற்கொடி வதுவை
புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்
கலப்போ டியைந்த விரவுத்தீ ரெல்லை
§யறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
|| சிறந்தோ ருலகம் படருநர் போல
வுரிமாண் புனைகல மொண்டுகி ருங்கிப்
புரிமாண் புரவியர் போக்கமை தேரர்

---

(பத்தொன்பதாம் பாடலுரை.)

க – எ. வானின்கண் உறைதற்கு ஏதுவாகிய விருப்பத்தை நீ நில வெல்லையிடையுங்கொண்டு அறிவெல்லையால் அறியப்படாத புகழையுடைய கடம்பினை மேவி, பெறுதற்கரிய இறைமையானமர்ந்த தேவரெய்து நுகர்ச்சியை............மக்களும் எய்துகவெனத்தந்த நின்னுடைய பரங்குன்றத்து இயல்கின்ற அலங்காரத்தையுடைய மயில்போலும் வள்ளியது வதுவை துறக்கத்துத் தெய்வயானையது சாறு.....கொள்வது போலும்.

அலங்காரத்தையுடைய (௫) வதுவை (எ) என இயையும்.

அ – கஅ. அறிவினும் வீரத்தினும் பிறரைப் போர் வெல்லுங் கூடற்கண் மகளிரும் மைந்தரும் புணர்ச்சியொடு வந்த இரவு நீங்கிய வைகறைகண் இவ்வுலகத்து அறத்தைப் பெரிதாகச் செய்து அதன் பயன் நுகர வேண்டித் தேவருலகத்துச் செல்வாரைப் போலத் தமக்கேற்ற மாடசியை

---

* "நிலவரை யிறந்த குண்டுகன் ணகழி" (புறநா. உக.)

† "கடம்பம ரணிநிலை" (அடி, க௦௪.)

‡ ஆன்றவர் – தேவர்; "அவ்விபுணைவி னான்றோரோடு" (திருக்குறள், ௪க௩.)

§ "புண்ணியம் புரிந்தார் புகுவது துறக்கம்" (கம்ப. நகர. ௫.)

|| சிறந்தோர் – தேவர் ; (பரி. க௪ – உ௬ )

(பி – ம்.) — [1] அறியாது.

தெரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்பநின்
குன்றொடு கூட லிடையெல்லா மொன்றுபு
நேர்பூ நிறைபெய் திருநிலம் பூட்டிய
தார்போலு மாலைத் தலைநிறையாற் றண்மண
லார்வேலை யாத்திரைசெல் யாறு
*சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு [1]சூழல் புலமாண் வழுதி
மடமயி லோரு மனையவ ரோடுங்
கடனறி காரியக் கண்ணவ ரோடுநின்
† சூருறை குன்றிற் றடவரை யேறிமேற்

யுடைய புனைகலங்களையும் நல்லதுகில்களையும் அணிந்து விருப்பமான புரவியராய் ஓட்டமமைந்த தேரராய்த் தெரிமலர்த்தாரராய் விளக்கம் தெருவின்கண் இருளை அகற்றப்போந்து நின்குன்றிற்கும் கூடற்கும் இடையெல்லா நெருங்கி, யாத்திரை செல்கின்ற தண்மணலார்ந்த கானல்போலும் வழி, அவர் மாலையையுடைய தலைகள் இடைவெளியற நிறைதலால் ஒத்த பூக்களை நிறைய வைத்துக்கட்டி இருநிலத்திற்கிட்ட மாலை போலும்.

முதற்கண் போர் என்பதூஉம் கூடலென்பதூஉம் (அ) ஆகுபெயர்.

'சீப்ப' (கச) என்னுமெச்சத்திற்கு முடிபாகிய 'போந்து' என்னுஞ் சொல்வருவிக்கப் பட்டது.

தாங்கிப் (கஉ) புரவியராய்த் தேரராய்த் (கங) தாரராய் (கச) வைகறைக்கட் (௯) போந்து நெருங்கிப் (கரு) படருநர்போலச் (கக) செல்கின்ற வழி (கஅ) தார்போலும் (கஎ) என்க.

க௯ - உக. படுமணியானை நெடியாய்! அறிவுதிருந்திய வழுதி, மடமயிலனைய மகளிரோடும் காரியக்கடனறிந்த தன் கண்ணாகிய அமைச்சரோடுங் கூடி நாடும் நகரும் தன்னையடைய வந்து நின்குன்றில தடவரை மேலேறி நீமேவிய கடிநகரைப் ‡பாடுண்டாக வலந்திரியும் பண்பினாற்சூழ்தலை உவமை சொல்லுங்கால் மதியுடனே... .........மேருவின் பக்கத்துச் சூழ்வருதலையனைத்து.

உக. ஓருமென்பது அசை.

உஉ. §"ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந், தெற்றென்க மன்னவன் கண்" என்பதனாற் கண்ணவரென்றார்.

---

* சுடர் - சந்திரன்; (புறநா. ௩௬௭.)

† "சூர்புகலறிக்கம்" (மலைபடு. உ௩௯.)

‡ பாடு - பெருமை.

§ திருக்குறள், ருஅக.

(பி - ம்.)— [1]சூழிற்.

பாடு வலந்திரி பண்பிற் பழமதிச்
சூடி யசையுஞ் சுவன்மிசைத் தானையிற்
பாடிய நாவிற் பரந்த வுவகையி
னாடு நகரு மடைய வடைந்தனைத்தே
படுமணி யானை *நெடியாய்நீ மேய
கடிநகர் சூழ்நுவலுங் கால்
தும்பி தொடர்கதுப்ப தும்பி தொடராட்டி
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரனசைப்பார்
வண்டார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்
திண்டேர் வழியிற் செலநிறுப்பார் கண்டக்
கரும்பு †கவழ மடுப்பார் நிரந்து
பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே
குருகெறி வேலோய்நின் குன்றக்கீழ் நின்ற
விடைநிலம் யாமேத்து மாறு

௨௪ - எ. பழைய வரிசையாற் சூடிச் சுவன்மிசையசையும்பரிவட்டத்திலும் ஏத்தியநாவினும் பரந்த உவகையினும் நாடும் நகரும் அடையவெனக்கூட்டுக.

௩௦ - ௩௭. மதத்தால் தும்பிகள் தொடரும் கபோலத்தையுடைய யானைகளை வழிநின்று வாங்கிக் காலிற்றொடரையாட்டிக் கச்சணிந்த [1]புரசைக் கயிற்றால் மரங்களிற் கட்டுவார், அவற்றிற்குக் கண்டமாக முறித்த கரும்பை மடுப்பார், தார்ப்புரவிகளை வழியினீங்க வாங்குவார், திண்டேர்களை வழியினின்றுஞ்செல்ல நிறுத்துவாராக, அவைபரந்து, நின் குன்றத்தின்கீழ்நின்ற இடைநிலம் வழுதியின்பாசறைநீர்மையினையுடைத்து.

அவை கூடலினின்றும் போந்து குன்றின் மேல் ஏறுவாய் இடையே நிற்றலின் இடைநிலம்.......................பு.

௩௬. குருகு, ஆகுபெயர்.

௩௭. யாம் அவ்விடை நிலத்தை உயர்த்துக் கூறுமாறு இது.

என்றது உவமையால் உயர்க்குங்கால் அதுவும் அவன் பாசறையல்லது பிறிதில்லையென்றுநினைவிற்று.

இது என்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது.

இனி முருகவேளைப் படர்க்கையாக்கி மேல் வழுதியுடன் ஏறியோது

* "நெடியாய் நின்குன்றின் மிசை" என்பர் பின்னும்; (அடி, ௮௪.)

† கவழம் - கவளம்; "கவழக் களிப்பியன்மால யானை"—எதுகை—(திணைமா. ௪௨.)

(பி - ம்.)— [1]புரிசை.

குரங்கருந்து பண்ணியங் கொடுப்போருங்
கரும்பு கருமுகக் கணக்களிப் போருந்
தெய்வப் பிரமஞ் செய்கு வோருங்
கைவைத் [1]திமிர்புகுழல் காண்கு வோரு
மியாழி னிளிகுரல் சமங்கொள் வோரும்
வேள்வியி னழகியல் விளம்பு வோருங்
கூட நாண்குரல் கொம்மென வொலிப்ப
[2]வூழுற முரசி னொலிசெய் வோரு
மென்றா ழுறவரு மிருசுடர் நேமி
யொன்றிய சுடர்நிலை யுள்படு வோரு
மிரதி காம னிவளிவ னெனாஅ

---

விளைதங் கூறுவாராய் மலைச்சிறப்புக் கூறுகின்றார்:—

௩௮. குரங்கருந்தும் பண்டங்களை அவற்றிற்குக் கொடுப்பாரும்.

௩௯. கருமுகக்கணம் - முசுத்திரள்.

௪0. தெய்வத்தன்மையையுடைய பிரமவீணையை எழுப்புவோரும்.

௪௧. கைவைத்து ஊதிக் குழலினிசையை அளப்போரும்.

௪௨. யாழின்கண் *இளிவாய்ப்பாலையையும் குரல்வாய்ப்பாலையையும் வலியவும் மெலியவுமாகத்தாக்காது சமனாகத்தாக்கி அதனின்பத்தைக் கொள்வோரும்.

௪௩. வேள்வி - பூசை.

௪௪ - ௫. யாழினது நாண்குரல் கொம்மென ஒலித்த அளவிலே அத்தாளத்திற்கு ஏற்ப முரசினொலியை எழுப்புவோரும்.

௪௬ - எ. நாண்மீன்களையும் தாரகைகளையுமுடைய †சுடர்ச்சக்கரத்தைப் பொருந்திய ஆதித்தன் முதலாகவரும் கோட்களது நிலைமையை எழுதியவாற்றான் அறிவோரும்.

௪௮. இவள் இரதி, இவன் காமனென்று.

---

* "குரல்வா யிளிவாய்க் கேட்டனள்" (சிலப். அ : ௩௫) என்பதும் அதனுரையும் ஈண்டு ஆராய்தற்பாலன.

† சுடர்ச்சக்கரம் - துருவசக்கரம்; "உருவமுத் துடோர யம்முத் துடுத்தபல் காசு கோவை மருவவைக் காசு சூழ்ந்த மாமணி கதிராய்க் கங்குல், வெருவவிட் டிமைக்கு மார மேருவின் புறஞ்சூழ்ந் தாடுந், துருவசக் கரம்போற் கொங்கை துயல்வர விளங்கச் சூட்டி" (திருவிளை. திருமண. ௧௬௧.)

(பி - ம்.)— [1]இமிரிக்குழல். [2]ஊழுறு.

விரகியர் வினவ வினைவிறுப் போரு
மிந்திரன் பூசை யிவளக லிகையிவன்
சென்ற [1]கவுதமன் சினனுறக் கல்லுரு
வொன்றிய படியிதென் றுரைசெய் வோரு
மின்ன பலபல வெழுத்துநிலை மண்டபந்
துன்னுநர் சுட்டவுஞ் சுட்டறி வுறுத்தவு
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச்
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅன் மருகன் மாட மருங்கு
பிறந்த தமரிற் பெயர்ந்தொரு பேதை
[2] பிறங்க லிடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியு மறந்தேன் சிறந்தவ
ரேஎ யோஒ வெனவிளி யேற்பிக்க

---

சக. விரகியரென்றதனால், வினவுகின்ற மகளிர் பிரியாமைக் குறிப்பினராதலும் அவ்வினவிற்கு இறைசொல்லுவார் கணவராதலும் பெற்றாம்.

ரு௦ - ருஉ. இப் *பூசை இந்திரன்; அவ்விடத்திற் சென்ற கௌதமனிவன்; இவன் †சினன்மிகுதலால் இவள் கல்லுருவெய்தியவாறு இதுவென்று ‡ கொண்டோற் பிழைத்த தண்டங் கூறுவாருமாய்.

ருங - எ. [3] தேரப்படும் பரங்குன்றத்து மான்மருகனது மாடத்தின் பக்கம், சென்றவர்கையாற் சுட்டிக் கேட்கவும் கேட்டவற்றை அறிவிக்கவும் இத்தன்மைய பலபல §சித்திரம் நிற்றலையுடைய மண்டபங்களைச் செவ்விய மூங்கில்களையும் விரிந்த பாறைகளையுமுடைய அகன்ற இடத்துச் செய்தலாற் சோபனமான நிலைமையினையுடைத்து.

ருஅ - கூக. ஒரு பேதைப்பருவத்தாள் பிறத்தலானாகிய தன் தமரினீங்கிக் காண்டல் விருப்பினாற் பிறங்கின கற்களின் இடையிடைப்புக்குத்

---

* பூசை - பூனை; "பூசையாய்ப் போகலுற்றான்" (கம்ப. அகலிகை. எ.)

† சினம் 'சினன்' என்றும் நூல்களில் வழங்கும்; "சினனே காமங் கழிகண் ணோட்டம்" (பதிற். உஉ.)

‡ "கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சி" (மணி. கஅ : ரு.)

§ சித்திரம் நிற்றலையுடையமண்டபம், சித்திரசாலை; "எழுதெழிலம் பலம்" (பரி. கஅ - உஅ); "வித்தக வினைஞர் பத்தியிற் குயிற்றிய, சித்திர சாலை" (பெருங்கதை, மகத. ச : கச-ரு.)

(பி - ம்.)— [1]கௌமதன். [2]பிறக்கல். [3]தொழப்படும்.

வேள யோலவென் றேலா வவ்விளி
யவ்விசை முழையேற் றழைப்ப வழைத்துழிச்
செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை
மீட்சியுங் கூஉக்கூஉ மேவு மடமைத்தே
வாழ்த்துவப்பான் குன்றின் வகை
[1] நணிநுணி நயவரு சாய்ப்பி னறிணர்ச்
சினைபோழ் பல்லவந் தீஞ்சுனை யுதிர்ப்ப
வுதிர்த்த சுனையி னெடுத்த தலைய
வலர்முகி ழுற வவைகிடப்பக்
தெரிமலர் [2]நனையுறுவ
* வைந்தலை யவிர்பொறி [3]யரவ மூத்த
மைந்த [4]னருகொன்று மற்றிளம் பார்ப்பெனு
[5] வாங்கிள மகளிர் மருளப் பாங்கர்
பசும்பிடி யிளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல்

---

திகைத்து, சிறந்தவரேயெனவும் சிறந்தவரோவெனவும் அவரை விளியேற்பிக்க, ஆண்டை முழைகள் அவ்விளியை ஏலாவாய் அவ்விசைதன்னையே ஏற்றுத் தாமும் அழைப்ப அதனை அறியாது அவரும் தன்னை அழைக்கின்றாராகக்கருதி அவ்வழைத்தவிடத்துச் செல்கின்ற அவள் ஆண்டுத் தமரைக்காணாது மீளுமிடத்தும் கூவுதலைக் கூவுதலை மேவாநின்றாள்; அதனால் அப்பாரது வாழ்த்தினையுவப்பானது குன்றின் இடவேறுபாடு சிறார்க்கு மடமை செய்தலை யுடைத்து.

இனி அவனை எதிர்முகமாக்கிக் கூறுகின்றார்:—

சுஎ – எச. மிக நயக்கப்படும் நுணிசாய்ப்பினையுடைய சினையைப் போழ்ந்து புறப்பட்ட பல்லவங்களைத் தாம் விளையாட்டு வகையால் இனிய சுனைக்கண்ணே உதிர்ப்ப, அவை அவ்வுதிர்த்த சுனையின்கண் எடுத்த தலையவாய் அலரையும் முகையையும் உறக்கிடப்ப, அவற்றுள் அலரையுறக் கிடந்ததனை இது விரிதரும் ஐந்தலையினையும் அவிர் பொறியினையுமுடைய அரவென்றும் அதனருகு முதிர்ந்த முகிழையுறக்கிடந்ததனை அருகி

---

* ஐந்தலையரவு – ஐவாயரவம்; "ஐவாயரவினிடைப்பட்டுநைவாரா" (கலி. சுஉ); "ஐவாய நாகம்" (திணைமா. கரு); "உடம்பா றிரண்டிற் குயிரொன்றெனவொன்றியைவாய், விடம்பா யரவம் விழுங்குமிரை யொத்து" (திருவிளை. பன்றிக்குட்டிகளை. கரு.)

(பி – ம்.)— [1]நளிதுனி. [2]களையுறழ. [3]அரவினது மூத்த. [4]அருகிலொன்று. [5]மைந்துறுமகளிர்.

மணிக்கலங்களிற் பலசுவைதோன்றும்படி பலவிதத்தமைத்த வமிர்தத்தை வானவர்முன்னேபரப்பிச் சொல்லிலடங்காதவின்பத்தோ டப்பெருமையோராகிய மரியுஞ்சூசையு மாண்டவனைவாழ்த்தியுண்டா ரென்க.

25. சால்வருந்தயையுணர்ந் தினிதுணும்பொழுதருந்தகுதிவா
கால்வருங்கவரியுங் கமழ்வரும்புகையையுங்கனியவாரி [னோர்
நால்வருங்கலநரம் பிசைநயந்தெழுநருநளினவாயாற்
பால்வருஞ்சுவைவரும் பலநரம்பிசையொடும்பாடினரே.

உரை — மரியுஞ்சூசையுமங்ஙனந் தமக்குநாதன்காட்டிய விருந்ததயையுணர்ந் தினிதாயுண்ணும்பொழுதே யாசாரத்தோடு நின்றசிலவானவர் வெண்சாமரைவீசவுஞ் சிலர் வாசப்புகைகளைக்காட்டவுஞ் சிலர் நால்வகைவீணைகளைத்தரித்து நரம்பின்வழி யேழிசைகள் கடைபிடித்திசைந்துவந்தெழுப்பவுஞ் சிலர் வாசதாமரைவாயினாற் பாலோடொத்த வினியமிடற்றினோசை வீணையோடிசைபடவேற்றிப்பாடாநின்றாரென்க.

## V. வேறு.

26. தன்றோலுரித்தபாம்பொத்த தவத்தின்வாளாற்பொறியைக்
கொன்றோனுளம்பற்றிருள்புக்காக் குன்றாச்சீலவிளக்கேற்றி [துங்
நின்றோன்வருங்கால்கடந்துரைக்கு நிறைசொல்வல்லோன்பாப்பு
கழும்
வென்றோனெலீயமாமுனிவன் விருந்துண்டுவந்தவனமிதுவே.

உரை.—தன்றோலைப் பாம்புரித்தாற்போல வாசையெல்லாங்கழற்றி விடுதற்குக் காரணமாகிய வருந்தவத்தை வாளாகக்கொண்டு பஞ்சேந்திரியங்களைக்கொன்றவனு யாசைபுகைந்து செய்யுமிருளுட்புகாதபடி யவியாதசீலமென்னும் விளக்குள்ளேற்றிநின்றவனும் வருங்காலத்தைக்காட்சியாற்கடந்து வரும்பொருளைச்சொல்லிக்காட்டுந் தப்பாத நிறைசொல் லுடையவனும்ப் பாவலர்சொல்லும்புகழைவென்று மேனின்றவனு யெலீயமாமுனியென்போன் தானும்விருந்துண்டு மகிழ்ந்தவனமிதுதானென்றாரென்க.

27. கான்வாழ்சுவைத்தேன்றுளிநக்கிக் கதிவாழ்மாறுவாழ்வொ
ழிந்து
வான்வாழிறையோன்றனைமறுத்து வசைப்பற்றேவர்தொழக்கண்
தேன்வாழ்காவுமன்னுயிருந் தேம்பிவாடமுவ்வருடந் [டு
தான்வாழுறைகொள்முகின்முகமுந் தகைத்தசாபமாமுனியே.

உரை.—சொன்னவெலீயமாமுனி யெத்தன்மைத்தானென்று வானோர்காட்டத்தொடங்கினாராகையால் அம்முனியிருந்தநாட்டி லெல்லாருங்

[1] நினையானைச் சென்னி நிறங்குங்கு மத்தாற்
புனையாப்பூ [2]நீரூட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவழப் பூங்காம்பிற் பொற்குடை யேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியுட்
பன்மண மன்னு பின்னிருங் கூந்தலர்
*கன்னிமை கனிந்த காலத் தார்நின்
கொடியேற்று வாரணங் கொள்கவழ மிச்சின்
மறுவற்ற மைந்தர்தோ ளெய்தார் மணந்தார்
முறுவற் றலையளி யெய்தார்நின் குன்றங்
குறுகிச் சிறப்புணாக் கால்
குறப்பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துச்
சிறப்புணாக் [3]கேட்டி செவி

---

போல இடையிட்டும் தூக்கிக்கட்டின மாலைகள் போல நெருங்கியும் பூத்தலால், [4]மயங்கு அலர், நின்குன்றின் மிசை †வரைமலையெங்கும் விடியற் காலத்துப் பலநிறத்து மேகமார்ந்த வானம்போலப் பொலியும்.

பூத்தலாலென்பது வருவிக்கப்பட்டது.

மலர் பொலியுமென்க.

அரு - கூச. நின்குன்றத்தைக் குறுகி நின்கொடியை ஏற்றப்படும் நின் யானையின் கும்பத்தினிறத்தைக் குங்குமத்தால் அலங்கரித்துப் பூவொடு கூடிய நீரை இனிதாக ஊட்டிச் செவிக் கவரிகளைச் சார்த்திப் பொலிந்த பவளத்தாற் செய்த நல்லகாம்பினையுடைய பொற்குடையை மேலெடுத்து உவகையுள்ளத்தான் வந்து செய்யும் பூசைக்கண் அவ்வியானை கவழங்கொள் மிச்சிலைச் சிறப்போடு உண்ணுதொழியிற் பலமணமும் நிலைபெற்ற பின்னிருங்கூந்தலையுடைய மகளிர் தம் காதலர் முறுவலொடு கூடிய தலையளியை எய்தார்; கன்னிமைகனிந்த காலத்தார் குறைவற்றமைந்த மைந்தர் தோளைக் கூடார்.

இவ்வாறு மலைச்சிறப்புக் கூறி, மேல் வாழ்த்துவான் முகம்புகுகின்றார்:—

கூரு - கூ. குறப்பெண்ணாகிய வள்ளியை மணந்தோய்! எம்வாழ்த்தினை நின்செவிக்குச் சிறப்புணவாகக் கேட்டல்வேண்டும்.

அன்புடைமையின்............னம் எய்தினை யன்றே? அதுபோல அருளுடைமையான் ஒவ்வாவாழ்த்தும் கேட்டல் வேண்டும், எ - று.

---

* "கன்னிமை கனிந்து முற்றி" (சீவக. கஉகூ0.)

† வரைமலை - மலைக்குவடு.

(பி - ம்.)— [1]நினையானை. [2]நீரினிதூட்டி. [3]கொட்டிசெவி. [4]மயக்கலர்.

*உடையு மொலியலுஞ் செய்யைமற் றாங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளு
முருவு முருவத்தீ யொத்தி முகனும்
விரிகதிர் முற்றா விரிசுட ரொத்தி
யெவ்வத்தொவ்வா மாமுத றடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவே லழுத்தி
யவ்வரை யுடைத்தோய்நீ யிவ்வரை மருங்கிற்
† கடம்பம ரணிநிலை பகர்ந்தே
முடங்கம ராயமொ டேத்தினந் தொழுதே.

**கடவுள்வாழ்த்து.**
**நப்பண்ணனார் பாட்டு.**
**மருத்துவனல்லச்சுதனாரிசை.**
**பண் காந்தாரம்.**

---

௯௭. ஒலியல் - கடம்பமாலை.
செய்யையென உடையதுதொழில் உடையான்மேனின்றது.
௯௮. அவையொழிய நின்வேலும் அவ்வாறே பவழக்கொடிநிறத்தைக் கொள்ளும்.
குருதி தோய்ந்துழியல்லது அந்நிறம் இயல்பன்மையிற் கொள்ளுமென்றார்.
௯௯. நிறனும் எரிகின்ற தீயை ஒப்பை.
பண்பின்றொழில் பொருண்மேனின்றது.
௯௯ - ௧௦௦. முகனும் இளைய ஆதித்த மண்டலத்தை ஒப்பை.
சினைவினை முதல்மேனின்றது.
௧௦௧. உலகிற்கு எவ்வஞ்செய்தலான் நீதியிற்றப்பிய சூர்மா.
௧௦௨. பகைமை பொருந்திய குருகுபெயர்க்குன்றத்து.
௧௦௩ - ௫. உடன் மேவிய சுற்றத்தோடு ஏத்திப் பரங்குன்றத்துக் கடம்பின்கண் அமர்ந்த நல்ல நிலையை வாழ்த்தினேம்; எம் வாழ்த்து இது.
'எம்வாழ்த்து இது' என்பது சொல்லெச்சமாயிற்று. (௧௧)

---

* "குன்றி யேய்க்கு முடுக்கை...சேவலங்கொடியோன்" (குறுந். கடவுள்); "செய்யன் சிவந்த வாடையன்" (முருகு. ௨௦௬.)

† திருப்பரங்குன்றத்தில் முருகக்கடவுள் கடம்பமரத்தினிடத்தே எழுந்தருளியிருந்தாரென்று இப்பாடல் ௩ - ஆம் அடியாலும் இதனாலும் தெரிகின்றது; இவ்வுண்மை, "கடம்பமர் மன்றற் றொங்கற் கந்தனைச் சிந்தை செய்வாம்" (திருவால. கடவுள். ௧௮) என்பதனாலும், "கடம்பமர்நெடுவேள்" (பெரும்பாண். ௭௫) என்பதனாலும் விளங்கும்; பத். பக். ௧௫ - பார்க்க.

## இருபதாம் பாடல்.

### வையை.

*கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்
துடலே றுருமின மார்ப்ப மலைமாலை
முற்றுபு முற்றுபு பெய்துசூன் முதிர்முகில்
பொருதிகல் புலிபோழ்ந்த பூநுத லெழிலியானைக்
குருதிக்கோட் டழிகறை தெளிபெறக் கழீஇயின்று
காலைக் கடல்படிந்து காய்கதிரோன் போயவழி
மாலை மலைமணந்து மண்டுயின்ற கங்குலான்
வானாற்று மழைதலைஇ மரனாற்று மலர்நாற்றந்
தேனாற்று மலர்நாற்றஞ் செறுவெயி [1]லுறுகால
கானாற்றுங் கார்நாற்றங் கொம்புதிர்த்த கனிநாற்றந்
தானாற்றங் கலந்துடன் றழீஇவந்து தரூஉம் வையை

---

(இருபதாம்பாடலுரை.)

௧-௫. சூல் முதிர்ந்தமுகில் மலையொழுங்கைச் சூழ்ந்து சூழ்ந்து அதன்கல் துணிபட எறிந்து உடலாநின்ற உருமேற்றினம் ஆர்ப்பப் பெய்து கடலைக் †குறைபடுத்த நீராலே தன்னொடு பொருது மாறுபடும் புலியைப் போழ்ந்த புகர்நுதல் யானையது குருதிக்கோட்டின்கணின்று இகப்பரிய கறையைத் தெளிவு பெறக் கழுவிற்று.

மழைத்துளிகளது விசைகூறுவார் கறைகழுவிற்றென்றார்.

௬-௧௧. காலைப் பொழுதின்கட் கடலை முகந்து மாலைப் பொழுதின்கண் ‡வெய்யோன் போயதிசைக்கண் மலையைச்சேர்ந்து கங்குற்கண் மேகந் தரும்மழை பெய்தலான் வையை மரங்கள்தரும் மலர்நாற்றமும் தேன் தந்த மலர் நாற்றமும் செறுவெயிலையும் மிக்க காற்றையுமுடையவாகிய

---

* குறைத்தலென்பது முகத்தலென்னும் பொருளில் வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (திருக்குறள், ௧௭ - பரி.)

† குறைபடுத்தல் - முகத்தல்; இச்சொல்லுக்கு இப்பொருளே இங்குச் சிறந்ததென்பதை, "கொளக்குறைபடாமையின் முந்நீரனையை" (பதிற். ௯௦) என்பதும், "மழை கொளக் குறையாது புனல்புக மிகாது, கரைபொரு திரங்கு முந்நீர்" (மதுரை. ௪௨௪-௫) என்பதும் வலியுறுத்தும்.

‡ பரிபாடல், ௧௨: ௧-௨.

(பி - ம்.)—1 உறுகாலைக்.

தன்னுற்ற மீது தடம்பொழி ருன்யாற்று
1வெங்காற்று வேசனை நாற்றங் *குதுகுதுப்ப
வூரூர் பறையொலி கொண்டன் றுயர்மதிலி
2னீரூ ரரவத்தாற் றுயிலுணர் பெழீஇத்
திண்டேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப் பாண்டியிற் றிண்டே ரூரவும்
வயமாப் 3பண்ணுந மதமாப் பண்ணவுங்
கயமாப் பேணிக் கலவா தூரவு

காடுகள் தரும் †வெங்கார் நாற்றமும் மரக்கோடுகளுதிர்த்த கனிகளது நாற்றமுமாகிய இந்நாற்றங்களை உடன்கலந்து தான் கொண்டுவந்து பிறர்க்குக் கொடாநின்றது.

கஉ - கூ. கனையில் தடம்பொழிருன் தன் நாற்றத்தின் மேலே யாற்றினது வெம்மையால் தோற்றுதலையுடைய வேசனை நாற்றத்தை ஆசைப்படாநிற்ப ஊர்தொறுமூர்தொறும் ‡பறை ஒலித்தல்கொண்டது; அப்பொழுது; மதிலிற் §சுருங்கையில நீரோடுகின்ற அரவத்தால் துயிலுணர்ந்தெழுந்து தேரேறுவார் திண்டேர்ப்புரவியைப் பள்ளியோடவையத்திற் பூட்டி அதன்கண் ஏறவும் வங்கமேறுவார் வங்கப் ||பாண்டிகளைப்பூட்டித் தேரையூரவும் குதிரைகளைப் பண்ணும் கலனை முதலாயினவற்றால் யானைகளைப் பண்ணவும் சிலர் மறப்பால் யானைகளை அலங்காரமடையாது நடத்தவும்,

* குதுகுதுப்ப - ஆசைப்பட; "தேவர்களுங் குதுகுதுப்ப" (காஞ்சி. நகரேற்று. கசரு.)

† "மாரி நீரைச் சுமந்து,...வெங்கார் மண்ணிலே சொரிய நிமிர்ந்த ஆவிபோல நாறும்மேனி முதலியவற்றையுடைய இலக்கணை" (சீவக. உருoரு ந. உரை) என்பதனால், வெங்கார்நாற்றம் இன்னதென்பதை அறிந்துகொள்க.

‡ "துன்று மிரவிற் பறையறையுஞ் சும்மை கேட்டு" (திருவால. ௩0 : ரு), "எங்கணும் பறை யறைந் தழைத்து" (திருவிளை. சுக: ௩.)

§ "சுருங்கை - கரந்துறை; ஒழுகுநீர்புகுகை ஒருத்தருமறியாதபடி மறைத்துப்படுத்த வீதி வாய்த்தலை" (சிலப். கச: சுரு) என்பர், அரும்பதவுரையாசிரியர்.

|| பாண்டி - எருது; பாண்டிலெனவும் வழங்கும்

(பி - ம்.)—1 வெங்காற்ற, 2நீரூரவாற. 3பண்ணுநர்.

*மகளிர் கோதை மைந்தர் புனையவு
மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்
முந்துறல் விருப்பொடு முறைமறந் தணிந்தவ
ராடுவார் பொய்த லணிவண் டிமிர்மணற்
கோடே றெருத்தத் திரும்புன லிற்குறுகி
† மாட மறுகின் மருவி மறுகுறக்
கூடல் விழையுந் தகைத்துத் தகைவையை
‡ புகைவகை தைஇயினார் பூங்கோதை நல்லார்
தகைவகை தைஇயினார் தார்
வகைவகை தைஇயினார் மாலை மிகமிகச்
§சூட்டுங் கண்ணியு மோட்டு வலையமு
மியலணி யணிநிற்ப வேறி யமர்பரப்பி
னயலய லணிநோக்கி யாங்காங்கு வருபவ
ரிடுவளை யாரமோ டித்தா னுடனாகக்
கெடுவளை பூண்டவண் மேனியிற் கண்டு
நொந்தவண் மாற்றா ளிவளென நோக்கத்
தந்த கள்வன் சமழ்ப்புமுகங் காண்மின்

உஉ - சு. தாந்தாம் முற்படுதல் விருப்பினால் அணியுமுறைமையை மறந்து மாறியணிந்தவரெல்லாம் விளையாடும் பருவத்து மகளிருடைய சிற்றிலணிந்த வண்டொலிக்கு மணற்கரையது உயர்ந்த எருத்தத்தை வந்து பொருந்தின பெரும்புனலைச் சென்று குறுகவும் ஏனை அணியாதவர் இல்லினின்றும் புறப்பட்டு மாடமறுகினைப் பொருந்திச் செல்லுதற்கு வருந்தாநிற்கவும் இவ்வாற்றாற் கூடலிலுள்ளார் விழையுந்தகைமையையுடைத்து.

உஎ - ௩சு. பூங்கோதைகளைப் புகைத்தவகையாலணிந்தாரும் தாரைத் தகைந்தவகையாலணிந்தாரும் மாலைகளை வகைவகையாலணிந்தாரும் சூட்டும் கண்ணியும் வலையமுமாகிய இவற்றான் மிகமிக இயன்ற அணிகளையுடைய திரளும் வந்தேறி அக் கரைப்பரப்பின்கண்ணே நிற்ப அயலார் அயலாரணிந்த அணிகளைப் பார்த்து அவ்வவ்விடங்களின் வருவார் தம்தலைவி பூணும் வளையையும் 'ஆரத்தையும் பரத்தைக்கு ஈத்ததலைவன் அத்தலைவி

* (பரி. சு: சசு - ருக உரை); "மைந்தர் கண்ணி மகளிர் சூடவு, மகளிர் கோதை மைந்தர் மலையவும்" (பட். க௦கூ - க௦.);

† "மாடமதுரையுந் தருகுவன்" (புறநா. ௩உ), "மாடமலி மறுகிற் கூடற் குடவயின்" (முருகு. எக), "மாடக் கூடல்" (திருமுகப்பாசுரம்), "மாட மறுகின் மழை" (பு - வெ. பாடாண். சக.)

‡ பரிபாடல். கூ: உஎ - அ.

§ "சூட்டொடு கண்ணி யன்றே" (சீவக. சஅச.)

செருச்செய்த வாளி சீற்றத் தவையன்ன
நேரித ழுண்கணார் நிறைகா டாக
வோடி யொளித்தொய்யப் போவா ணிலைகாண்மின்
எனவாங்கு
ஒய்யப்போ வாளை யுறழ்ந்தோளிவ் வாணுதல்
*வையை மடுத்தாற் கடலெனத் தெய்ய
நெறிமண னேடினர் செல்லச் [1]சொல் லேற்று
செறிநிரைப்பெண் வல்லுறழ் பியாது தொடர்பென்ன
மறலினாண் மாற்றாண்மகள்
வாய்வாளா நின்றாள்
செறிநகை சித்தந் திகைத்து
ஆயத் தொருத்தி யவளை யமர்காம
† மாயப் பொய் கூட்டி [2]மயக்கும் விலைக்கணிகை

யோடு உடனுயிருக்கக் கெட்டவளையைப் பரத்தை கையின்கட்கண்டு அதற்கு நொந்து அவட்கு இவள் மாற்றாளென்று ஆயத்தார் தம்முட் கருதிப் பார்க்க அப்பார்வையைக்கண்டு அவற்றை அவட்குக் கொடுத்த அக்கள் வனது.........மின்.

௩எ - ௯. சீற்றத்தவையாய்ச் செருச்செய்த வாளிகளையொத்த கண்ணாரதுதிரள் மறையுங்காடாக ஓடியொளித்து அவ்வாயம் அவற்றைக்காணாமல் தப்பப்போகின்ற அப்பரத்தையது நிலையைக் காண்மின்.

௪0. எனத் தம்முட்காட்டி. ஆங்கு - அவ்விடத்து.

௪௧ - எ. வையை கடலைமடுத்தாற்போல மகளிர்திரளுக்குள்ளேபுக்கு அங்ஙனம் தப்பப்போகின்ற, பரத்தையைக்கண்டு இவ்வாணுதல் மாற்றாளென்று தெளிந்து நெறிந்தமணற்கண்ணே..............ண மிகமாறுபட்டு அவரோடு சொல்லுதலையேற்றுப் பெண்சாதி நிரைந்தநிரைக்கண்ணே நீயிர் என்னைத்தொடர்தற்குக்காரணம் யாதெனச்சொல்லி எதிர்ந்தாள்; எதிர அத்தலைவி சித்தந்திகைத்து ஒன்றும் சொல்லாது நின்றாள்.

௪௨. தெய்ய, அசை.

அவள் அங்ஙனநிற்பப் பரத்தை ......................சொல்லுவாள் :—

௪அ - ௫௪. விரும்பப்படுங் காமத்தை வஞ்சனையையுடைய பொய்யொடுங்கூட்டிக் கொள்வாரை மயக்கும் விலைத்தொழிலையுடைய கணிகாய்! நின்பெண்மையது பொதுமையால் ஒருவராற் பேணப்படுதலில்லாதாய்!

* பரிபாடல், ௧0: ௧ - அ.

† "மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி" (அகநா. ௬.).

(பி- ம்.)—1 செல்லேற்றச். 2மயக்கி.

பெண்மைப் பொதுமைப் பிணையிலி யைம்புலத்தைத்
துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த்தொட்டி
முற்றா நறுநறா மொய்புன லட்டிக்
காரிகைநீ ரேர்வயற் காமக் களிநாஞ்சின்
மூரி தவிர முடுக்கு முதுசாடி
மடமத ருண்கண் கயிறாக வைத்துத்
தடமென்றோட் டொட்டுத் தகைத்து மடவிரலா
லிட்டார்க் கியாழார்த்தும் பாணியி லெம்மிழையைத்
தொட்டார்த்து மின்பத் துறைப்பொதுவி கெட்டதைப்
பொய்தன் மகளிர்கண் காண விகுத்தந்திவ்
வையைத் தொழுவத்துத் தந்து வடித்திடித்து
மத்திகை மாலையா மோதி யவையத்துத்
தொடர்ந்தே மெருது தொழில் செய்யா தோட
விடுங்கடன் வேளாளர்க் கின்று படர்ந்தியாங்

---

ஐம்புலத்தையும் நுகர்வனவாகிய காமுக *ஏனங்கள் நுகரு.... ........ இதழ்வாயையுடைய †தொட்டி, காரிகைநீர்மையையுடைய வனப்பாகிய வயலிலே நறாவாகிய புனலைவிட்டுக் காமமாகிய களிநாஞ்சிலால் எம்மெருது தான் மூரிபோகாது உழும் பழையசாலே,

௫௪. பலகாலுழப்படுதலின் முதுசாடி யென்றார்; சாலென்னும் பெயருடைமையாற் சாடியெனப்பட்டது.

௫௫-௮. பொருளிட்டாரைப் போகாமற்றடுத்து.......................க கண்ணைக் கயிறாக்கொண்டு தோளாகிய தறியொடு பிணித்துக் ‡காமமிகுதற்பொருட்டு அவர்க்கு யாழிசையை ஆர்த்துமளவில் அதனையேயன்றி எம்மிழையைப்பூண்டு வளையைத்தொட்டு பின்னழகையும் ஆர்த்துமின்பத்தில துறைபோலப் பொதுவாயுள்ளாய்.

ஆர்த்தும்பொதுவியென்க.

௫௮-௬௩. முன்னே கெட்ட எம் எருத்தை யாம் தேடித்திரிந்து இவ்விளையாட்டுமகளிர்கண்காண வணக்கி இவ்வையையாகிய தொழுவத்துப்புகுதவிட்டுச் செவ்விதாக வடித்து உரப்பி மாலை மத்திகையாகப்

---

* ஏனங்கள் - பன்றிகள்.

† தொட்டி - பத்தர்; "பன்றிக்கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்றால்" (நாலடி. அறிவின்மை, எ.)

‡ "வீணைக்கிழவன் விருந்தார்கதிச் சென்றவாறும்", "வீணை வேந்துறையும்" (சீவக. உஅ; உ௫௯அ) என்பவற்றின் உரைகளைப்பார்க்க.

தன்மார்பந் தண்டாந் தருமாரத் தாண்மார்பு
நின்மார்பு மோரொத்த நீர்மையகொ லென்னுமுன்
[1]றேடினா ளேசச் சிலமகளிர் மற்றதற்
கூடினார் வையை யகத்து
சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க
மைந்துற்றாய் வெஞ்சொன் மடமயிற் சாயலை
வந்திக்க வாரென [2]மனத்தக்க நோயிது
வேற்றாரை வேற்றார் தொழுத லிளிவரவு
போற்றாய்கா ணன்னை புரையோய் புரையின்று
மாற்றாளை மாற்றாள் வரவு
அ..............சொ னல்லவை நாணுமற்
றந்து முழவின் வருவாய் [3]நீ வாய்வாளா
வெந்தையென்க் கீத்த விடுவளை யாரப்பூண்

---

புடைத்து இவ்வழக்குரைக்கும் அவையத்திலே எம்மெருதாதல் யாருமறியத் தொடர்ந்தேம்; தம்மெருதை உழுதற்றொழில் செய்யாமல் ஓடவிடுமுறைமை வேளாளர்க்கு இன்றாதலால்.

௬௪ - ௭௦. தனக்குரிய தலைவன்மார்பை நினக்குத் தண்டமாகத்தரும் ஆரத்தையுடையாள் மார்பும் அதனைக் களவுகொண்டுபூண்ட நின்மார்பும் ஒருதன்மையவாக ஒத்தநீர்மையவாய்விட்டனவோவென்று வைதுசொல்லிய அளவிலே, அவர்களால் தேடப்பட்ட அப்பரத்தை ஏன்றுகொண்டு அத்தலைவியைச் சிலவெய்யவாகச்சொல்ல, அதற்குச் சிலமுதுமகளிர்வையையகத்துவெறுத்தாராய், கற்புடைமையாற் சிந்தித்த அளவிலே பாவநீங்குந் தன்மையாளைச் செறாதொழிக; நீ வெஞ்சொற் சொல்லி அறியாமையுற்றாய்; அது நீங்க இம்மடமயிற்சாயலை வந்திக்க *வாரென்று சொல்ல.

மேல்பரத்தை:—

௭௦ - ௭௩. இது மன்னத்தக்க நோயாயிருந்ததெனத் தன்னுள்ளே சொல்லி, மேல் அம்முதுமகளிருள் ஒருத்தியை நோக்கி, அன்னாய்! பகைவரைப் பகைவர் தொழுதல் இளிவரவு; அதனை நீ அறிந்திலைகாண்; பெரியோய்! அவ்வாறே மாற்றாளை மாற்றாள் வணங்குதலும் பெருமையின்று என,

மேல் தலைவி:—

௭௪ - அ. நல்லவையாகிய மெல்லிய இனிய சொற்களை நாணுமற் பல அவைக்கண்ணுஞ் சொல்லி ஆடுதற்கு முழவுடனே வருவாய், நின்மேம்பாடு

---

* வாரென்று - வாவென்று; "வார டாவுனக் கியாது தானர்தம் மகளைக்குமோ" (வி - பாரதம். வேத்திர. ௧௨.)

(பி - ம்.)—1 தேடினார். 2மனறக்க. 3நீயவாய.

வந்த வழிநின்பான் மாயக் களவன்றேற்
்தே தருக்கு
விலைதந்தான் மாதர்நின்
ஓற்றுவான் சால
ஈிநீ யன்பனெற் கன்பன்
ர்வன் கள்விநா னல்லேன்

மறலினை மாற்றுமக்கு
நாடறிய நும்மவே

ரதே எனக்கிட்ட இடுவளையும் ஆரமுமாகிய பூண்
த்தையுடைய களவன்றாயின் நினக்கு இவை தந்த
ன்னை மேம்படு ; என,

ற் கண்ணியை யுடையாய்! நீ சால அன்பு பூண்ட
டையனுதலால் இவ்வளையும் ஆரமும் புணர்தற்கு
பன் இவையேயன்றி காளை நின்காலவாகிய ‡சிலம்
புகளையும் கழற்றுந் தன்மையான்; அதனால் யான் கள்வியல்லேன்; அவன்
கள்வன்; அவனைக் கதுவுவாயாக.

மேல், தலைமகற்கு வையை நீர் விழவு தான் கூறி, அதனுள் அணிநோக்கி வருவார் தம்முள் உவந்தவை காட்டிக் கூறியன கொண்டுகூறிய பாணன், பின்னும் ஒய்யப்போவாளை (சக) என்பது முதல் இவ்வளவும் நிகழ்ந்தவை கூறி, அவ்வளவில் பரத்தையை வெகுளியாற் சொல்லியனவும் அத்தலைவியைக் கழறியனவும் கொண்டுகூறுகின்றான் :—

அங. என வாங்கு - என்றப்பரத்தை கூறிய அவ்வளவிலே.

அச - ரு. வசிகரித்தலையுடைய மானே, மறுத்தலையொழி; நும்மை நச்சின காமுகர் நுமக்குத் தரும்பொருள்கள் நாடறிய நும்மனவே.

என்று பரத்தையைத் தணித்துப் பின் தலைவியை நோக்கி,

* ‘மாலை யணிய’ என்பது இடக்கரடக்கல்; “மாலைவாங்குநர் சாலுநங் கொடிக்கென” (சிலப். ங: கசுசு).

† அதிரல் - மோசிமல்லிகை, காட்டு மல்லிகை (சிலப். கங : கருசு - உரை); புனலி: (முல்லை. ருக), புனலிப்பூ (குறிஞ்சி. எரு. உரை )

‡ “சிலம்புள கொண்மெனா” (சிலப். கூ: எங) என்பது இங்கே கருதற்பாலது.

(பி - ம்.)— [1]பச்சியமானே.

சேக்கை யினியார்பாற் செல்வான் மனையாளாற்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா
தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றா
ரிகழினுங் கேள்வரை யேத்தி யிறைஞ்சுவார்
நிகழ்வ தறியாது நில்லுநீ நல்லாய்
மகளிரை மைந்துற் றமர்புற்ற மைந்த
ரகலங் கடிகுவே மென்பவை யார்க்கானு
முடிபொரு ளன்று முனியன் முனியல்
கடவரை நிற்குமோ காமங் கொடியியலாய்
எனவாங்கு
இன்ன துனியும் புலவியு மேற்பிக்குந்
தென்னவன் வையைச் சிறப்பு
கொடியியலார் கைபோற் குவிந்த முகை
யரவுடன் றவைபோல் விரிந்த குலை
குடைவிரிந் தவைபோலக் கோலு மலர்
சுனைகழிந்து தூங்குவன நீரின் மலர்

---

அ௬ - ௯. புணர்ச்சி இனிய பரத்தையர்பாற் சென்று அமர்வானை மனையாளாற் செல்லாமற் காத்தலும் சென்றானென்று நீக்கியொழுகலும் கூடுமோ? அவைகூடா; சால்புடைமை மிக்காராகிய கற்புடைமங்கையர் தம்மைக் கேள்வரிகழினும் தாம் அவரை ஏத்தாநிற்பர்.

௯0 - ௯௩. தாம் மயக்குற்றுப் பரத்தையரை விரும்பி அவரைச்சேர்ந்த மைந்தரகலத்தை இனித் தோயேமென்றிருத்தல் மங்கையர் யார்க்கும் முடிவுபோவதன்று; முனியற்பாலையல்லை, முனியற்பாலையல்லை.

அடுக்கு, விரைவுபற்றி வந்தது.

௯௪. காமம் தக்குழி நிற்குமோ?

௯௫. என - என்று அவ்வணிநோக்கிவருவார் சொல்ல.

௯௬. இத் தன்மையவாகிய* துனியினையும் புலவியினையும் ஏற்கப்பண்ணும்.

௯அ - ௧0எ. குவிந்த காந்தள் முகைகளும் †அரவுவெகுண்டு படம் விரிந்தவைபோல விரிந்த காந்தட்குலைகளும் அக்காந்தளாற் கோலப்படுஞ்

---

* துனி - முதிர்ந்தகலாம்; புலவி - இளையகலாம்; (திருக்குறள், க௩0௰ - பரி.)

† பெரும்பாண். ௩எக - ௩.

சினைவிரிந் துதிர்ந்தவீப் புதல்விரி போதொடு
மருவி சொரிந்த திரையிற் றுரந்து
நெடுமால் *சுருங்கை நடுவழிப் போந்து
கடுமா களிறு †அணத்துக் கைவிடுநீர் போலு
நெடுநீர் மலிபுன னீண்மாடக் கூடற்
கடிமதில் பெய்யும் பொழுது
நாம மருடலு நட்பும் தணப்புங்
காமமுங் கள்ளுங் கலந்துடன் பாராட்டத்
தாமமர் காதலரொ டாடப் புணர்வித்தல்
பூமலி வையைக் கியல்பு.

என்பது பருவவரவின்கண் தலைமகளது ஆற்றாமைகண்டு தூதுவிடச் சென்றபாணன் தலைமகற்குக் கார்ப்பருவமும் வையை நீர்விழவணியும் கூறியது.

ஆசிரியனல்லந்துவனார் பாட்டு.

நல்லச்சுதனாரிசை.

பண் காந்தாரம்.

---

சுனையினின்றுங் கழிந்து கீழ்விழும் நீரின் மலர்களும்,............ப்பூக்களுமாகிய அருவிசொரிந்தனவற்றைத் திரையால் தள்ளிக்கொண்டு நெடிய பெரிய சுருங்கை நடுவாகிய வழியைப் போந்து பெருந்தன்மை மிக்க புனலைக் கடிமதில்சொரியும்பொழுது அப்புனல் கடுமாவாகிய களிறுகள் கையை எடுத்துவிடும் நீர்போலும்.

கO௮ - கக. இவ்வாற்றால்......... ‡புணர்தலும் பிரிதலுமாகிய இக் காமத்தையும் இதற்குச்செருக்கினை விளைக்குங் கள்ளையும் உடன் விரவி மகளிர்யாவரும்பாராட்டத் தாம் விரும்பின காதலரொடு புனலாடுமாறு முன்பிரிந்தவரைக் கொண்டுவந்து கூட்டுதல் வையைக்கு இயல்பு. (உ0)

---

* "சுருங்கை வீதி மருங்கிற் போகி" (சிலப். கரு. : கூ௫.)

† அணத்து - மேல் நோக்கி.

‡ "இது புணர்ச்சி பிரிவென இருவகைப்படும்" (திருக்குறள், காமத்துப்பால், அவதாரிகை.)

# இருபத்தொன்றாம் பாடல்.

## செவ்வேள்.

ஊர்ந்ததை, எரிபுரை யோடை யிடையிமைக்குஞ் சென்னிப்
பொருசமங் கடந்த புகழ்சால் வேழம்
தொட்டதை, தைப்பமை சருமத்திற் றாளியை தாமரை
துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய
வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த
வரிமலி யரவுரி வள்புகண் டன்ன
புரிமென் பீலிப் போழ்புனை யடையல்
கையதை, *கொள்ளாத் தெவ்வர்கொண் மாமுத றடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்புடை திறந்தவேல்
பூண்டதை, சுருளுடை †வள்ளி யிடையிடு பிழைத்த
‡வுருளிணர்க் கடம்பி னொன்றுபடு கமழ்தார்
அமர்ந்ததை, புரையோர் நாவிற் புகழ்நல முற்றி
நிரையே ழடுக்கிய நீளிலைப் பாலை

---

(இருபத்தோன்றாம் பாடலுரை.)

க - உ. விளக்கத்தால் எரியையொத்த ஓடைநடுவேகிடந்து விளங்குஞ் சென்னியை யுடைத்தாயவேழம்.

ரு - எ. தொட்டது, தாமரைத்தாளிற்கு இயைந்த பவழம்போலும் துவர்நீர்த்துறையிலே மறைய அழுத்திய சருமத்தால் தைத்தலமைந்த முதுகிற்றோலுடனே அதன் முழுமயிர் மிடைந்த பாம்புத் தோலைக் கீறின வாரையொத்த பீலிப்போழாற் புனைந்த அடையற் செருப்பு.

தாளியை தைப்பமை யென்பனவும் அடையலென்பதனோடு இயையும்.

அ. நின்னை மதியாத அவுணர் தமக்குத் துணையாகமதித்த மா.

கூ. புள் - அன்றில். புடை - பக்கம்.

க0 - கக. சுருளுதலையுடைய. இடையிட்டுத்தொடுத்த கடம்பம் பூவினையுடைய ஒன்றுபட்டு அலர்ந்த தார்.

கங. § ஏழு நிரையாக அடுக்கிய நீண்ட இலையையுடைய பாலை;

என்றது, ஏழிலைப்பாலையை.

---

* கொள்ளல் - மதித்தல். †பரிபாடல், கச: உஉ. ‡பரிபாடல், ரு: அக.

§ மதநாற்றத்திற்கு உவமை கூறப்படும் பூக்களையுடைய ஏழிலைப்பாலையும் இலகடமும் சூழியும் கூறப்பெற்றமையின், பரங்குன்றம் யானையாக உருவகஞ் செய்யப்பெற்றமை புலனாகின்றது.

யரைவரை மேகலை யணிநீர்ச் சூழித்
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம்
*குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வநிற் றொழுது
சுடுபொன் ஞெகிழத்து முத்தரிசென் றார்ப்பத்
† துடியி னடிபெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி
‡ யடுநறா மகிழ்தட்ப வாடுவா டகைமையி
1 னனையிலங் கெஃகெனச் சிவந்த நோக்கமொடு
துணையணை கேள்வனைத் துனிப்பவ ணிலையு
§ நிழல்காண் மண்டில நோக்கி
யழல்புனை யவிரிழை திருத்துவாள் குறிப்பும்

---

கச - ரு. அதனையுடைய அரைமலையாகிய (?) இலகடத்தினையும் அருவியாகிய படாத்தினையுமுடைத்தாய்த் தரையின்கணின்று விசும்பையுற ஓங்கிய பரங்குன்றம்.

கசு. இக்குன்றத்து அடியின்கணுறைதல் மறுபிறப்பினுமியைகவென,

கஎ. வென்றியாற் கொடியை அலங்கரித்த செல்வ!

கஅ. ஓடவைத்த பொன்னாற் செய்த ||சிலம்பில் முத்தாகிய அரி எங்குங்கேட்க ஆர்ப்ப.

ககூ. அடியினைத் துடியொலிக்கு இயைய.

உ0. அடுநறவுண்ட மகிழ்ச்சி தடுப்ப ஆடுவாள் அழகுகாரணமாக

உக. துனித்தலாவது, ¶இவளழகு எமக்குங்கூட வியப்பாயிற்று, இனி இவற்குச் சொல்லவேண்டுமோவென உட்கொண்டு கேள்வன் துணையாய் அமராநிற்கவும் அவனை வெகுளிமிக்க நோக்கமொடு துனித்தல்.

உங - ச. இவளினும் எனக்கு அழகுண்டாயவழி இவனை நோக்காளென்று கருதிக் கண்ணாடியை நோக்கி அழல்போல் அவிராநின்ற இழை.

---

* பரிபாடல், கரு: கூரு - சு.

† இப்பாடலின் அடி: சு0 -சுக; பு - வெ. கரந்தை. அ - பார்க்க.

‡ திருக்குறள், க0கூ0.

§ நிழல்காண்மண்டிலம் - கண்ணாடி; (அகநா. எக.)

|| "யாமுடைச்சிலம்பு முத்துடையரியே" (சிலப். உ0: சுக.)

¶ சீவக. ருஅஎ, உசசஎ; கம்ப. சூர்ப்பநகை. சு0.

(பி - ம்.)— 1நனையிலங்கெஃகின்.

பொதிர்த்த முலையிடைப் பூசிச் சந்தன
முதிர்த்துப் பின்னுற வூட்டுவாள் விருப்பும்
பல்வூ ழிவையிவை நினைப்பின் வல்லோ
னோவத் தெழுதெழில் போலு மாதடிந்
திட்டோய்நின் குன்றின் மிசை
மிசைபடு *சாந்தாற்றி போல வெழிலி
[1] யிசைபடு பக்க மிருபாலுங் கோலி
விடுபொறி †மஞ்ஞை பெயர்புட னாட
விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப
முரல்குரற் றும்பி யவிழ்மல ரூத
யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்

உரு - சுஃ. பொங்கின முலையிடத்தே சந்தனத்தைப் பூசியுதிர்த்து, நாற்றம் நிலைபெற்றவழி என்னைத் தழுவுமென்று கருதி அதனைப் பின்னும் பின்னும் ஊட்டுவாள்.

உஎ. மற்றும் இத்தன்மைய இத்தன்மைய பலமுறை நிகழ்கின்ற மகளிர் தொழில்களை நினைப்பின், கைவல்லானெழுதிய ஓவியத்து அழகு போலும்;

என்றார், அவ்வொரு தொழிற்கண்ணே நிற்றலான்.

௩0 - ௩உ. மேல் எடுத்துக் கட்டப்பட்ட சாந்தாற்றிபோல எழிலி யிசையொலிக்கின்ற இடத்து இரண்டிறகையும்விரித்து விளங்கும் பொறி யையுடைய மயில்கள் எழுந்தாட,

௩௩. விரல் செறிந்துவிடுகின்ற வங்கியத்தின் துளைக்கு இசைய.

௩ரு. யாழினது இசையை மேன்மேலு.........................

* "நீல ஆலவட்டம் விரித்தாற்போலத் தன்கோலக் கலாவம் கொள விரித்து... இளமயிலாடுவது" (இறை. சூ - உ. உரை). "நீலவாலவட்டத்தி னிறங்கொளக், கோலும் பீலிய கோடுயர் குன்றின்மே, லாலு மாமழை நீண் முகி லார்த்தொறு, மாலு மாமயி லாலுமோர் பாலெலாம்" (சூளாமணி, நாடு. கரு.)

† "பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை, தோடமை முழவின் றுதைகுர லாகக்,...குரற் றூம்பொடு, மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக, வினைப விமிழிசை கேட்டுக் கலிசிறந்து, ...கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்" (அகநா. அஉ.)

(பி - ம்.)— 1இசைபக்கலிருபாலும்.

பாணி †முழவிசை யருவிநீர் ததும்ப
வொருங்கு பரந்தவை யெல்லா மொலிக்கு
மிரங்கு முரசினான் குன்று
தாழ்நீ ரிமிழ்சுனை நாப்பட் குளித்தவண்
மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை
1வேய்நீ ரழுந்துதன் கையின் விடுகெனப்
2பூநீர்பெய் வட்ட மெறியப் புனைபெறு
தருநிலை நீரி னவடுயர் கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் 3கொய்பூம் புனல்வீழ்ந்து
தழுவுந் தகைவகைத்துத் தண்பரங் குன்று
வண்டார் பிறங்கன் மைந்தர் நீவிய
தண்கமழ் சாந்தந் 4தைஇய வளியுங்
கயல்புரை கண்ணியர் கமழ்துக ளுதிர்த்த
புயல்புரை கதுப்பக முளரிய வளியு
முருளிணர்க் கடம்பி *னெடுவேட் கெடுத்த

---

௩௬. † பாணியென்னுந் தாளத்தையுடைய முழவிசைபோல.

௩௭. இவ்வாற்றால் தம்முள் வேறுபட்டன பலவும் ஒருங்கொலிக்கும்.

௩௯ - ௪௫. நீரொலிக்கின்ற ஆழ்ந்த சுனைநடுவே மூழ்கி அவ்விடத்து நீர்மேலெழுந்த விறலிழை கரையினிற்கின்ற கேள்வனைப் புனையாகிய வேயை நீரில் அழுந்துகின்ற தன்கையின்கட் டருகவென அவன் அதனைக்கொடாது அரக்குநீர்கரந்த வட்டை எறிதலாற் புனைபெறாது அவள் அருநிலையானை நீரிற் படுகின்ற துயரத்தைக்கண்டு கொழுநன் இன்புற்றுப் பின் அந்நீரின் கண் வீழ்ந்து தழுவும் தன்மையினையுடைத்து.

௪௬. பிறங்கற்கண்.

௪௬ - ௭. சந்தனத்தைத் தடவிப் புலர்த்துங் காற்றும்.

௪௮ - ௯. கமழ்தாதுதிர்த்த கதுப்பகத்தை ஊடுபுக்கு அசைத்த காற்றும்.

௫௦ - ௫௧. கடம்பின்கண்மேவிய நினக்குப் பூசைக்கட்காட்டும் பாத்திரத்தெடுத்த கமழ்புகையூடு நுழைந்த காற்றும்.

௫௦. நெடுவேள், முன்னிலைப்பெயர்.

---

* பரிபாடல், ௧௪: ௨௦.

† பாணி - ஒரு தாளத்தின் முதல் எடுக்குங் காலத்தைத் தன்னிடத்தேயுடையது; (கலி, ௧௯, ந.)

(பி - ம்) — 1வேய்நீர்த் தன்கையிற் புனையவை விடுகென. 2பூநீர் செய். 3கொய்பூநீரமபுனல வீழ்ந்து. 4தைஇய வளிவளியும்.

முருகு கமழ்புகை நுழைந்த வளியு
*மசும்பு மருவி யருவிடர்ப் பரந்த
பசும்பூட் சேஎய்நின் குன்றநன் குடைத்து
கண்ணொளிர் திகழட ரிடுசுடர் படர்கொடி மின்னுப்போ
லொண்ணகை தகைவகை நெறிபெற விடையிடை யிழைத்தி
செண்ணிகைக் கோதை கதுப்போ டியல யாத்த
மணிமரு டேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழ் பைந்துகி ஞெக்கஞ் சிவப்பூரப்
பூங்கொடி போல நுடங்குவா ளாங்குத்தன்
சீர்தகு கேள்வ னுருட்டுந் துடிச்சீராற்
கோடணிந்த முத்தார மொல்க வொசிபவளே
ராடை யசைய வணியசையத் தானசையும்
வாடை யுளர்கொம்பர் போன்ம்

---

௫௨ - ௩. இடையறுதொழுகும் அருவி அரிய வீடரின்கண்ணே பரந்த நின்குன்றம் உடைத்து.

௪௭ - ௫௩. பலவகை நறுநாற்றமுடைமை கூறினவாறு.

௫௪ - ௬. இடுசுடர் பரந்த கொடிமின்னுப்போற் கண்ணிற்கு ஒளிர்ந்த திகழாநின்ற அடராலே ஒண்..............அழகும் நெறிப்பும் இடையிடை பெறச் செய்துயாத்த தொழிலையுடைய.

மின்னுப்போற் கோதையெனவியையும்..................

௫௪. ஒளிர்திகழ், வினைத்தொகையடுக்கு.

௫௬. அக்கோதை கதுப்போடசைய.

௫௭ - ௮. மாணிக்கத்தையொக்கச்சிவந்த... .......கள்ளை நுகர்ந்த மகிழ்ச்சி தடுப்பப் பசுமையையுடைய துகிலுடை நெகிழ,

௫௭ - ௬௩. கள்ளுணா...........ராக்க நுடங்குவாளாய்த் துடிச்சீரின் கண்ணே மூலைக்கணணிந்த முத்தாரமசைய ஆடுவாளது அழகு, வாடையா லுளரப்பட்டு ஆடையசையவும் அணியசையவும் அசையுங் கொம்பருண்டாயின் அதனழகையொக்கும்.

௫௯. ஆங்கு - அசை.

---

* பரிபாடல், அ: ௧௨அ - ௩௦.

வாளி புரள்பவை போலுந் துடிச்சீர்க்குத்
தோளூம் பெயர்ப்பவள் கண்
மாறம ரட்டவை மறவேல் பெயர்ப்பவை
யாறிரு தோளவை யறுமுகம் விரித்தவை
நன்றம ராயமோ டொருங்குநின் னடியுறை
[1]யின்றுபோ லியைகெனப் பரவுது
மொன்னார்த் தேய்த்த செல்வநிற் றொழுதே.

கடவுள் வாழ்த்து.

நல்லச்சுதனார்பாட்டு.

கண்ணகனாரிசை.

பண் காந்தாரம்.

---

௬௪ - ௫. சீர்க்கு இசையத் தோளைப் பெயர்ப்பவள் கண் அம்பு புடை பெயர்வன போலும்,

என்றிவ்வாற்றான் மலைச்சிறப்புக்கூறி மேல்வாழ்த்தி முடிக்கின்றார்:—

௬௬, மாற்றாரை அமரின்கட்கொன்ற படையை;

௬௮ - ௭0. எமக்கு விரும்பின சுற்றத்தோடுகூடி நின் அடிக்கண் உறைதல் இன்றுபோல என்றும் இயைகவென்று பரவுதும். (உக)

---

(பி - ம்.)— 1 இன்றுபொலிகென.

# இருபத்திரண்டாம் பாடல்.

## வையை.

ஒளிறுவாட் பொருப்ப னுடல்சமத் திறுத்த
களிறு நிரைத் தவைபோற் கொண்மூ நெரிதர
*வரசுபடக் கடந்த வானுச் சீற்றத்தவன்
† முரசதிர் பவைபோன் முழங்கிடி பயிற்றி
யொடுங்கா ருடன்றவன் றானை வில்விசை
‡ விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறூஉக்
கண்ணொளி §ரெஃகிற் கடிய மின்னியவன்
வண்மைபோல் வானம் பொழிந்தநீர் மண்மிசை
யானுது வந்து தொகுபீண்டி மற்றவன்
றானையி னாழி.........தாவூக் கத்திற்
போன நிலமெல்லாம் போரார் வயல்புகுத
........................நீக்கி படு................
கான மலைத்தரை கொனறு மணல பினாறி
வான மலைத்த...வ.....................
......லைத்தவ மணமுர செறிதரத்
தானைத் தலைத்தலை வந்துமைந் துற்றுப்
பொறிவி யாற்றுறி துவர்புகை சாந்த
மெறிவன ||வெக்குவ ¶வீரணிக் கேற்ற

(இருபத்திரண்டாம் பாடலுரை.)

* * * *

கஅ - கூ. ".....யாநறவு.

---

* "அரசுபட." (மதுரை, கஉஅ.)

† "கைவண் செழிய, ஞலங் காவாத் தமர்கடந் துயர்த்த, வேலினும் பல்லூர் மின்னி முரசென, மாயிரு விசும்பிற் கடியிடி பயிற்றி" (அகநா. கஎ௫) ; "நிடதநா டளிக்கு, மன்னர் மன்னவன் மண்டமர் கடந்தவொள் வேலின், மின்னி யாங்கவன் முரசென விண்ணிடை யதிர்ந்து" (நைடதம். நாட்டு. உ.)

‡ "பெயலுறழக் கணைசிதறி" (மதுரை. கஅ௩.)

§ "செவ்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி" (ஐந்திணைஐம்பது, க.)

|| எக்குதல் : பரிபாடல், கஎ : ௪௫.

¶ ஈரணி : ஷை. ௬ : உ௮ ; எ : ௩க.

நறவணி பூந்துகி னன்பல வேந்திப்
பிறதொழின...ம் பின்பின் ருெடரச்
செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணிய
ரீரமை வெட்சி-யிதழ்புனை கோதையர்
தாரார் முடியர் தகைகெழு மார்பினர்
மாவுங் களிறு மணியணி வேசரி
காவு நிறையக் கரைநெரி பீண்டி
வேலாற்று மொய்ம்பனின் விரைமல ரம்பிஞேண்
போலாற்று முன்பிற் புனைகழன் மைந்தரொடு
தாரணி மைந்தர் தவப்பயன் சான்மெனக்
காரணி கூந்தல் கயற்கட் கவிரிதழ்
வாரணி கொம்மை வகையமை மேகலை
யேரணி யிலங்கெயிற் றின்னகை யவர்
சீரணி வையைக்கணிகொல்லோ வையைத
னீரணி நீத்த மிவர்க்கணி கொல்லெனத்
தேருநர் தேருங்காற் றேர்தற் கரிதுகாண்

கசு. அணி - ஆபரணம்......

உ0. பின்போ பின்னேதொடர முற்பட்டு.

உக - உ. மகளிர், செறிந்த தொடைத்தொழிலாற்பொலிந்த.......... மாலையராய் வாடாமையமைந்த ..............சக...............கோதையராய்.

உ௩. மைந்தர், தாரார்ந்த முடியராய்ச் சுற்றிய மாலை பொருந்திய மார்பினராய்.

உச. வேசரி - கோவேறுகழுதை.

உ௫. நெரிய ஈண்டி.............. .....காவின்கணிறைய.

உசு - அ. வேற்போரைச் செய்யும் மொய்ம்பினையுடையோனாகிய முருகனைப்போல ஆற்றலொடுகூடிய வலியினையும் புனைகழலையுமுடைய மைந்தரும் விரைமலரம்பினேனாகிய காமனைப்போலத் தாரையும் அழகினையுமுடைய *மைந்தருஞ்செய்த தவத்துப்பயன் பெரிதென்று கண்டார் கூற...

உ௯. கவிர் - முருக்கு,

௩0. கொம்மை - இளமுலை. வகைவகையாகக் கோத்தமேகலை.

*...சான்மென (உ௯) என்னும் வினையெச்சம்...இனிய நகையினையும் (௩க) உடையவென இரண்டாவதனொடு விரிந்த பெயரெச்ச வினைகொண்டது.

* "அருந்தவ மாற்றியார் நுகர்ச்சிபோ லணிகொள" (கலி. ௩0).

டீரமும் வையையுஞ் சேர்கின்ற கண்கவின்
மண்கணை முழவி னின்க ணிமிழ்விற்
கெதிர்வ பொருவி......மேறுமா றிமிழ்ப்பக்
கவர்தொடை நல்யா ழிமிழக் காவிற்
*புகர்வரி வண்டினம் பூஞ்சினை யிமிர
வூதுசீர்த் தீங்குழ லியம்ப மலர்மிசைத்
தாதூது தும்பி தவிர்பல வியம்ப
......துடிச்சீர் நடத்த வளிநடன்
மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க
வாங்கவை தத்தந் தொழின்மாறு கொள்ளுந்
தீம்புனல் வையைத் †திருமருத முன்றுறையாற்
கோடுளர் குரற்பொலி யொலிதுய லிருங்கூந்தல்
............................புரைதீர் நெடுமென்
றோடாழ்பு தழைமலர் துவளா வல்லியி

௩௨-௫. அவ்விருதிறத்தாரையும் கரையையும் வையையையுஞ் சேர்கின்ற கட்புலனாகிய அழகு தேர்தற்கு அரிது.

௩௪. காணென்பது முன்னிலையசை.

௩௫-எ. மார்ச்சனையையுடைய முழவின் இனிய கண்ணின் இமிழ்விற்கு எதிரே விண்ணின்கட்டம்மிற்..........................மாறினாகண் உருமேறு மாறாய்முழங்க.

௩௮. கவர்தொடை - விரும்பப்படும் பாலைக்கோவை.

௩௯. பூக்களையுடைய சினைக்கண்ணே இமிர.

தாளத்தி..............னமகளிரா..................நத.

௪௨. வளியாகியநடன்.

இவ்வாற்றான் ஆண்டுள்ள...... ..............ஞான்றேடொன்று மாறு கொள்ளுநதி.....................

௪௬. கொத்துக்களாற் பொலிந்து தழைத்து அசைகின்ற கரிய கூந்தலையுடைய.

௪எ-அ. பொருந்திய விறை......தோளிற்றாழ்ந்து தழையும்..........
...கொடி.....................

* சீரிடமென்பது வாய்த்த இடமென இறந்தகால வினைத்தொகையாமெனப்பொருள் கூறி "புகர்வரிவண்டு" என்னும் இப்பகுதியை எடுத்துக்காட்டிப் புகர்த்த வரிவண்டெனப் பொருளும் எழுதியிருக்கின்றனர், **திருக்குறள், நுண்பொருண்மாலை**, அ௨க; (செந்தமிழ் தொகுதி - எ; பக்கம், கூ௪க.)        † **பரிபாடல்**, எ: அ௩; கக: ௩0.

மூலமும் உரையும் தொடர்ச்சியாக இருந்த கையெழுத்துப் பிரதிகளிற் காணப்படாமல் பண்டையுரையாசிரியர்களாற் காட்டப்பட்ட மேற்கோள்களிலிருந்தும் புறத்திரட்டிலிருந்தும் தெரிந்த **பரிபாடல்கள்.**

## திருமால்.

*வானா ரெழிலி [1]மழைவள நந்தத்
தேனார் சிமைய மலையி னிழிதந்து
† நான்மாடக் கூட லெதிர்கொள்ள வானா
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
‡ **இருந்தையூ** ரமர்ந்த செல்வநின்
றிருந்தடி தலையுறப் பரவுதும் [2]தொழுது (இது தரவு.)
ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழம்
பிணிநெகிழ் பிண்டி [3]நிவந்துசேர் போங்கி
மணிநிறங் கொண்ட மலை
ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
[4] வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருக்குங் [5]கயம்
ஒருசார், [6]சாறுகொ ளோதத் திசையொடு மாறுற்
றுழவி னோதை பயின்றறி விழந்து

---

* இப்பாடல், **தொல்காப்பியம்** செய்யுளியல், சூ. கஉக - பேராசிரியர், நச்சினார்க்கினியருரையிற்கண்டது.

† "நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்" (கலி. ௯உ) என்பதும், 'நான்கு மாடம் கூடலின் நான்மாடக் கூடலென்றாயிற்று; அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; இனிக் கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்றுமாம்' என்னும் அதன் **விசேட** வுரையும், "கன்னிதிரு மால்காளி யீசன்காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" (திருவால. பயன் முதலியன.) என்பனவும் அறியத்தக்கன.

‡ இருந்தையூர், ஸ்ரீ இருந்தவள முடையார் கோயிலென்ப; (சில; கஅ: ௬. அரும்பதவுரை); சங்கப்புலவர்களின் பெயர்களுள், இவ்வூரை அடுத்த பெயர்களாக இருந்தையூர்க்கருங்கோழி மோசியார், இருந்தையூர்க் கொற்றம் புலவனென இரண்டுபெயர்கள் காணப்படுகின்றன.

**(பி - ம்.)**— [1]மழைவளந்தந்த. [2]தொழுதே. [3]சிவந்து. [4]வண்டினவரி. [5]கயல். [6]கோறுகளோதத்திரையென.

[1] திரிநரு மார்த்து நடுநரு மீண்டித்
திருநயத் தக்க வயல்
ஒருசார், *அறத்தொடு வேதம் [2]புணர்தவ முற்றி
† விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா வந்தண ரீண்டி
யிறத்திற் [3]றிரியா பதி

(இவை நான்கும் கோச்சகம்.)

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப வுடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களம ருழவர் கடிமறுகு பிறசார்
[4] ஆங்க, அனையவை நல்ல நனிகூடு மின்ப
மியல்கொள நண்ணி யவை

(இது கொண்டுநிலை.)

வண்டு பொரேரென வெழ
வண்டு பொரேரென வெழுங்
கடிப்புகு வேரிக் [5]கதவமிற் றேட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
[6] மிளிர்மின் வாய்ந்த விளங்கொளி [7]நுதலா
ரூர்களிற் றன்ன [8]செம்ம லோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யொதுங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோ டளவிய புகழணிந் தோரு
நலத்தோ டளவிய ‡நாணணிந் தோரும்

---

* பதிற்றுப்பத்து, ௨௪ : ௬ - ௮ ; பு - வெ. வாகை. ௬.

† "மண்ணுணப் புகழ்பரப்பியும்" (புறநா. ௧௭௬).

‡ "எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண்மேற் சேர்ந்தெழினு, மஞ்ஞான்று கண்டேம்போ னாணுதுமால்" (நாலடி. கற்புடை. ௫.)

(பி - ம்.)— 1 திரிதருமாரித்துநகரு. 2 புரைதவம். 3 திரியாப்பதி. 4 ஆங்கு. 5 கதர்வயிற். 6 மின்மினிவாய்ந்த. 7 நுதலாளூர். 8 செம்மலோருமவ்வாய்.

*விடையோ டிகலிய விறனடை யோரு
நடைமட [1]மேவிய நாணணிந் தோருந்
† [2] கடனிரை திரையிற் கருநரை யோருஞ்
[3] ‡ சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரு
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
யிடையொழி வின்றி யடியுறையா ரீண்டி
விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் [4]புரையு
மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்
வரைகெழு செல்வ னகர்
வண்டொடு தும்பியும் வண்டொடை யாழார்ப்ப
விண்ட [5]கடகரி மேகமொ டதிரத்
தண்டா வருவியோ டிருமுழ வார்ப்ப
வரியுண்ட கண்ணாரோ டாடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ [6]டாடலுந் தோன்றக்
கூடு நறவொடு [7]காமமகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவு மிவைபோல் வனவு
மனையவை யெல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர்

(இவையும் கோச்சகம்.)

மணிமரு டைகவகை [8]நெறிசெறி யொலிபொலி
யவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் [9]துளையிணை தெளியொளி [10]திகழ்ஞெகிழ்
தெரியரி மதுமகிழ் பரிமலர் மகிழுண்கண் வாணுதலோர்
§ மணிமயிற் றொழிலெழி [11]லிகன்மலி திகழ்பிறி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ

---

* "செல்லு மழவிடைபோற் செம்மாந்து" (நளவெண். சுயம். ௧௫௬.)

† பரிபாடல். ௧௦ : ௨௨.

‡ "நிலவு நூற்றன்ன பித்தை நெடுந்தவர்" (கூர்ம. அனுக்கிர. ௩௧)

§ "நடைமயிலே" என்பதற்கு 'மணிமயிற்றொழில்' என்பது மேற்கோள்; (பிரயோக. சூ. ௪௨ - உரை.)

(பி - ம்.)— [1]மேவுநாணிழந்தோரும். [2]கடனுரை. [3]தொடர்மதி. [4]புரைதரவிரு. [5]கடதடமேகம் [6]ஆறுந்தோன்ற. [7]காமமுகிழ். [8]நெறிசெறி மொலிபொலி. [9]துணையிணை. [10]திகழ்பு. [11]இகலிமலி திகழ்விழ.

டணிமிக வந்திறைஞ்ச [1]வல்லிகப்பப் பிணிநீங்க
நல்லவை யெல்லா [2]மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்

(இது முடுகியல்.)

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
[3]திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச் [4]சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு
மமுது கடைய விருவயி ஞாணாகி
மிகாஅ [5]விருவட மாழியான் வாங்க
வுகாஅ வலியி * [6]னொருதோழங் கால
மறாஅ தணிந்தாருந் தாம்
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅவெதிர் பூண்டாருந் தாம்
மணிபுரை மா †மலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாஅம் பணிவில்சீர்ச்
செல்விடைப் பாகன் றிரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி ‡யிமயவி ஞாணாகித்
தொல்புகழ் தந்தாருந் தாம்

(இவையும் கோச்சகம்.)

§ [7]அணங்குடை யருந்தலை யாயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுது
|| [8]மெல்லெம் பிரியற்கெஞ் சுற்றமொ டொருங்கே.

(என்பது ஆசிரியச் சுரிதகம்.)

---

* தோழம் - ஒருபேரெண் ; "உலப்பற் கரிய மந்தை யுடையவொரு தோழந்தேவர், விண்ணிற் பொலிய வமுத மளித்த விடைசேர் கொடியண்ணல்" (திருப்புறவம், ஞான. தே.)

† "மலைநாறிய வியன்ஞாலத்து." (மதுரை. ௩.)

‡ பரிபாடல், ௫ : ௨௪ - ௨௫ ; கலி. ௩௮.

§ ஷை, ௧ : ௧.

|| இவ்வடி, தொல். பெயர். ௩ - ௩௨ - ந ; செய். ௩. ௧௭௧ - பேர். மேற்கோள்.

(பி - ம்.)— [1]வல்லலங்கட்ட. [2]மேய்தரும். [3]திகழ்மெது. [4]சிரத்தொற்றி. [5]விருபடம். [6]தோளங்கால. [7]அன்னவணங்குடை. [8]மலைமாம்பிரியற்க வெஞ்சுற்றம்.

## வையை.

---

*மாநிலந் தோன்றாமை மலி [1]பெய றலைஇ
யேமநீ ரெழில்வான மிகுத்தரும் பொழுதின்
றுகணீண் மணிவரை நறுமலர் பலவிரைஇக்
காமரு வையை கடுகின்றே கூடல்
நீரணி கொண்டன்று வையை யெனவிரும்பித்
தாரணி கொண்ட வுவகை தலைக்கூடி
[2] யூரணி கோல மொருவ ரொருவரிற்
சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு
நீரணி கொண்ட நிறையணி யங்காடி
[3] யேரணி கொண்டா [4]ரியல்
கைபுனை தாரினர் கண்ணிய
ரையெனு மாவிய ராடையர்
† நெய்யணி கூந்தலர் பித்தையர்
மெய்யணி யானை [5]மிசையரா யொய்யெனத
தங்காச் சிறப்பிற் றளிரியலார் [6]செல்லப்
பொங்கு புரவிப்புடைப் போவோரும் [7]பொங்குசீர்
வையமுந் தேரு [8]மமைப்போரு மெவ்வாயும்
பொய்யாம்[9]போ யென்றைப் புடைகூட்டிப்போவார்
மெய்யாப்பு மெய்யா ரூடுவார் வையத்துக்
கூடுவா ரூட லொழிப்பா ருணர்குவா
ராடுவார் பாடுவா ரார்ப்பார் நகுவார்நக்
கோடுவா ரோடித் தளர்வார்போ யுற்றவரைத்
தேடுவா ரூர்க்குத் திரிவா ரிலராகிக்
கற்றாருங் கல்லா தவருங் கயவரும்

---

* இப்பாடல், தொல்காப்பியம், செய்யுளியல், சூ. 118-இளம்பூரணருரையிற்கண்டது. இதன் முதலடியின் பொருளும், "நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலரே" (குறுந். ௩௫௫) என்பதன்பொருளும் ஒத்துள்ளன.

† இப்பாட்டின் அ௰ - ஆம் அடியைப் பார்க்க.

(பி - ம்.)— 1பெயணிலைஇ. 2வாரணி. 3பேரணி. 4இகல். 5மிசைக்கொண்டொய்யென. 6சொல்லப். 7பொங்குநீர். 8அமைவோருமெய்வாயும். 9 பொய்யன்றைப்புனைபடை கூட்டிப் போவார்மெய்.

பெற்ருரும் *பெற்ருற் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் ருனும் பொலம்புரிசைக் கூடலு
முற்றின்று வையைத் துறை
துறையாடுங் காதலர் தோள்புணை யாக
[1] மறையாடு வாரை யறியார் மயக்கிப்
பிறையேர் நுதலிய ரெல்லாருந் தம்மு
ணிகழு நிகழ்ச்சி யெம்பாலென் ருங்கே
யிகல்பல செல்வம் விளைத்தவட்கண் டிப்பா
[2] லகலல்கும் வையைத் துறை
காதலான் மார்பிற் கமழ்தார் புனல்வாங்கி
யேதிலாள் கூந்த லிடைக்கண்டு மற்றது
தாதாவென் ருளுக்குத் தானே [3]புறன்றந்து
வேய்தந்த தென்னை விளைந்தமை மற்றது
நோதலே [4]செய்யே னுணங்கிழையா யிச்செவ்வி
போதலுண் டாங்கொ லறிந்து புனல் [5]புணர்த்த
தோஒ பெரிதும் வியப்பு
கயத்தக்க பூப்பெய்த காமக் கிழமை
நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடு
[6] முயக்குக்குச் [7]செவ்வி முலையு முயக்கத்து
[8] நீரு மவட்குத் துணைக் [9]கண்ணி நீர்விட்டோய்
நீயு மவட்குத் துணை
பணிவி லுயர்சிறப்பிற் பஞ்சவன் கூடன்
மணியெழின் மாமேனி முத்த முறுவ
லணிபவளச் செவ்வா யறங்காவற் [10]பெண்டிர்
மணியணிந்த [11]தம்முரிமை மைந்தரோ டாடித்
தணிவின்று வையைப் புனல்
புனலூடு போவதோர் பூமாலை கொண்டை
யெனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்ட
புனலூடு [12]நாடறியப் பூமாலை யப்பி
னிணைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங் கனல்புடன்

---

* நான்மணி. உக ; திருக்குறள், ருஅ.

(பி - ம்.)— [1]மறைபாடுவாரை. [2]அகலல்குற்பையேய்த்தது. [3]புனறந்து. [4]செய்தே. [5]புணர்த்ததொன்றே. [6]முயக்கக்கு. [7]செல்வல். [8]நீரும். [9]கண்ணினீர். [10]பெணடார். [11]தமமுனிமை. [12]நாடியறியப்.

கூடாமு னூடல் கொடியதிறங் கூடினு
னூடாளோ [1]வூர்த்தலர்வந் தூர்ந்து
எனவாங்கு
ஈப்பா *யடுநறாக் கொண்டதிவ் யாறெனப்
† பார்ப்பா ரொழிந்தார் படிவு
மைந்தர் மகளிர் மணவிரை [2]தூவிற்றென்
றந்தணர் [3]தோயல ராறு
வையைதே மேவ வழுவழுப் [4]புற்றென
வையர்வாய் பூசுறு ராறு
[விரைபிரை விரைநுரை கரையழி பிழியூரவூர்தரும்புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை நிரைநிரை நீர் [தருநுரை
நுரையுடன் மதகுதொ றிழிதரு புனல் கரைபுரளிய [செலுமறிகடல்
புகுமள [5]வளவியலிசை சிறைதணி வின்று வெள்ளமிகை
வரைபலபுரை யுயர்கயிறணி பயிறொழின்
மணியணி யானைமிசை மைந்தரு மடவாரு
நிரைநிரை குழீஇயின ருடன்சென்று]
குருமணி யானை யியறேர்ப் பொருநன்
‡ திருமருத முன்றுறை முற்றங் குறுகித்
தெரிமருதம் பாடுப பிணிகொள்யாழ்ப் பாணர்
பாடிப் பாடிப் பாய்புன
லாடி யாடி யருளியவ
ரூடி யூடி யுணர்த்தப் புகன்று
கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடிச் சிதைபு சிதைபு
சூடிச் [6]சூடித் தொழுது தொழுது
[7] மழூபொடு நின்ற மலிபுனல் வையை

* அடுநறா : பரிபாடல், ௨௧ : ௨௦.

† ஷை ௬ : ௪௪ - ௫.

‡ ஷை ௭ : ௮௩ ; ௧௧ : ௩௦ ; ௨௨ ; ௪௫.

(பி - ம்.)— [1]வூர்த்தலர் தூரந்து. [2]பூசிற்றென்று. [3]தூவலராறு. [4]உற்றன்றையர். [5]வளவயலிற்சிறை. [6]சூடிக்கைதொழுது. [7]மிழுதொடு சென்ற.

பெ[illegible] [illegible]ரு மைந்தரு மாடி
யிமிழ்வது [1]போன்றதிந் நீர்குணக்குச் சான்றீர்
முழுவது மிச்சிலா வுண்டு
சாந்துங் கமழ்தாருங் கோதையுஞ் சுண்ணமுங்
கூந்தலும் பித்தையுஞ் சோர்ந்தன பூவினு மல்லாற்
சிறிதானு நீர்நிறந் தோன்றாதிவ் வையையாறு
மழைநீ ரறுகுளத்து வாய்பூசி யாடுங்
கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்
வழிநீர் விழுநீர வன்று வையை
வெருவரு கொல்யானை வீங்குதோண் மாற
னுருகெழுகூட லவரோடு வையை
வருபுன லாடிய தன்மை பொருவுங்கா
லிருமுந்நீர் வையம் [2]படித்தென்னை யானூர்க்
கொருநிலையு மாற்ற வியையா வருமரபி
னந்தர வாணியாற் றாயிரங் கண்ணினோ
னிந்திர னாடுந் தகைத்து.

---

(பி - ம்.)— [1]போன்றவினை னிகானகுணக்குச். [2]பிடித்து.

மண்ணூர்ந் [1]திசைக்கு முழவொடு கொண்டதோள்
[2] கண்ணொ துடன்வீழுங் காரிகை கண்டோர்க்குத்
தம்மொடு நிற்குமோ நெஞ்சு.

என்பது, பரிபாடல்; வெண்பாவுறுப்பான் வந்ததற்கு மேற்கோள்; (தொல். செய். சூ. கஉ௦ - பேர். ந. உரை.)

---

## வையை.

---

செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
[3] மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு.

என்பது, பரிபாடல்; வெள்ளைச் சுரிதகத்தானிற்றதற்கு மேற்கோள்; (தொல். செய். சூ. கஉக - பேர். ந. உரை.) இப்பகுதி, "அறவோருள்ளா ரரு மறை காப்ப" என்னும் பரிபாடலின் இறுதியென்று தெரிகின்றது.

---

முன்புற் றறியா முதற்புணர்ச்சி மொய்குழலை
யின்புற் றணிந்த வியலணியும் வன்பணியு
நாணேணுந் தொல்லை யணியென்ன நன்னுதலை
...............னந்து.

என்பது அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்ததற்கு விதியாகக் காட்டப்பட்டுள்ளது.

(நாற்கவி. சூ. கஉசு - உரை.)

(பி - ம்.)— [1]இசைத்த. [2]கண்ணேடெனவிழூஉம். [3]அறுமுறை

## மதுரை.

---

க *உலக மொரு [1]நிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலாற் றூக்க—வுலகனைத்துந்
தூன்வாட வாடாத தன்மைத்தே தென்னவ
ஞண்மாடக் கூட னகர்.

உ †மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ் [2]சீரூர் பூவி
னிதழகத் தனைய தெருவ மிதழகத்
தரும்பொகுட் [3]டனைத்தே யண்ணல் கோயில்
தாதி [4]னனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோ [5]ஞவினுட் பிறந்த

---

* "உலகு மழிசையு முள்ளுணர்ந்து தம்மிற், புலவர் புகழ்க்கோலாற் றூக்க - உலகுதனை, வைத்தெடுத்த பக்கத்து மாசீர் மழிசையே, வைத்தெடுத்த பக்கம் வலிது," (திருச்சந்தவிருத்தம், தனியன்); "மலரு மித்திரு நாட்டியல் வாணர்சொற் கோலா, லுலக னைத்தையு நிறுப்பமுன் வாடிடா தோங்கு, மலகில் வண்புக ழுடையது மதுரையாங் கதனை, யிலக யான்சிறி தறிந்தவா றியம்புவல் கேண்மின்" (திருவால. திருநகர. க.); "கைத்தலை நான் கிரண்டுடைய மலர்க்கடவுண் மேலொருநாட் கயிலையாதி, யெத்தலமு மொருதுலையிட் டித்தலமு மொருதுலையிட் டிரண்டுந்தூக்க, வுத்தமமாந் திருவால வாய்மிகவுங் கனத்ததுகண் டுலகின் மேலா, வைத்ததல மிது வென்று விதன்பெருமை யாவரே வழுத்தற் பாலார்" (திருவிளை. தலவிசேட. உ௦); "கச்சிமா நகரோர் தட்டுங் கடவுள ருலகோர் தட்டும், வச்சுமுன் னயனூர் தூக்க மற்றது மீது செல்ல, நிச்சய முறுகித் தாழ்ந்து நிலமிசை விழுமிவ் வூரை, யிச்சகத் தூர்க ளோடு மெண்ணுதன் மடமைப் பாற்றே," (காஞ்சி. திருநகர். க) என்பவை இதன் கருத்தைத் தழுவிவந்தன.

"உலக மொரு நிறையா" என்பது முதலிய இவ்வுறுப்புக்களாறும், புறத்திரட்டில், நகரென்னும் பகுதியிற் காணப்பெறுகின்றன.

† "நீனிற வுருவி னெடியோன் கொப்பூழ், நான்முக வொருவற் பயந்த பல்விதழ்த், தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச், சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பின்" (பெரும்பாண். ௪௦௨ - ௫.)

(பி - ம்.)— [1]துலையாத்தானோர் துலையா. [2]சீறூர். [3]அனையதே. [4]அனைய. [5]நாவினிற்.

*நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப
ஏம வின்றுயி லெழுத லல்லதை
வாழிய வஞ்சியுங் கோழியும் போலக்
கோழியி னெழாதெம் [1]பேரூர் துயிலே.

௩ தண்டமிழ் வேலித் தமிழ்நாட் டகமெல்லா
நின்று நிலைஇப் [†]புகழ்பூத்த லல்லது
குன்றுத லுண்டோ மதுரை கொடித்தேரான்
குன்றமுண் டாகு மளவு.

௪ செய்யாட் கிழைத்த திலகம்போற் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப் புகழ்பூத்த லல்லது
பொய்யாத லுண்டோ மதுரை புனைதேரான்
வையையுண் டாகு மளவு

௫ கார்த்திகை காதிற் கனமகர குண்டலம்போற்
சீர்த்து விளங்கித் திருப்பூத்த லல்லது
கோத்தையுண் டாமோ மதுரை கொடித்தேரான்
வார்த்தையுண் டாகு மளவு.

௬ ஈவாரைக் கொண்டாடி யேற்பாரைப் பார்த்துவக்குஞ்
சேய்மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்
வாழ்வாரே வாழ்வா ரெனப்படுவார் மற்றையார்
போவாரார் புத்தே ளுலகு.

---

* "ஓத லந்தணர் வேதம்பாட" (மதுரை. ௬௫௬), "கோதி லாதசெஞ் ஞூட்டுடை வாரணங் ௯௰, வோத ஞாலத்து மற்றைய தலத்துளார் விழிப்ப, ரீத லேற்றவோ டறுதொழி லிருபிறப் பாளர், வேத நாதத்தின் விழிப்பதவ் வியன்னகர் மாக்கள்" (திருவாப்பனூர்ப்புராணம், ஆப்பனூர்ச்சருக்கம், ௯.)

† "மிக்குப் புகழெய்தியபெரும் பெயர் மதுரை" (மதுரை. ௬௯௯); "...ல்கில் வண்புக ழுடையது மதுரை" (திருவால. திருநகர. க.)

(பி - ம்.)— [1]பேரிருந் துயிலே.

# அரும்பத முதலியவற்றின் அகராதி.



[எண் - பக்க எண்.]

ஸ்ரீமீனாட்சிசுந்தரேசர் துணை.

## பரிபாடற்செய்யுள் முதற்குறிப்பகராதி.



## இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூற்பெயர்களின் முதற்குறிப்பகராதி.



அகநா - அகநானூறு.
அறநெறி - அறநெறிச்சாரம்.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இலிங்க - இலிங்கபுராணம்.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இள, இளம் - இளம்பூரணருரை.
இறை - இறையனாரகப்பொருளுரை.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கலி, கலித் - கலித்தொகை.
காஞ்சி - காஞ்சிப்புராணம்.
குறள் - திருக்குறள்
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவகசிந்தாமணி.
சுந்தர - சுந்தரமூர்த்திநாயனார்.
சூளா - சூளாமணி.
ஞான - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.
திணைமா - திணைமாலைநூற்றைம்பது.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருவால, திருவாலவாய் - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
திவ் - திவ்யப்ரபந்தம்.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியருரை.
நளவெண் - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நன் - விருத்தி - நன்னூல்விருத்தியுரை.
நாலடி - நாலடியார்.
நாற்கவி - நாற்கவிராயநம்பியகப்பொருள்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நெடுநல் - நெடுநல்வாடை.
பட் - பட்டினப்பாலை.
பதிற் - பதிற்றுப்பத்து.
பரி - பரிபாடல், பரிமேலழகருரை.
பிரயோக - பிரயோகவிவேகம்.
புறநா - புறநானூறு.
பு. வெ - புறப்பொருள்வெண்பாமாலை.
பெரிய - பெரியதிருமொழி.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை.
பேர் - பேராசிரியருரை.
மணி - மணிமேகலை.
மது, மதுரை - மதுரைக்காஞ்சி.
மயிலேறும் - மயிலேறும்பெருமாள்பிள்ளையுரை.
மயிலை - மயிலைநாதருரை.
மலைபடு - மலைபடுகடாம்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை - முல்லைப்பாட்டு.
யசோதர - யசோதரகாவியம்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை.
யா. வி - யாப்பருங்கலவிருத்தி.
வி, வில்லி - வில்லிபுத்தூரார்.



## உரைச்சிறப்புப்பாயிரம்.

### நிலைமண்டில ஆசிரியப்பா.

* கண்ணுதற் கடவு ளண்ணலங் குறுமுனி
முனைவேள் முருக னெனவிவர் முதலிய
திருந்துமொழிப் புலவ ரருந்தமி ழாய்ந்த
சங்க மென்னுந் துங்கமலி கடலு
ளரிதி னெழுந்த பரிபாட் டமுத
மரசுநிலை திரீஇய வளப்பருங் காலங்
கோதில் சொன்மக ளோதகக் கிடத்தலிற்
பாடிய சான்றவர் பீடுநன் குணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலிற்
றந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பு
மெழுதினர் பிழைப்பு மெழுத்துரு வொக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பு
மொருங்குடன் கிடந்த வொவ்வாப் பாடந்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலிற்
சிற்றறி வினர்க்குந் தெற்றெனத் தோன்ற
மதியின் றகைப்பு விதியுளி யகற்றி
யெல்லையில் சிறப்பிற் றொல்லோர் பாடிய
வணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய வுரையின் விளங்கக் காட்டின
னீணிலங் கடந்தோன் றாடொழு மாயிற்
பரிமே லழக னுரிமையி னுணர்ந்தே.

### நேரிசைவெண்பா.

விரும்பி யருணீல வெற்பிமயக் குன்றின்
வரும்பரிசு புள்ளூரு மாலே—சுரும்பு
வரிபாட லின்சீர் வளர்துளவத் தோளாய்
பரிபாட லின்சீர்ப் பயன்.

---

* செந்தமிழ், முதற்றொகுதி பக்கம் [illegible] [illegible].